# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Wednesday, the 10th September 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Robbery at Kodambakkam Railway Station*

* 2 *S.N.Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Electric Train at Kodambakkam Railway Station was stopped on 8th September 1958 by dacoits and whether the dacoits committed robbery of money, jewels and other valuables from the passengers in the train;

(*b*) the circumstances and the manner under which the above dacoity was committed;

(*c*) how many were injured;

(*d*) how many were passengers in the train and how many were railway employees among them;

(*e*) how many passengers were in the train when the dacoits stopped the electric train and committed dacoity;

(*f*) what is the estimated cost of the jewels and other valuables which were robbed by the dacoits;

(*g*) what is the nature of relief given to the injured by the Government; and

(*h*) what action the Police have taken on this matter?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) to (*h*) The case is under investigation. The facts are as follows :—

On 8th September 1958 at about 1-15 p.m., the Assistant Station Master, Sri Ramanujam Nair was on duty at the Kodambakkam Railway Station marking parcels. While he was thus occupied, a passenger entered the Assistant Station Master's room and reported to him that his pocket had been picked and Rs. 30 removed while he was detraining from a down train. The Assistant Station Master asked him for a written complaint for passing on to the Police and took up the phone at the same time to inform the Railway Police. At that time, three young men, aged below 30 years, suddenly entered the room. Two of them approached the table and the third took up position by the door. One of the two near the table addressed the Assistant Station Master " So, you are going to phone to the Police—Are you? " and whipping out a knife from under his shirt cut the Assistant Station Master twice on his right forearm. The second man also took out a knife and

cut the telephone wire. Just then electric train No. 98 arrived and the three persons in the room threatened the Assistant Station-master saying that he should not go to the platform to contact the Guard or Driver. As the train left the station, the Assistant Station Master from his room showed his injured arm to the Guard of the departing train and asked him to report the incident to the Railway Control and the Police. Three other persons with lathies in their hands were also seen on the platform intimidating the passengers who waited for the train. As soon as the train left, the Assistant Station Master saw the three persons in his room rushing out and jumping over the eastern wall of the railway premises and making good their escape.

There are no reports that these rowdies had relieved any of the passengers of train No. 98 of their money. The Assistant Station-master also reports that two passengers have stated that they have received injuries in the confusion on the platform. Enquiries made in the neighbouring clinics in Kodambakkam show that one person was attended to for a simple hit-wound on his head.

An official message regarding this incident received from the Southern Railway shows that the train was not detained. The Press report that the driver of the train had been pulled out of his cabin and man-handled is not correct.

'93' Police arrived at the scene at about 1-45 p.m. The crowd who had caught a person running away from the station handed him over to the '93' Police. His name is Anandan alias Paramanandam, a K.D. of Egmore, with seven previous convictions. He has given information that one Adimoolam and one Selvaraj, rowdies of Chetput are involved in this incident.

* 3 *S.N.Q.*—Sri K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that a daring robbery took place in Kodambakkam railway station on 8th September 1958;

(*b*) how many passengers were assaulted by the miscreants;

(*c*) whether the miscreants used any deadly weapons; and

(*d*) how many were arrested in this connexion?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) *to* (*d*) The attention of the hon. Member is invited to the answer given to Short Notice Question No. 2.

Sri T. T. DANIEL : May I know from the Hon. Minister whether there was any occurrence at Nungambakkam Railway Station before the occurrence at Kodambakkam and whether the Police arrived at the spot soon after the occurrence? May I also know whether the public chased anybody and caught anybody immediately at the spot?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Only now I hear the report about the Nungambakkam incident. I do not have any further particulars besides what I have just now given.

10th September 1958]

SRI K. VINAYAKAM : When Mr. Anandan was arrested he gave the information that two other colleagues of his were involved in the affair. Were those two arrested or are they still at large?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Anandan gave the information only after he was arrested and not when he was arrested. The police are tracing these two persons and others.

SRI A. GOVINDASAMY : ஆயுதம் தாங்கிய திருடர்களைப் போலீசார் பிடித்தார்களா ? அல்லது சந்தேகத்தின்பேரில் யாரையாவது பிடித்தார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பிடிக்கப்பட்டவன் இதற்கு முன்பே கே. டி. யாக ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறான், கன்விக்ஷனும் ஆயிருக்கிறது என்று சொன்னேன். (ஸ்ரீ எ. கோவிந்தசாமி : பேப்பரிலே . . ) பேப்பரிலே போட்டிருப்பதற்கு நான் ஜவாப்தாரியல்ல.

SRI R. KRISHNASAMI NAIDU : இந்த ஆனந்தன் என்பவர் எந்த ஊர்க்காரர் ? அவர் எந்த ஊர்வாசி என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவர்களெல்லாம் சென்னை நகரத்தைச் சேர்ந்தவர்கள்தான்.

SRI M. JAGANNATHAN : Sir, may I know whether the police have investigated the fact that there is an organized gang of robbers doing this kind of daylight robbery or whether this incident is just a sporadic act on the part of local bad characters?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The information that we have so far is that there are rowdies, very bad characters in the City and nothing more than that.

SRI K. VINAYAKAM : What are the steps taken by the Government to prevent such occurrences or tragedies?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, we have been taking all necessary steps. One other step which we are taking is that we do appeal to the non-official public to help and co-operate in chasing the rowdy and unruly elements.

SRI K. SATTANATHA KARAYALAR : நேற்று ஹௌஸ் ப்ரேக்கிங் ஒன்று நடந்தது. அதுவும் இதே ஆட்கள் பட்டப் பகலில் செய்ததாகச் சொல்லப்படுகிறது உண்மையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எந்த இடத்திலே ஹௌஸ் ப்ரேக்கிங் நடந்தது என்பது எனக்குத் தெரியாது. அதுவும் இவர்களே செய்தார்களா என்று இன்வெஸ்டிகேஷன் செய்து முடிவதற்கு முன்னால் சொல்வதற்கில்லை.

SRI A. GOVINDASAMY : இந்தக் கொள்ளைக் கூட்டத்தில் ஐந்தாறு பேர்களுக்கு மேல் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனந்தன், பரமானந்தன் இவ்விரண்டு பேரையும் இன்னொருவரையும் சேர்த்தால் மூன்று பேர் ஆகிறது. பாக்கிப் பேர்களைப் பிடிக்க அரசாங்கம் என்ன முயற்சியில் ஈடுபட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் கொடுத்த தகவலில் ஆறு பேர் என்று குறிப்பிட்டதில் இரண்டு பேருடைய பெயர்கள் வந்திருக்கின்றன. இதைக் கொள்ளைக் கூட்டம் என்றோ, இதுவரைக்கும் காணாத

ஒரு கொள்ளை நடந்தது என்றோ வந்திருக்கும் தகவலிலிருந்துசொல்ல முடியாது. சம்பந்தப்பட்ட எல்லோரையும் பிடிப்பதில்தான் போலீசார் கவனம் செலுத்தி வருகிறார்கள்.

**Sri S. NAGARAJA MONIGAR** : இம்மாதிரி ஆறு, ஏழு தடவை ஜெயிலுக்குப் போய் வருகிறவர்களை அடிக்கடி வெளியில் விட்டு விடுவதால் அவர்கள் இம்மாதிரி குற்றங்களைத் திரும்பத் திரும்பச் செய்வதை நாம் அனுபவித்து வருவதைக் காட்டிலும், அப்படிப்பட்டவர்களையெல்லாம் சீர்திருத்தும் முறையில் ஒரு இடத்தில் பாதுகாப்பில் வைக்க அரசாங்கம் யோசிக்குமா ?

**Mr. SPEAKER** : இது தனிப்பட்ட பிரச்னை என்று நினைக்கிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இப்பொழுதிருக்கும் சட்டத்தின்படிதான் இதெல்லாம் கவனிக்கப்பட்டு வருகிறது.

**Sri M. KALYANASUNDARAM** : இம்மாதிரி ரௌடிக் கும்பல்களுக்குப் போலீஸ் இலாகாவிலுள்ள யாரிடமிருந்தாவது மறைமுகமான ஆதரவு உண்டு என்று சர்க்காருக்கு ஏதாவது புகார் வந்திருக்கிறதா ? அதில் உண்மை இருக்கிறதா என்பதை கனம் அமைச்சர் அவர்கள் விசாரணை செய்வார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அம்மாதிரி ஒன்றும் எனக்கு வரவில்லை. நான் தவறாக யார் மீதும்—போலீஸ் இலாகாவில் உள்ளவர்கள் மீதோ மற்றவர்கள் மீதோ—குறை கூறத் தயாராக இல்லை. அப்படிக் குறை கூறுவது சரியல்ல என்பதையும் உணருகிறேன். கனம் அங்கத்தினர் சொல்வது போலும் இருக்கலாம் ; போலீஸுக்கு அப்பாலுள்ள பொதுமக்களிலிருந்தும் சில பேர் அவர்களுக்கு ஆதரவாக இருக்கின்றவர்களும் இருக்கிறார்கள்.

**Sri A. A. RASHEED** : Were the police dogs used to detect the dacoits still untraced?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : If there is any theft, police dogs might be utilised for tracing the culprits and for tracing the clue. But I do not think, Sir, that the police dogs will be useful for tracing these culprits.

**Sri P. G. MANICKAM** : சென்னை நகரிலே ஒரு பெரிய கொள்ளைக் கூட்டம் இருக்கிறதாகவும், மக்களை ஜாக்கிரதையாக இருக்கும்படியும் எச்சரித்து சில நாட்களுக்கு முன் பத்திரிகையிலே ஒரு விளம்பரம் பிரசுரிக்கப்பட்டிருந்தது. அந்தக் கொள்ளைக் கூட்டத்தாருக்கும் இவர்களுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இம்மாதிரி சம்பவங்கள் எங்கும் நடக்கின்றன. எச்சரிக்கையும் செய்யப்படுகிறது. நான் இரண்டு ஆண்டுகளுக்கு முன் லண்டன் நகரில் இருந்தபோது காலையில் பத்திரிகையைப் பிரிக்கும்போது அதில் பயங்கரமான செய்திகள் வருவதைப் பார்த்திருக்கிறேன். லண்டன் நகரிலும் நடக்கிறது என்பதற்காகச் சொல்கிறேன். ஆனால், நம்முடைய போலீஸார் ரொம்ப கண்காணிப்பாக இருந்து, இதையெல்லாம் தவிர்க்கத்தான் கவனம் செலுத்தவேண்டும். செலுத்திக் கொண்டுதான் வருகிறார்கள். அதற்கு மேலே இப்பொழுது அனுவசியமாக பீதியை உண்டு பண்ணக்கூடிய முறையில் நாம் சொல்வது சரியல்ல.

**Sri K. R. NALLASIVAM** : போலீஸ் ஸ்டேஷன்கள் குறைவாக இருக்கிற கிராமப்புறங்களைக் காட்டிலும் போலீஸ் ஸ்டேஷன்கள் அதிகமாக இருக்கக் கூடிய நகரங்களில் ஏராளமான அளவு திருட்டுகள் நடைபெறுகின்றனவே, காரணம் என்ன என்று கேட்க விரும்புகிறேன்.

10th September 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போலீஸ் ஸ்டேஷன்கள் ஜனத்தொகையின் அளவுக்கு வைக்க முடியாது. குற்றம் செய்கிறவர்கள் எங்கும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களை அடிக்கடி தடுக்க கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI N. R. THIAGARAJAN : அவர்களை விரட்டிப் பிடித்தால் அதனால் ஏதாவது விபரீத விளைவுகள் நேரிட்டு, அதன்காரணமாக இந்தச் சபையில் ஒத்திவைப்புப் பிரேரணையும், இதர நடவடிக்கைகளும் தங்கள் பேரில் எடுக்கப்பட்டு விடுமோ என்று பயந்து கொண்டுதான் போலீஸ்காரர்கள் அவர்களை விரட்டிப் பிடிக்காமல் விட்டுவிட்டார்கள் என்று மக்கள் பேசிக் கொள்வது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போலீசாருக்கு அம்மாதிரி பயம் ஏற்படலாம். அது சாக்காக ஆகாது. அவர்கள் ஜாக்கிரதையுடன் நடந்து கொள்ளத்தான்வேண்டும்.

*Salt.*

* 75-H. *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) மத்திய அரசாங்கத்திலிருந்து உப்பை நிறுத்து விற்க வேண்டுமென்று ஏதேனும் நம் மாநில சர்க்காருக்கு அறிவிப்பு வந்திருக்கிறதா ?

(ஆ) அப்படியானால், அதன் விபரம் என்ன ?

(இ) அரசாங்கம் இதுபற்றி என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

(ஈ) உப்பை நிறுத்து விற்பது சம்பந்தமாய் நம் மாநில சர்க்கார் சட்டம் இயற்றியது எப்போது ?

(உ) அதை எந்த அளவுக்கு அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள் ?

(ஊ) இவ்வளவு கால தாமதத்திற்கு காரணம் என்ன ?

(எ) இவ்வுத்தரவை அமுலுக்குக் கொண்டு வராததால் உப்பின் தரத்தை உயர்த்தத் தடையா யிருப்பது அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The Government of India stated that good quality salt was heavier than inferior quality salt and therefore gave smaller number of measures for the same weight. They added that this encouraged the sale of inferior quality salt frustrating their efforts in the direction of production of good quality salt and requested this Government to introduce the sale of salt by weight.

(*c*) & (*d*) The Government propose to enforce, as an experimental measure, the sale of salt by weight in the Madras City under Section 5 (A) of the Madras Weights and Measures Act, 1948, as amended by Madras Act XXXVI of 1951 and issued a notification in December 1952.

(*e*) The Government did not enforce the notification relating to sale of salt by weight.

(*f*) The Government subsequently considered that there was no particular urgency to enforce the notification and that the enforcement might come into effect along with the change over to Metric system of weights and measures contemplated by the Government of India.

(*g*) Yes, Sir [please refer to answer to clause (*b*) of the question].

[10th September 1958

**Sri A. VEDARATHNAM** : அரசாங்கம் கொண்டுவர இருக்கிற இந்த மெட்ரிக் முறை எப்போது அமுலுக்கு வரும்? உப்பின் தரம் உயர்வதற்கு வழி இல்லாமல் போகாதபடிக்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்க உத்தேசித்திருக்கிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN** : அக்டோபர் மாதத்தில் நான்கு ஜில்லாக்களில் அமுலுக்கு வரும். இந்த உப்பு நல்ல க்வாலிடியா இல்லையா என்பதை நிறையின் மூலம் கண்டு கொள்ளலாம். இதில் 96 சத விகிதம் சோடியம் க்ளோரேட் இருந்தால் நல்ல உப்பு. அதை ஜனங்கள் பார்த்து வாங்குவதன் மூலம் அறிந்து கொள்ள முடியும்.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR** : Sir, this question has been hanging fire for the past so many years and the Government of India have been sending constant reminders to the State Government but in spite of that, the Government have not enforced the system of sale of salt by weight, when other articles like tamarind and chillies are sold by weight. What objections could there be for the Government to adopt the system of sale of salt by weight, inasmuch as it is sure to improve the quality of salt and the consumers also stand to gain by it?

**The Hon. Sri R. VENKATARAMAN** : The Government have absolutely no objection but they are faced with a lot of difficulties in enforcing the sale of certain things by weight. For one thing, it is customary throughout the whole of this State to buy salt by measures, and to change over suddenly is rather difficult.

**Sri S. M. ANNAMALAI** : கனம் அமைச்சர் அவர்கள் நான்கு ஜில்லாக்களில் அமுலுக்கு வரும் என்று சொன்னார்கள். எந்த எந்த ஜில்லாக்களில் அமுலுக்கு வரும்?

**The Hon. Sri R. VENKATARAMAN** : மெட்ராஸ், செங்கல்பட்டு, தென்னார்க்காடு, வடார்க்காடு ஆகிய நான்கு ஜில்லாக்களிலும் அமுலுக்கு வரும்.

**Sri S. NAGARAJA MONIGAR** : பழைய நாணயத்திற்குப் பதிலாக நயா பைசா கொண்டு வரப்பட்டு பல மாதங்கள் ஆகியும் இன்னும் நயா பைசா சம்பந்தமான குழப்பம் மக்களுடைய மனதிலிருந்து அகற்றப்படாமலேயே இருந்து வருகிறது.

Mr. SPEAKER : The hon. Member may ask a question pertaining to the main question but he is asking about naya paisa.

**Sri S. NAGARAJA MONIGAR** : படி அளவில் இப்போது உப்பு வாங்குவதில் கஷ்டம் இருப்பதாகப் புகார் எதுவும் இல்லை. இதை மாற்றி மீண்டும் குழப்பத்தைக் கொண்டு வராமல் மக்களுக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுப்பார்களா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : படி அளவில் உப்பு வாங்குவதால் அதன் தரத்தைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. நிறுத்தல் அளவில் வாங்கினால் நல்ல உப்பு அதிக கனமாக இருக்கும். அதையொட்டி இந்தச்சீர்திருத்தம் அவசியம் என்று கருதுகிறோம். அட்மினிஸ்ட்ரேடிவ் ப்ரொஸீசரினால் சிறிது கால தாமதம் ஆகிறது.

**Sri S. PAKKIRISAMI PILLAI** : கொஞ்ச காலத்திற்கு முன்னால் இருந்த விலையைவிட இப்போது உப்பின் விலை குறைந்திருக்கிறது. விலை குறைந்திருப்பதற்கு உப்பின் தரக் குறைவு காரணமா அல்லது வேறு ஏதாவது காரணமா என்று அறிய விரும்புகிறேன்.

10th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : தனிக் கேள்வி வேண்டும்.

SRI R. SRINIVASA IYER : கனம் ஜாஸ்தியாக இருக்கிற உப்பின் தரம் உயர்வாக இருக்கிறது என்றார்கள். தூத்துக்குடி உப்பு வெள்ளை வெளேர் என்று படியில் அளக்கும்போதும் குறைவாகவே இருக்கிறது. அது உயர்ந்த தரம் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் நண்பர் சொல்வதை விஞ்ஞான ரீதியில் ஒப்புக்கொள்ள முடியாது. 96 சத விகிதம் சோடியம் க்ளோரேட் உள்ள உயர்ந்த ரக உப்பு கனமாகத்தான் இருக்கும்.

*Slums*

* 75-J *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the central grant (i) allotted (ii) actually paid to Madras State Government towards slum clearance in the years 1956–57, 1957–58, 1958–59; and

(*b*) whether the allotted amounts were fully utilized, and if not, the amount surrendered in the respective years?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Apparently the member refers to the loans and subsidies sanctioned by the Central Government for Slum Clearance Schemes in the State under the Second Five-Year Plan.

No allotment was made by the Central Government for 1956–57. However, the first loan instalment of Rs. 82,750 was sanctioned by the Central Government towards the cost of an approved scheme in that year, and this has been drawn.

An allotment of Rs. 15 lakhs was made by the Central Government for the year 1957–58, out of which loans amounting to Rs. 11·34 lakhs and a subsidy of Rs. 59,750 were drawn, leaving a balance of Rs. 3·06 lakhs.

For 1958–59, an allotment of Rs. 42·50 lakhs that is, a loan of Rs. 25 lakhs and a grant of Rs. 70·50 lakhs, has been made. So far, a loan of Rs. 74,687 has been drawn. The balance of the allotment will be drawn in the course of the year.

*Raw Film Factory*

* 80 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கொடைக்கானலில் கச்சா பிலிம் தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்க மத்திய சர்க்காருக்கு சென்னை சர்க்கார் ஏதாவது சிபாரிசு செய்திருக்கிறார்கள். ?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : கொடைக்கானலில் வெள்ளையர்கள் காலத்தில் குடியேறியுள்ள ஆயிரக்கணக்கான பேர்கள் இட்போது வேலை இல்லாமல் இருக்கிறார்கள். கச்சா பிலிம் தொழிற்சாலை ஒன்றை நிறுவாவிட்டாலும், வாட்டில் பார்க் மரங்கள் கிடைப்பதால் ரயான் செயற்கைப் பட்டு பாக்டரியையாவது சர்க்கார் ஏற்படுத்துமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தனியார் துறையில் யாராவது முன்வந்தால் சர்க்கார் எல்லாவிதமான உதவியையும் செய்யும்.

[10th September 1958

* 81 *Q.*—Sri S. LAZAR : } Sri M. KARUNANITHI : } Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the details about the establishment of the raw film manufacturing factory at Ootacamund, Nilgiris district and the products that are to be manufactured;

(*b*) whether the plant has arrived in India and what is its cost; and

(*c*) whether the plant has been erected and if not, the reasons therefor?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) *to* (*c*) A final decision has not yet been taken by the Government of India on the question of establishing a factory at Ootacamund for the manufacture of raw photographic film. The matter is still in the exploratory stage.

*Leather Research Institute*

* 90 *Q.*—Sri N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

திண்டுக்கல்லில் தோல் ஆராய்ச்சி நிலையம் ஒன்றை ஏற்படுத்த ஏதேனும் உத்தேசமுண்டா ?

The Hon. Sri R. VENKATARAMAN : No, Sir.

Sri N. R. THIAGARAJAN : எங்கள் பாண்டிய நாட்டிலே தோல் உற்பத்தி, தோல் பதனிடும் தொழில் ஆகிய இரண்டும் மேன்மையாக இருக்கிறது. அவசியம் பொதுமக்களிடமிருந்து கோரிக்கை வந்திருக்க வேண்டும். அதை இனிமேலாவது பரிசீலனை செய்வார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் பாண்டிய நாட்டுக்கு வேண்டுமென்றால் சோழ நாட்டுக்கு வேண்டும், சேர நாட்டுக்கு வேண்டும் என்ற கேள்வி எழும். கொங்கு நாட்டைப் புறக்கணித்துவிட்டதாக நிதி அமைச்சர் கேட்கலாம். நாட்டுப் பிரச்னை வேண்டாம். இப்போது செண்டிரல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட் உலகத்திலேயே புகழ்பெற்ற ஸ்தாபனமாக இருக்கிறது. அது நமக்கு வேண்டிய உதவியை அளித்துக் கொண்டிருக்கிறது.

*Industrial Training Institute*

* 94 *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பார்களா—

(அ) சமீபத்தில் புதிய தொழில் பள்ளிகள் துவக்கும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

(ஆ) அப்படியானால் எங்கெங்கே ?

(இ) இவர்களுக்கு பரீட்சை உண்டா ? அப்படியானால், அதில் தேறியவர்களுக்கு என்ன அத்தாட்சி அளிக்கப்படுகிறது ?

(ஈ) இதில் தேறியவர்கள் அரசாங்கத்தில் என்ன வேலை பார்க்கத் தகுதியுடையவர்கள் ?

(உ) அதற்கு ஏற்பட்ட சம்பள விகிதம் என்ன ?

10th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) The Government have recently started four new Industrial Training Institutes under the Second Five-Year Plan in Cuddalore, Nagapattinam, Virudhunagar and Palayamcottai. There is at present no proposal pending with the Government for starting any more new Industrial Training Institutes in this State.

(*c*) On the completion of the training in the Industrial Training Institutes, the trainees are tradetested by qualified outside examiners in their respective trades. After the trade tests, the trainees have to undergo inplant training in workshops for a period of 6 months. On the successful completion of the inplant training, the trainees are awarded competency certificates in Craftsmanship in the appropriate trades. These are at present issued by the Director-General of Resettlement and Employment and, in future, they will be issued by the National Council for Technical and Vocational Training, New Delhi.

(*d*) The successful candidates are qualified, to start with, for the post of mechanics, skilled draughtsmen, surveyors and other minor posts of skilled category in Public Works Department, Survey and Engineering Workshops of the Government Departments and factories, both private and public.

(*e*) Normally, a holder of a certificate of craftsmanship may be able to earn about Rs. 75 per mensem in Government services and slightly more in Government of India establishments such as Integral Coach Factory, Perambur, Hindustan Machine Tools, Bangalore and other private firms.

SRI A. GOVINDASAMY : இந்தப் பள்ளிகளில் பயிற்சிபெற்று பரீக்ஷையில் தேரும் மாணவர்களுக்கு உத்தியோக உத்திரவாதம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்களுக்கு உத்தியோக உத்திரவாதம் கிடையாது. ஆனால், இக்காலத்தில், இப்பள்ளிகளில் பயிற்சி பெற்றவர்களுக்கு வேலை வெகு எளிதில் கிடைக்கிறது.

SRI A. VEDARATHNAM : இந்தப் பள்ளிகளில் என்னென்னக் கைத்தொழில்கள் கற்றுக்கொடுக்கப்படுகின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : Carpentry, smithy முதலிய தொழில்கள் கற்றுக்கொடுக்கப்படுகின்றன ; "**fitter**" "**turner**" "**moulder**" முதலிய தொழிலாளர்களாக ஆவதற்குரிய பயிற்சிகளும் இந்தப் பள்ளிகளில் கற்றுக் கொடுக்கப்படுகின்றன.

* SRI A. A. RASHEED : Sir, in view of the heavy rush to these institutes, will the Government open more such institutions in the districts?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, we have twelve such institutes in the State.

SRI K. B. S. MANI : இந்தப் பள்ளிகளில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்குரிய மாணவர் பெற்றிருக்கவேண்டிய கல்வியின் அளவு—ஏதாவது ஸ்கூல் செர்டிபிகேட்—நிர்ணயிக்கப்பட்டிருக்கிறதா ? அப்படி நிர்ணயிக்கப் பட்டிருந்தால், அது அவ்வளவு கல்வி பெறாத பலரை பாதிக்குமாதலால் சேனையில் இருக்கும் முறையைக் கொண்டுவர அரசாங்கம் முன்வருமா ?

[10th September 1958

சேனையில், அவரவர்களுக்கு இருக்கும் படிப்பை வைத்துக்கொண்டே எல்லா விஷயங்களையும் எல்லோரும் கற்றுக்கொள்வதற்கு வசதி செய்துகொடுக்கிறார்கள். இந்தப் பள்ளிகளில் அப்படிப்பட்ட முறையைக் கொண்டுவர அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : குறைந்த பட்சத்தில், மூன்றாவது பாரமாவது படித்திருந்தால்தான், பயிற்சியினால் அவர்கள் பயனடைய முடியும். எனவே, மிகக் குறைவான ' எஜுகேஷனல் க்வாலிபிகேஷன் ' தான் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

*Geological Survey.*

* 98 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த மாநிலத்தில் பூகர்ப்ப ஆராய்ச்சி எப்போது நடந்தது ?

(ஆ) எந்தெந்த ஜில்லாக்களில் நடந்தது ?

(இ) அவற்றின் பலன் (ரிஸல்ட்) என்ன ?

(ஈ) மேலும் இவ்வாராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தும் உத்தேசம் உண்டா ?

(உ) அப்படியானால் எப்போது ? எங்கே ?

(ஊ) இந்த மாநிலத்திற்கென பூகர்ப்ப ஆராய்ச்சியாளர் உண்டா ?

(எ) இல்லையானால், பூகர்ப்ப ஆராய்ச்சி சர்வேயை மாநில சர்க்காரே ஏற்று நடத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Systematic mapping was begun by the Geological Survey of India in Madras State during the latter half of the nineteenth century and much of the area was covered before 1890 in a preliminary way. Systematic geological mapping and investigation of the mineral deposits in the various districts was initiated in the field season 1939–40 and the work is being continued every year since then.

(*b*) Systematic geological mapping has been completed in Tirunelveli and Ramanathapuram districts and the work is in progress in the districts of Chingleput, Tiruchirappalli, North Arcot, Salem, Coimbatore, Madurai and Kanyakumari.

(*c*) The reports on the investigations conducted by the Geological Survey of India are received by the Government. Reports which contain useful or important information are published in the *Fort St. George Gazette*. Apart from this, the Geological Survey of India have also published some of the more important works.

(*d*) & (*e*) Geological Survey of the several areas in the State is conducted year after year in accordance with the Field Season Programmes drawn up by the Director, Geological Survey of India, Calcutta, in consultation with this Government.

(*f*) & (*g*) The Southern Circle of the Geological Survey of India, which comprises the States of Madras, Mysore, Pondicherry and Kerala, is in charge of the Geological Survey work in the Madras State. In addition, this Government have also an organization to take up urgent items of investigations.

10th September 1958]

**Sri A. VEDARATHNAM :** பூகர்ப்ப ஆராய்ச்சி இன்னும் நடக்காத ஜில்லாக்களில், சில இடங்களில்—சிறப்பாக "கொரமாண்டல் கோஸ்ட்" போன்ற இடங்களில்—"கெரளின், யுரேனியம்" போன்ற உயர்ந்த பொருட்கள் இருப்பதாகக் கூறப்படுகிறதே, அந்த இடங்களில் விரைவில் ஆராய்ச்சி நடத்த அரசாங்கம் முன்வருமா ? அந்த இடங்களை ஆராய்வதற்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** இந்த ராஜ்யத்தில் எந்த எந்த இடங்களில் ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்று நாம் விரும்புகிறோமோ, அந்த இடங்களில் ஆராய்ச்சி செய்யும்படி மத்திய சர்க்கார் பூகர்ப்ப சர்வேயைக் கேட்டுக்கொள்கிறோம். அவர்கள் நம்முடன் கலந்தாலோசித்துத்தான் இங்கே ஆராய்ச்சி செய்கிறார்கள். மத்திய சர்க்காரின் பூகர்ப்ப சர்வேயைத் தவிர, நாமே இந்த ராஜ்யத்தில் தனியாக ஆராய்ச்சி செய்வதற்காக ஒரு "ஆர்கனைஸேஷனை" அமைத்திருக்கிறோம் ; நம் ராஜ்யத்திலுள்ள முக்கியமான இடங்களில் உடனடியாக ஆராய்ச்சி செய்ய வேண்டியிருந்தால், அதன் மூலம் அங்கெல்லாம் ஆராய்ச்சி செய்வதற்கு முயற்சி செய்கிறோம்.

**Sri K. VINAYAKAM :** கனம் சபாநாயகர் அவர்களே, நம் தென்னகத்தில் என்ன இல்லை ? வெட்டினால் வெள்ளி, தட்டினால் தங்கம் இடித்தால் இரும்பு என்றெல்லாம் . . . (சிரிப்பு.)

**Mr. SPEAKER :** The hon. Member should be more prosaic.

**Sri K. VINAYAKAM :** . . . அடுக்கு மொழியிலே பேசும் ஒரு அரசியல் கட்சியினர் சொல்வது போல இந்த ராஜ்யத்தில் வெட்டியும், தட்டியும், இடித்தும், ஒன்றும் கிடைக்கவில்லை என்று . . . (சிரிப்பு.)

**Mr. SPEAKER :** The hon. Member must come to the point. Why should he drag other parties in this House? I rule all the questions of the hon. Member out of order.

**Sri R. KRISHNASAMI NAIDU :** பூகர்ப்ப ஆராய்ச்சியின் முடிவுகளைப்பற்றிய தனிப் பிரசுரங்கள் எவையேனும் இருக்கின்றனவா ? அப்படி இருந்தால், அவைகளை சட்டசபை அங்கத்தினர்களுக்கு வழங்க அரசாங்கத்தார் ஏற்பாடு செய்வார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** ராஜ்யத்தில் எங்கேயாவது ஏதாவது நல்ல கனிப் பொருள்கள் கிடைக்கின்றன என்று தகவல் கிடைத்தால் அந்தச் செய்தியை **போர்ட் ஸெயின்ட் ஜார்ஜ் கெஜெட்**டில் பிரசுரிக்கிறோம். அது தவிர, முக்கியமான கனிப் பொருள்கள் இந்த ராஜ்யத்தில் கிடைக்குமானால் அதைத் தெரிவிக்க தனிப் பிரசுரங்கள் கூட வெளியிடப்படும்.

**Sri K. RAMACHANDRAN :** ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் பூகர்ப்ப ஆராய்ச்சி முடிந்துவிட்டதென்று கனம் அமைச்சர் கூறினார். ஸ்ரீ அருள்தாஸின் ரிப்போர்ட்டில் அங்கே கடற்கரையோரப் பகுதிகளில் "மண்ணெண்ணெயும், லைம்ஸ்டோனும்" இருப்பதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அதற்கும் பூகர்ப்ப ஆராய்ச்சிக்கும் சம்பந்தம் உண்டா? உண்டானால், அரசாங்கம் இது சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது?

**The Hon. Sri R. VENKATARAMAN :** மண்ணெண்ணெயைப் பொறுத்த வரையில், தனியாக "ஆயில் ஸர்வே" இருக்கிறது. அந்த ஸர்வேயினர்தான் அதுசம்பந்தமான ஆராய்ச்சியைச் செய்யவேண்டும். பூகர்ப்ப ஆராய்ச்சிக்காரர்களைப் பொறுத்தவரையில், அவர்கள், அங்கே நிறைய லைம் ஸ்டோன் இருக்கிறது என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.

[10th September 1958

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இப்போது பூகர்ப்ப ஆராய்ச்சி நடத்தப்பட்டிருக்கும் சேலம் ஜில்லாவில், பல நூற்றுண்டுகளுக்கு முன்பு ஆராய்ச்சி செய்யப்பட்டு அங்கே இரும்புபோன்ற கனிப் பொருள்கள் இருக்கின்றன என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதற்குரிய சான்றுகளும் அங்கே இருக்கின்றன. எனவே அந்த ஜில்லாவில் மீண்டும் பூகர்ப்ப ஆராய்ச்சி நடத்த அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI R. VENKATARAMAN : எந்த எந்த இடங்களில் பூகர்ப்ப ஆராய்ச்சி நடத்தப்பட வேண்டுமென்று கனம் அங்கத்தினர்கள் விரும்புகிறார்களோ அந்த இடங்களை அவர்கள் எழுதி எனக்கு கடிதம் அனுப்பினால் அதைப் பரிசீலனை செய்து ஆவன செய்ய முன்வருகிறேன்.

*Tannery*

* 99 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any representation, dated 26th November 1957, from the workers of the Guruvayya Naidu and Brothers' Tannery, Athuppalam, Coimbatore, was received by the Labour Department; and

(*b*) if so, the demands of the workers contained therein and the action taken thereon by the Government?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Thirty-four workmen of V. Guruviah Naidu Tannery, Coimbatore, represented to the Labour Officer, Coimbatore, that the management had refused employment to them and that they should be given at least three days' work in a week.

The Labour Officer, Coimbatore, held conciliation in the dispute. The Government examined the conciliation report and they declined to refer the dispute for adjudication as it was reported that the workmen were discharged due to loss in business and slump in trade.

SRI V. K. KOTHANDARAMAN : ஸ்ரீ குருவையா நாயுடுவின் குடும்பத்தில் ஏற்பட்டிருக்கும் தகராறின் காரணமாக அந்த "டானரி" மூடப்பட்டு, அதன் விளைவாக சுமார் 50 தொழிலாளர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் இதுவரையில் திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட வில்லை. அவர்களை உடனடியாக திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ளச் செய்வதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா?

MR. SPEAKER : இதற்கு கனம் அமைச்சர் ஏற்கனவே பதில் சொல்லியிருக்கிறாரே?

* 100 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have engaged any lawyer to defend the case filed by the tannery workers regarding the recommendations of the Minimum Wages Committee concerning them?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

SRI N. K. PALANISAMI : குறைந்தபட்சக் கூலியை சர்க்காரே நிர்ணயித்திருக்கும்போது, அதற்கு எதிராக முதலாளிகள் நடந்துகொண்டால் சர்க்காரே முதல் "ரெஸ்பாண்டெண்டாமே"; அப்படியிருக்கும்போது,

10th September 1958]

சர்க்கார்தானே வக்கீல் வைத்து முதலாளிகளுக்கு எதிராக வாதாட வேண்டும்? சர்க்கார், டிரேட் யூனியனில் மட்டும் பேசிவிட்டு வழக்கு நடக்கும்போது பேசாமலிருந்தால், என்ன அர்த்தம்?

THE HON. SRI R. VENKATARAMAN : குறிப்பான இந்த விஷயத்தில் சர்க்கார் வக்கீல் வைக்க வேண்டியதில்லை என்று தொழில் கோர்டு எங்களுக்கு சிபாரிசு செய்ததால், சர்க்கார் இந்த வழக்கில் வக்கீல் வைக்க முன்வரவில்லை,

*Handkerchiefs*

* 100-A *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the value of export of Madras handkerchiefs to South Africa in 1952–53 and 1957–58;

(*b*) the reasons for the fall in export, if any; and

(*c*) the steps taken to build up a foreign market for Madras handkerchiefs?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Madras handkerchiefs are being exported to West Africa and not to South Africa, as stated in the question. The value of export during 1952–53 was about Rs. 226·46 lakhs (two hundred and twenty-six) and it was Rs. 128·72 (one hundred and twenty-eight) lakhs during 1957–58.

(*b*) The main reasons for the fall in export were : (*a*) competition from Japan, (*b*) competition from the Indian merchants in West Africa, (*c*) lack of shipping facilities and (*d*) lack of organisation.

(*c*) With a view to check exploitation by the importers and to acquaint the producers and exporters about the real market conditions prevailing in West Africa, the All-India Handloom Fabrics Marketing Society has proposed to open a sales emporium there. Recently, direct shipping facilities to West Africa have also been provided. These measures are expected to build up a steady market for Madras handkerchiefs in West Africa.

SRI V. S. MANICKASUNDARAM : Sir, are not most of the handkerchiefs exported handloom products? Is there no standardization of handloom products now and will the Government take steps to standardize them?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the demand in West Africa is for Madras handloom handkerchiefs. There is competition from other countries who imitate our handloom product through their mills. The Government of India are now contemplating the stamping of these goods with the mark of ' Handloom '.

[10th September 1958

SRI A. P. C. VEERABAHU : இப்பொழுது கைக்குட்டை ஏற்றுமதி குறைந்திருப்பதற்கு காரணம் விலைக் குறைவினாலா அல்லது கைக்குட்டையின் எண்ணிக்கை குறைவினாலா?

THE HON. SRI R. VENKATARAMAN : ஜப்பானிலிருந்து அதிகமான காம்பட்டிஷன் வருகிறது என்பதை முக்கியமாக எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

SRI A. MARIAPPAN : விலைப் போட்டியைத் தவிர்க்க அதற்கு சப்ஸிடி கொடுக்க முயற்சி செய்யப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது யோசனையில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : ஏற்றுமதிக்கு எந்தப் பொருளும் அனுமதிக்கப்படுகிறபோது ஒரு குறிப்பிட்ட அளவு தரப்படும் என்று முதலில் விளம்பரப்படுத்திவிட்டு வியாபாரிகள் அந்த அளவிற்கு ஏற்றுமதிக்கு அனுமதி கேட்கிறபோது சர்க்கார் அதை குறைத்துக் கொடுக்கிற காரணத்தினால், வெளி நாட்டிலே அவர்கள், முதலில் அரசாங்கம் எந்தளவு விளம்பரப்படுத்துகிறதோ அந்தளவு ஒப்பந்தம் பண்ணி அது கிடைக்காதபோது பின் சர்க்கார் கொடுக்கிறதையும் ஏற்காது விட்டு விடுகிறார்கள். இதனால்தான் ஏற்றுமதிக் குறைவு ஏற்படுகிறது என்று சர்க்காருக்குத் தெரியுமா? ஆகவே இனியாவது அரசாங்கம் விளம்பரப் படுத்துகிற அளவு கொடுக்க முயற்சி எடுக்குமா?

THE HON. SRI R. VENKATARAMAN : அங்கத்தினர் அவர்கள் சொல்கிற காரணம் சரியல்ல. மதராஸ் ஹான்ட்கர்சீப்பைப் பொறுத்த வரையில் நாம் ஏற்றுமதியை தடை செய்யவில்லை; போதிய அளவு ஏற்றுமதி செய்ய அனுமதி கொடுத்துக்கொண்டுதான் இருக்கிறோம். ஆனால் அங்கு அவர்கள் வாங்குகிற அளவுதான் குறைந்துவிட்டது என்று புகார் இருக்கிறது.

SRI K. S. G. HAJA SHERIFF : Sir, are the Government aware that there is direct and enough shipping facility to West Africa; and, if so, what steps they will take to induce more quantities of goods to go there?

THE HON. SRI R. VENKATARAMAN : One of the reasons for the initial fall in export was the lack of direct shipping facilities. I am now aware that shipping facilities have improved. But the market in West Africa has not improved correspondingly.

SRI V. K. KOTHANDARAMAN : கைத்தறி லுங்கி தனிநபர்கள் கையில் இருக்கிறவைகளின் தரம் குறைவானதாக இருப்பதின் காரணமாக ஏற்றுமதி குறைந்துபோவதினால் ஏற்றுமதிப் பொறுப்பை சர்க்காரே எடுத்துக்கொள்ளுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : வருத்தத்துடன் சொல்லிக் கொள்கிறேன், அங்கத்தினர் அவர்கள் சொல்லுவது சரியல்ல என்று. நம் தரம் குறைவு என்று இதுவரையில் யாரும் புகார் செய்ததில்லை. அப்படி அங்கத்தினர் அவர்கள் புகார் சொல்வதனால் அது தவறு என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அந்த அபிப்பிராயத்தை அவர் திருத்திக் கொள்ளும்படியும் கேட்டுக்கொள்கிறேன். ஏற்றுமதிக் குறைவுக்குக் காரணம், வேறு நாடுகளில் இருந்து கைத்தறியைப் போல் மெஷினில் நெய்து அவைகளை சுலபமாக விற்க முன்வருவதனால் அங்கு நமக்கு மார்க்கெட் குறைகிறது.

10th September 1958]

*Appointment of Chief Secretary to a Central Board of Enquiry*

*** 126 Q.—Sri N. K. PALANISAMI :** கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சில முந்திரா கம்பெனிகளில் ஆயுள் இன்ஸூரன்ஸ் கார்பொரேஷன் செய்த முதலீடுகள் சம்பந்தமாக சில அதிகாரிகளின் நடத்தையைக் குறித்து சக்ளா கமிஷன் செய்த தீர்ப்புக்களின் அடிப்படையில் விசாரணை செய்வதற்கான விசாரணை போர்டில் சென்னை ராஜ்யத்தின் பிரதம காரியதரிசியை அங்கத்தினராக நியமிக்க மத்திய அரசாங்கத்துக்கு சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது என்பது உண்மையா ?

(ஆ) அப்படியானால், அப்பதவிக்கான நிபந்தனைகளும் கொடுக்கப் படப்போகிற சம்பளமும் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No. The State Government did not recommend the name of the Chief Secretary for appointment to the Board of Enquiry. The Government of India requested the State Government to depute the officer to serve on the Board of Enquiry. The State Government agreed to the request of the Government of India.

(*b*) The officer is permitted to proceed to Delhi in connection with the Board of Enquiry and the above period is treated as on tour. He is allowed to draw the travelling allowance at the rate applicable to officers of the Madras Government. The expenditure in regard to the travelling allowance of the officer is met by the Government of India.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know, Sir, in the absence of the Chief Secretary, who is attending to his work?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, he is considered to be on tour. Therefore no alternative arrangement has been made. As far as possible, important files are sent to him if it is considered necessary that he should see them. Otherwise, the next senior officer looks into the files.

*Meenakshiamman temple, Madurai*

*** 127 Q.—Sri N. R. THIAGARAJAN :** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மதுரை மீனாட்சியம்மன் கோயில் வெளி மதிலைச் சுற்றியுள்ள காலியிடத்தை நான்கு பக்கத்திலும் கடைகள் வைத்து வாடகைக்கு விட அரசாங்கத்துக்கு ஏதேனும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

**SRI N. R. THIAGARAJAN :** கோவிலைச் சுற்றியுள்ள பகுதிகளைக் கடைகள் வைப்பதற்கு கேட்டால் அதை வாடகைக்குக் கொடுத்துவிட்டால், கோவிலிற்கு இப்பொழுது வருமானம் போதாமல் இருப்பதால், அதனால் லட்சக்கணக்கான ரூபாய் வருமானம் கிடைக்கும் என்பதால் அதை அரசாங்கம் பரிசீலிக்குமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** வருமானத்தை எதிர் பார்த்து அசௌகரியம் செய்வதை விட அந்த இடத்தில் பூந்தோட்டம் அமைப்பது என்பது இப்பொழுதுள்ள யோசனை.

*Files pending for over six months*

* 128 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சென்னை சர்க்காரின் காரியாலயங்களில் 6 மாதத்திற்கு மேல் கட்டி வைக்கப்பட்டுள்ள பைல்கள் எத்தனை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The time and labour involved in collecting the information required will not be commensurate with the purpose that it may serve. The office manuals and instructions issued from time to time provide for an effective check of delays in the despatch of business in each office.

*Sanitary Inspector's courses*

* 129 Q.—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the places where the Sanitary Inspector's courses are given at present; and

(*b*) whether there is any proposal to start the course at Madurai?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Madras Medical College and Stanley Medical College, Madras.

(*b*) No, Sir.

SRI K. RAMACHANDRAN : மதுரைக்குப் பக்கத்தில் உள்ள நாலு ஜில்லாக்களில் இருந்து படிக்க வரக்கூடிய மாணவர்கள் செலவு குறைவாகப் படிப்பதற்கு ஏதுவாக இருக்குமாகையால், அதுவும் அங்கு ஒரு மெடிகல் காலேஜும் இருக்கிறது என்பதையும் கருத்திற்கொண்டு இந்த கோர்ஸை மதுரையில் வைப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மதுரையில் இந்த காலேஜில் இன்னும் புதிய டிப்பார்ட்மெண்ட்கள் எல்லாம் ஏற்படவில்லை. அதற்கு இடவசதி வேண்டியிருக்கிறது. இதற்கு வேண்டிய இடவசதி ஏற்பட்ட பிறகு பார்த்துக்கொள்ளலாம்.

SRI M. K. SOMASUNDARAM : சுகாதார கோர்ஸ் படித்து வெளியே வருகிறவர்களை பஞ்சாயத்து போர்டுகளில் நியமிக்க அரசாங்கம் உத்தரவு இடுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கேள்வி பயிற்சியைப் பற்றியது. உத்தியோகம் கொடுப்பது பற்றி தனியாக கேள்வி கேட்க வேண்டும்.

*Raw Hides and Skins*

* 130 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have recommended to the Union Government for the liberal issue of licences for the import of raw hides and skins?

THE HON. SRI R. VENKATARAMAN : No recommendation has been made by this Government to the Central Government as no representation regarding any scarcity in respect of hides and skins in the State has been made to this Government. However, Essentiality Certificates for the import of raw hides and skins have been issued to applicants in a few individual cases.

10th September 1958]

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that more than sixty per cent of the tanneries in South India have closed down for want of raw hides?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the Government are aware of the closure of tanneries. But they are not aware that it is due to lack of raw hides and skins.

*Government Estate*

* 131 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சென்னை கூவம் நதியிலிருந்து சேப்பாக் வரையிலுள்ள மவுண்ட் ரோட் சர்க்கார் எஸ்டேட்டில் (Government House Estate) மவுண்ட் ரோடை ஒட்டிய பகுதியில் கடைகள் கட்டி வாடகைக்கு விட அல்லது கடை கட்டிக் கொள்பவருக்கான மனையையாவது குத்தகைக்குவிட சர்க்காருக்கு ஏதேனும் உத்தேச முண்டா ?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

SRI A. A. RASHEED : Sir, is there any proposal to release a portion of the Government Estate land in Mount Road to widen the Mount Road from 'The Hindu' office to the Elphinstone Talkies?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

*Kalainesan*

* 132 Q.—SRI A. VEDARATHNAM : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) கலைநேசன் பத்திரிகையின்

(1) ஆசிரியர்,

(2) பிரசுரிப்பவர் ஆகிய இவர்களின் பேரில் எத்தனை தடவை இது வரையில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன ?

(ஆ) எந்தெந்த குற்றத்திற்காக ?

(இ) அவற்றின் முடிவென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Seven.

(b) Publication of obscene matter.

(c) Conviction secured on all the seven occasions.

*Irrigation and cultivation*

* 133 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூர் ஜில்லா, பட்டுக்கோட்டை தாலுகாவில் உள்ள ஏரிப் புரக்கரை, தம்பிக்கோட்டை கிராமங்களில் உள்ள அலையாத்திக்காடு எனப் படுகிற பெரிய நிலப்பரப்பை சாகுபடிக்கேற்றதாக்க உத்தேசம் ஏதேனும் உண்டா ?

(ஆ) வடிகால் பாதையைச் சீர்திருத்துவது மூலமாக மேற்சொன்ன தாலுகாவில் உள்ள நசுனியாறு நதியின் வெள்ளப் பெருக்கை சமுத்திரத் தில் சேர்த்துவிடுவதற்காக பரிசீலனை ஏதாவது செய்யப்பட்டதா ?

(இ) நசுனியாறு நதியின் வடிகாலை சீர்திருத்தி, அதன் தண்ணீரை அலையாத்திக்காடு எனப்படுகிற காட்டுப்பிரதேசத்தின் நீர்ப்பாசனத்துக்காக வும் சாகுபடிக்காகவும் உபயோகித்துக்கொள்வதென்று அரசாங்கத்தார் உத்தேசித்திருக்கிறார்களா ?

[10th September 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Detailed investigation is yet to be made.

(*c*) Construction of an anicut across Nasunniar and utilizing the flow in the river is under consideration.

**SRI A. VEDARATHNAM :** கனம் அமைச்சர் அவர்கள் இப்பொழுது சமீபத்தில் ஏற்பட்டிருக்கிற சிறிய நீர்ப்பாசன வசதிக் கமிட்டியின் தலைவராக இருக்கிற காரணத்தினாலும் இதுபோன்ற நிலங்கள் சுமார் 40,000 ஏக்கர் தஞ்சையில் இருக்கிற காரணத்தினாலும் இப்படி சிறிய திட்டங்களை எடுத்து 500, 1000 ஏக்கர் என்று அபிவிருத்தி செய்வதை விட ஒரு பெரிய திட்டம் ஏற்படுத்தி அதன் மூலம் எல்லா நிலங்களையும் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு ஏதாவது ஒரு நல்ல திட்டம் அமைக்க சர்க்கார் முன்வருவார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இந்தத் திட்டத்தைப் பொறுத்த மட்டில் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதோடு இந்த நிலங்களை சாகுபடி செய்வதற்கு அவைகள் அதற்கு லாயக்காக இருக்கின்றனவா என்று கவனிக்க வேண்டியிருக்கிறது. விவசாய இலாகா இதை பரிசீலனை செய்ததில் முதலில் பசுந்தாள் பயிர் செய்து அதற்கப்புறம் சாதாரண சாகுபடிக்கு லாயக்காக்க வேண்டுமென்று தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே இவைகளை எல்லாம் கவனிக்க வேண்டியிருக்கிறது.

**SRI K. ANBAZHAGAN :** தஞ்சை மாவட்டத்தில் பட்டுக்கோட்டை வட்டாரத்தில் நசுனியாறு தண்ணீர் தேங்குகிற காரணத்தினாலும் அது கடலில் சென்று கலக்க வேண்டிய வாய்க்கால்கள் இல்லாத காரணத்தினாலும் பல குறைபாடுகள் அந்த வட்டாரத்தில் வளர காரணமாகிறது. ஆகவே உடனடியாக அங்கு தண்ணீர் தேங்காமல் இருக்க வழி செய்வார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இப்பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டுதான் இருக்கிறது.

SRI R. SRINIVASA IYER : Sir, may I know the area in acres referred to under clause (*a*), viz., Alayathikkadu in Eripurakarai and Thambikkottai villages in Pattukkottai taluk?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir, it refers to Alayathikkadu forest area.

MR. SPEAKER : I think the hon. Member wants to know the extent of the area. If the information is readily available the Hon. Minister can give it. Am I right, Mr. Srinivasa Iyer?

SRI R. SRINIVASA IYER : Yes, Sir. I want to know the extent of the area.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It will cover an area of about 2,000 acres.

### *Pandya State*

*** 134 *Q.*—SRI N. R. THIAGARAJAN :** கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி ஜில்லாக்கள் கொண்ட பாண்டிய ராஜ்யம் அமைக்க நடைபெறும் முயற்சி சர்க்காருக்குத் தெரியுமா ?

10th September 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : சென்னை சுற்றுப்புறங்களில் பாண்டிய நாடு அமைக்கவேண்டும் என்று பலமான கிளர்ச்சி, புரட்சி இவைகள் எல்லாம் தோன்றும்போல் தெரிகிறது. ஆகவே அதன் பேரில் சர்க்கார் பாண்டிய நாடு அமைப்பதற்கு முயற்சி செய்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது குறுகிய ராஜ்ய மனப் பான்மை. இதைப்பற்றி சர்க்கார் நடவடிக்கை ஒன்றும் எடுக்கவில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, மதுரை, ராம நாதபுரம், திருநெல்வேலி இவைகள் உள்ளடங்கிய ஒரு பாண்டிய ராஜ்யம் அமைத்து அதற்கு பழைய கட்டபொம்மனை போன்று ஒரு ராஜாவை ஏற் படுத்தவேண்டும் என்று திரு. தியாகராஜன் அவர்கள் முயற்சிப்பது அரசாங்கத்திற்கு தெரியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி செய்தாலும் இப்போது ராஜா கிடைப்பது கஷ்டம். இப்போது ஜனநாயக ஆட்சி நடந்து கொண்டிருக்கிறது.

SRI V. SANKARAN : மேற்படி ஜில்லாக்களில் பாண்டிய நாடும் வேண்டாம், கொங்கு நாடும் வேண்டாம், திராவிட நாடும் வேண்டாம், ஐக்கிய இந்தியாவே இருந்தால் போதும் என்று ஒரு எதிர் கிளர்ச்சி இருந்து வருவது சர்க்காருக்குத் தெரியுமா ?

(No answer.)

## *Integrated Medicine*

* 135 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state with reference to question Nos. 110-E and 110-F answered on 8th November 1957—

(*a*) whether the Government have framed rules and regulations to implement the Madras Registration of Practitioners of Integrated Medicine Act, 1956 (Madars Act No. XXVII of 1956) and constituted a new Board of Integrated Medicine ; and

(*b*) if not, the reasons for the delay?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) Orders constituting "The Board of Integrated Medicine" under section 3 of the Madras Registration of Practitioners of Integrated Medicine Act, 1956, have already been issued. The work of drafting the rules under section 15 of the Act is nearly complete and the rules will be issued soon.

MR. SPEAKER : I think the Hon. Minister can answer the next question also, so that we can take both the questions together.

SRI M. KALYANASUNDARAM : These two questions relate to different subjects. So, they may be taken up separately.

MR. SPEAKER : All right.

SRI M. KALYANASUNDARAM : May I know the cause for the inordinate delay in drafting the rules and also in constituting the Board?

The Hon. Sri M. A. MANICKAVELU : Whatever be the delay, the Board has already been constituted. As for the drafting of the rules, I have already said that they have to be scrutinised by the Law Department. The scrutiny of certain legal aspects takes time. Now, the examination is over and as I said before, they will be issued very soon.

Sri S. NAGARAJA MONIGAR : ஸார், ஒருங்கிணைப்பு மருத்துவ முறை என்று சொல்லி, நாளுக்குநாள் மேல்நாட்டு வைத்திய முறைதான் மேலோங்கிவருகிறதே தவிர நமது நாட்டு வைத்திய முறை இன்னும் சீர்பாடு அடையவில்லை என்ற காரணத்தால் . . .

Mr. SPEAKER : How does it arise out of this question?

Sri S. NAGARAJA MONIGAR : I am coming to it. Let me complete my question, Sir.

Mr. SPEAKER : No, the hon. Member cannot complete that question. I can understand if he asks a question relating to the rules and regulations. The House is not, I am sure, interested in hearing his other comments. Only questions with regard to the rules and regulations will be permitted. Otherwise, the hon. Member need not ask the question at all.

Sri K. VINAYAKAM : Is it a fact that the great delay involved in the framing of the rules and regulations under this Act is due to the fact that the Government had a soft corner towards this Integrated Medicine course in the early days, but subsequently changed their view . . .

Mr. SPEAKER : I think the hon. Member is trying to circumvent the objection raised by me . . .

Sri K. VINAYAKAM : Sir, I think I am in order.

Mr. SPEAKER : No, the hon. Member is not in order. He can ask a supplementary only on the question of rules and regulations.

Sri M. KALYANASUNDARAM : May I know the names of the Members of the Board?

The Hon. Sri M. A. MANICKAVELU : It is a long list and if I have to read it, it will take a long time. So, if the hon. Member wants, I can give the list to him.

Sri M. KALYANASUNDARAM : I suggest that it may be placed on the table of the House.

(Sri K. Vinayakam rose. . .)

Mr. SPEAKER : I shall give another chance to the hon. Member Sri K. Vinayakam if he puts a question relating to the rules and regulations only.

Sri K. VINAYAKAM : May I know whether there has been a change in the attitude of the Government with regard to Integrated Medicine and whether that was the reason for the delay in framing these rules?

[Sri N. K. Palanisami] [10th September 1958

மிக்ஸ் " பத்திரிகையில் ஒரு கட்டுரை வந்திருக்கிறது. அதில் விலைவாசி ஏற்றத்திற்கு ஜனத்தொகை ஏற்றம் காரணம் அல்ல, உற்பத்திதான் அதற்குக் காரணம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சைனுவை எடுத்துக் கொண்டால் வருஷம் ஒன்றிற்கு 20 லட்சம் ஜனத் தொகை அதிகமாகிறது. இங்கு வருஷம் ஒன்றுக்கு $1\frac{1}{4}$ லட்சம் தான் அதிகப்படியான ஜனத் தொகை உண்டாகிறது. சைனுவில் 1,500 பேர்கள் ஒரு சதுர மைல் பூமியை விவசாயத்திற்கு நம்பியிருக்கிறார்கள். இங்கே 500 பேர்கள் ஒரு சதுர மைல் பூமியை நம்பியிருக்கிறார்கள். சைனுவில் விவசாயத்திற்குத் தகுந்த பூமி 110 மிலியன் ஏக்கர். இந்தியாவில் 153 மிலியன் ஏக்கர் விவசாயத்திற்குத் தகுந்த பூமி இருக்கிறது. சைனுவில் 585 மிலியன் பேர்கள் இருக்கிறார்கள். இந்தியாவில் 357 மிலியன் பேர்கள் இருக்கிறார்கள். ஆகவே, அவர்கள் விலை ஏற்றத்திற்கு ஜனத் தொகை முக்கியமான காரணமல்ல என்று சொல்லுகிறார்கள். அங்கே ஏராளமான ஜனத் தொகை இருக்கிறது. ஆனால் விவசாயத்திற்கு லாயக்கான பூமி குறைவாக இருக்கிறது. அப்படியிருந்தும் இம்மாதிரி உணவு நெருக்கடி அங்கே ஏற்படுவதில்லை. இங்கே அதிக வசதி இருந்தும் கூட நெருக்கடி ஏற்படு
10 20 a.m. வதற்கு காரணம் என்ன? 1956–57 பட்ஜட் பிரசங்கத்தில் ஜனங்களுக்கு வருமானம் அதிகமாகப் போயிருப்பதால்தான் விலைவாசிகள் அதிகமாகியிருக்கின்றன என்று கூறப்பட்டது. ஒன்று வருமானத்தைக் குறைக்க வேண்டும், அல்லது சாப்பாட்டைக் குறைக்க வேண்டும். 1956–57-ல் டெபிஸிட் பைனுன்ஸிங் . . .

MR. SPEAKER : கனம் வீரபாகு.

SRI N. K. PALANISAMI : I have not finished my speech, Sir.

MR. SPEAKER : It is not my fault. I told the hon. Member that he would be allowed only seven minutes. Sri Veerabahu may now speak.

SRI A. P. C. VEERABAHU : கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் புள்ளி விவரங்கள் கொடுத்து, ஏற்கனவே இருந்த கஷ்டமான உணவு நிலைமை கேவலமாகி விடவில்லை, திருப்திகரமாகவே இருக்கிறது என்று கூறியிருக்கிறார்கள். இருந்தாலும், பிரதமர் பண்டிட் நேரு அவர்கள் அடிக்கடி உணவு உற்பத்தியில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும் என்று வற்புறுத்தி வருகிறார்கள். இயற்கை நமக்கு உதவியிருக்கிறது. ரிஸர்வ் பாங்கியும் கடன் வசதிகளை முடக்கியதின் காரணமாக, உணவு தானியத்தில் வியாபாரம் செய்து கொள்ளை லாபம் அடிப்பவர்கள் இக்கட்டான நிலைக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கிறார்கள். ஆகவேதான் உணவு தான்ய விலை குறைந்திருக்கிறது என்றும் சொல்லமுடியும். ரிஸர்வ் பாங்கி உணவு தானியங்களுக்கு 60 % தான் கடன் கொடுக்க முடியும் என்று குறைத்திருப்பது வரவேற்கத்தக்கது. மலிவு தானிய கடைகள் நிறுவி இருப்பதன் காரணத்தால், அரிசியையே சாப்பிடும் பழக்கத்திலிருந்து, கோதுமையைச் சாப்பிடவும் மக்கள் தொடங்குவதற்கு ஏதுவாக இருக்கும்.

இப்பொழுது உள்ள விலை உயர்வு 10-%ல் தான் என்று கூறியிருக்கிறது. நெருக்கடியான 1956 வருஷ விலையோடு ஒப்பிட்டு பார்க்கும்பொழுது 25% விலை ஏற்றமாக இருக்கிறது. இந்த சபையில் இன்னொரு டிபேட்டில் கூறியிருக்கிறார்கள், தமிழ் மக்களின் வாங்கும் சக்தி குறைவு என்று கூறப்பட்டது. இதற்கு ஏற்ற நடவடிக்கையும் எடுக்கவேண்டும். இந்த விலை உயர்வைத் தடுக்க விதைப் பண்ணைகளை வெகு துரிதமாக மாகாணத்தில் நிறுவியாக வேண்டும். பொறுக்கு விதைகளை மக்களுக்கு அதிகமாகக் கொடுத்து உதவ வேண்டும் என்ற திட்டத்தின் கீழ், இந்த விதைப் பண்ணைகள் நிறுவப்படுகின்றன. இந்த சமயத்தில் நில உடைமைப் பிரச்சினையும் வருகிறது. உழைப்பவர்களுக்கு நிலம் கையைவிட்டு அகலாத ஒரு நிலைமையை ஏற்படுத்தியாக வேண்டும். ஆகவே விதைப் பண்ணைகள் நிறுவும் சமயத்தில் நிலப் பிரச்சினையையும் கவனித்தாகவேண்டும். இதில் ஒரு நல்ல ஸ்திரமான கொள்கையைக் கையாளவேண்டும். உச்ச நிலை வரம்பு நிர்ணயிக்கும் விஷயத்தில் இன்னும் ஆரம்ப நடவடிக்கைகள்

10th September 1958] [Sri A. P. C. Veerabahu]

கூடி எடுத்ததாகத் தெரியவில்லை. இதைப் ப்ளானிங் கமிஷனும் வற்புறுத்தி வருவதால், உச்ச வரம்பு சம்பந்தமான சட்டம் கொண்டு வருவதில் கால தாமதம் இல்லாமல் செய்யவேண்டும். ஐந்து ஏக்கருக்கு குறைந்த நிலச் சொந்தக்காரர்களுக்கு, நிலத்தில் உரிமை கொடுக்கும் நிலைமையைச் சீக்கிரம் கொண்டு வருவது நல்லது. வியாபாரிகளுக்குக் கொடுக்கும் கடன் வசதியை ரிசர்வ் பாங்கு ஏற்கனவே 60% ஆக குறைத்திருக்கிறது. அதை இன்னும், 50% அல்லது 40% ஆகக் கூடக் குறைத்து உணவு தானியத்தின் மூலம் லாபம் அடிக்கப் பார்ப்பவர்களுக்கு ஒரு அடி கொடுக்க வேண்டும். கூடிய வரையில் கன்ஸூமர்ஸ் இன்டரஸ்டைக் காப்பாற்ற வேண்டும்.

(SRIMATHI KOLANTHAI AMMAL in the Chair.)

ஸோனல் கன்ட்ரோலிலிருந்து நம் பிராந்தியத்தை பிரித்து, கேரளாவின் தேவையைச் சமாளிக்க, நம் பிராந்திய உணவுக் கொள்கையை நாமே வகுத்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*SRI G. VAGHEESAM PILLAI : கனம் தலைவி அவர்களே, கனம் விவசாய மந்திரி அவர்களது அறிக்கையிலிருந்து, நம் ராஜ்யத்தில் நாம் உணவு உற்பத்தியில் முன்னேறி இருப்பது தெளிவாகிறது. ஆனாலும், இந்த இரண்டு மூன்று மாதங்களில் மணங்குக்கு இரண்டு ரூபாய் அளவு விலை ஏறி இருக்கிறது. இந்த சந்தர்ப்பத்தில் நாம் தீவிர கவனம் செலுத்த வேண்டியிருப்பதால், நான் சில யோசனைகளைச் சொல்ல விரும்புகிறேன்.

பல புதிய திட்டங்கள் வருவதால் நம் ராஜ்யத்தின் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும். ஆனாலும், அவைகள் முடிந்து உருப்பெற சில வருஷங்கள் ஆகும். ஆகவே, இருக்கக்கூடிய வாய்க்கால்கள், குளங்கள் இவைகளை மராமத்து செய்வதில் தீவிர கவனம் செலுத்தியாக வேண்டும். நம் எஞ்சினியர்களுக்கு புதிய திட்டங்கள் போடுவதில் கவனம் இருக்கிறதே யொழிய, சிறு பாசன வசதிகளைச் சீர் செய்வதில் கவனம் குறைவாக இருக்கிறது. சிதம்பரம் தாலூகாவில், 130,000 ஏக்கரா டெல்டா போர்ஷனில் இருக்கிறது. அது முன்பு ஒரு போகமாக இருந்தது. சென்ற வருஷம், 40,000 ஏக்கரா இருபோக சாகுபடிக்கு வந்திருக்கிறது. நிலங்கள் இருபோக சாகுபடிக்கு வந்தால் தான் அதிக உற்பத்தி காணமுடியும். இது தஞ்சை டெல்டா, சிதம்பரம் தாலூகா போன்ற இடங்களில் நன்றாக உணர்ந்த விஷயம். சென்ற வருஷம் ஆடூர் கிராமத்தில் 1,500 ஏக்கர் ஆயகட்டுள்ள பெரிய வாய்க்காலை குடிமராமத்து செய்ததின் காரணமாக, முன்னால் இருந்ததைவிட அதிக தானியம் விளைந்திருக்கிறது. 1,000 டன்கள் உணவு உற்பத்தி அதிகரித்திருப்பது கவனிக்கத்தக்கது. குடிமராமத்து சட்டத்தின் கீழ், ஒவ்வொரு மாவட்டங்களிலும் உள்ள சிறு சிறு வாய்க்கால்களையெல்லாம், சர்க்காரே எடுத்துச் சீர் செய்யவேண்டும். கிராமத்திலும் ஜனங்களிடையே ஒற்றுமை இல்லாத காரணத்தால் வாய்க்கால்கள் மராமத்து சர்க்காரே செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். 1,000 ஏக்கருக்கு மேற்பட்ட ஆயகட்டுள்ள வாய்க்கால்களில், 500 ஏக்கர் ஆயகட்டுவரை உள்ள வாய்க்கால்களை அரசாங்கச் செலவிலேயே வெட்டிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதைப் பரீக்ஷார்த்தமாக ஒவ்வொரு தாலூக்காவாக எடுத்துச் செய்யலாம். இம் மாதிரிச் செய்தால் சிதம்பரம் தாலூகாவில் 50,000 டன் அதிக உணவு உற்பத்தி ஏற்படும்.

சாதாரணமாக செப்டம்பர், அக்டோபர் மாதங்களில்தான் கதிர்களில் பூச்சிகள் விழுகின்றன. அந்தச் சமயங்களில் பூச்சி மருந்துகள் விவசாயிகளுக்குக் கிடைப்பது அரிதாக இருக்கிறது. எந்தந்த பிராந்தியத்தில் பூச்சி விழுகிறது என்பதை ஜில்லா விவசாய ஆபீசர் டிக்ளேர் செய்த பிறகு பூச்சி மருந்துகளை பாதி விலைக்குக் கொடுக்கவேண்டும் என்ற ஒரு உத்தரவு இருப்பதாகத் தெரியவருகிறது. அதை மாற்றி அமைக்க

[Sri G. Vagheesam Pillai] [10th September 1958

வேண்டும். பூச்சி பிடிக்கக்கூடிய மாதங்களில் நிரந்தரமாக இப்பொழுது பயிர்களில் பூச்சி விழுந்து வருவதால் நிரந்தரமாகவே அந்தந்த மாதங்களில் மருந்துகளை பாதி விலைக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பூச்சி மருந்துகளை விவசாயிகள் எப்படி உபயோகப்படுத்த வேண்டும் என்பதை அந்தந்த உத்யோகஸ்தர்கள் அதை விவசாயிகளுக்கு அறிவிக்க வேண்டும். அந்த மருந்துகள் எங்கேயெல்லாம் கிடைக்கும், எப்படி அவைகளை உபயோகப்படுத்த வேண்டும் என்பதையெல்லாம் விளம்பரப்படுத்த வேண்டும். மற்றும் சினிமா ஸ்லேடுகள் மூலம் அவைகளை விளம்பரப்படுத்த வேண்டும். என்னென்ன மருந்துகளை எப்பொழுது எப்படி உபயோகப்படுத்த வேண்டும் என்பதையெல்லாம் தெரியப்படுத்த வேண்டும். பயிர்களுக்குப் பூச்சி அடித்து மருந்துகள் இல்லையானால் விவசாயிகளுக்கு வெகுவாக நஷ்டம் ஏற்படுகிறது. இதை அரசாங்கம் ரொம்பவும் கவனிக்கவேண்டும்.

இந்த வருஷம் விதைப் பண்ணைகள் மூலமாகக் கொடுக்கப்பட்ட விதைகளில் பாதி முளைக்கவே இல்லை. குருவை விதைகள் அநேகமாக முளைக்கவே இல்லை. அதைப் போலவே விவசாயிகள் எடுத்து வைத்த விதைகளும் முளைக்கவே இல்லை. அதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டு பிடித்து அப்படி இனிமேல் நடைபெருமல் இருக்க சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்குக் காரணமும் இருக்கிறது. குருவை விதைகளை அன்றைக்கு எடுத்தவுடனேயே காய வைக்க வேண்டும். அவைகளை மூட்டைகளில் கட்டி வைக்காமல் பரப்பி வைக்க வேண்டும். சென்ற வருஷம் மழை அதிகப்படியாக பெய்ததால் விவசாயிகளால் அந்த விதைகளைப் பரப்பி வைக்கமுடியாமல் கட்டி வைத்திருந்ததால் அப்படி முளைக்காமல் போய் விட்டது. இதை ஜில்லா விவசாய அதிகாரிகள் விவசாயிகளுக்குத் தெரிவிக்க வேண்டும். விவசாயிகளுக்கு விதைகளை சப்ளை செய்யும் போது அவர்கள் இன்னும் அதிகப்படியாக ப்ரிமியம் கொடுத்தால் அவர்கள் இன்னும் அதிகமாக சப்ளை செய்ய முயற்சி எடுத்துக்கொள்ளுவார்கள். அப்பொழுது தான் அவர்கள் நல்ல விதைகளையும் கொடுக்க முன் வருவார்கள். இப்படிக் கொடுக்கப்படும் விதைகள் முளைக்காமல் போய் விடுவதால் யார் யார் எந்த விதைகள் அடங்கிய மூட்டைகளைக் கொடுத்தார்கள் என்று அவர்களுடைய பெயரை எழுதி அந்த மூட்டைகளின் பேரில் ஒரு லேபிலை ஒட்டி வைத்தால் யார் கொடுத்த விதை முளைக்க வில்லை என்று கண்டு பிடித்து அவர்களுக்கு அதைப்பற்றி தகவல் கொடுக்க வசதியாக இருக்கும். அதன் மேல் அந்த விதையை சப்ளை செய்தவர்பிற்பட்டு முளைக்கக் கூடிய நல்ல விதைகளாகச் சப்ளை செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கும் வசதியாக இருக்கும். ஆகவே விதைகளை சப்ளை செய்கிறவர்களுடைய பெயரை அவர்கள் சப்ளை செய்யும் மூட்டைகளின் மேல் ஒட்டி வைக்கும் படியான நடவடிக்கைகளை எடுக்கும் படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயிகளுக்கு கடன் வசதி கிடைக்கும் அளவில் ரூரல் பாங்கு போன்ற பாங்குகளை அதிகமாக அமைத்துக்கொடுக்க வேண்டும். இப்பொழுது இருக்கிற பாங்குகளை விட இன்னும் அதிகப்படியான பாங்குகளை திறப்பதற்கு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும். கூட்டுறவு முறையில் சர்க்கார் கடன் கொடுத்து வருவதை இன்னும் அதிகமாகக் கொடுக்க முன் வரவேண்டும். இப்பொழுது கொடுக்கப்படும் கடன் போதாது. இதை அதிகப்படுத்தி, சூபர் பாஸ்பேட்டை முன்பு அரசாங்கம் பாதி விலைக்குக் கொடுத்தார்கள். சப்சிடி மூலமாக அப்படிக் கொடுத்து வந்தார்கள். இப்பொழுது இரண்டு மூன்று வருஷங்களாக கொடுக்க வில்லை. நைட்ரஜன் உரத்தை விவசாயிகள் உபயோகிப்பது இல்லை. அதில் அவர்களுக்கு நம்பிக்கை இருப்பதாகத் தெரியவில்லை. அமோனியம் சல்பேட் போட்டால் பயிர்கள் நன்ருக பச்சையாக இருக்கிறது. அதனுல் விவசாயிகளுக்கு அதில்தான் நம்பிக்கை இருக்கிறது. அதனுல் நைட்ரஜன் உரத்தில் விவசாயிகள் அதிகப்படியாகக் கவனம் செலுத்துவது இல்லை. அதனுல் விவசாயிகள் அதில் அதிகப்படியான கவனம் செலுத்துவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

ஆவணி மாதங்களில் விதைக்கக்கூடிய விதைகளை அதற்கு முன்ன தாகக் கொடுக்கிறார்கள். ஆவணி மாதத்தில் மழை பெய்து விட்டால் அந்த விதைகளை ஆவணி மாதத்தில் விதைக்காமல் ஐப்பசி மாதத்தில் விதைக்கிறார்கள். அதனால் அந்த விதைகள் நல்ல முறையில் முளைப்ப தாக இல்லை. ஆகவே விவசாய இலாகா விதைகளைச் சப்ளை செய்யும்போது குறுகிய காலத்தில் முளைக்கக்கூடிய விதைகளை சப்ளை செய்யும்படியாக ஏற்பாடு செய்ய வேண்டும். அப்படி சப்ளை செய்தால் விவசாயிகள் நல்ல பலனை அடைய வசதியாக இருக்கும். ஆவணி மாதத்தில் விதைக்கும் விதைகளை ஐப்பசி மாதத்தில் விதைத்தால் அவர்களால் நல்ல பலன் அடைய முடிவதில்லை. அதற்குத் தக்கவாறு விதைகளை எந்தெந்த மாத ங்களில் விதைக்க வேண்டுமோ அந்தந்த மாதங்களில் மழையைப் பார்த்துக் கொண்டு விதைகளை விதைக்கும்படியாக சப்ளை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இன்னும் விதைகளை துரிதமாகச் சப்ளை செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டு இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்ளு கிறேன்.

*SRI S. RAMASAMI THEVAR : கனம் தலைவி அவர்களே, கனம் மந்திரி அவர்கள் நமக்குக் கொடுத்திருக்கும் அறிக்கையைக் கண்டு நாம் அதிகமாக மகிழ்ச்சி அடைய முடியாது. நாட்டில் உணவு நிலை சகஜ நிலை யாக இருக்கிறது என்று கூறியிருந்தும்கூட உணவு தானியங்களின் விலை வாசிகள் விஷம் போல் ஏறிக்கொண்டிருப்பதைக் கண்டு நாம் கவலைப்பட வேண்டியதாக இருக்கிறது. அதனால் இப்படி விலைவாசிகள் ஏறிக் கொண் டிருப்பதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டு பிடிக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரங்களை வைத் துக்கொண்டு இதை தீர்மானித்து விடக் கூடாது. நாட்டின் உணவு நிலை நன்றாக இருக்க ஐந்து ஆண்டு திட்டத்தைக் காரணம் காட்டி பல புள்ளி விவரங்களை கொடுக்கிறார்கள். அப்படி புள்ளி விவரங்களைக் கொடுப்பதால் தான் இப்படி விலைவாசிகள் ஏறுகின்றன. இந்தப் புள்ளி விவரங்களைக் கொடுக்கும் கணக்குப் பிள்ளைகள் சரியானபடி புள்ளி விவரங்களைக் கொடுக்கிறார்களா என்பதை நாம் கண்டு பிடிக்க வேண்டும். அவர்கள் எல்லோரும் நகரங்களில் உட்கார்ந்து கொண்டு புள்ளி விவரங் களைத் கொடுக்கிறார்கள். அதை வைத்துக்கொண்டு அரசாங்கமும் கணக்கு களை தயாரிக்கிறார்கள். அதனால் அவர்கள் கொடுக்கும் புள்ளி விவரங்கள் சரியானது அல்ல. கிராமங்களில் உள்ள தரிசு நிலங்களில் எல்லாம் விவசாயம் நடக்கிறது என்று கணக்குப் பிள்ளைகள் நகரங்களில் உட்கார் ந்து கொண்டு கணக்கு எழுதி விடுகிறார்கள். இந்த முறையை நாம் சற்று ஆராய்ந்து பார்க்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. ஆகவே கணக்குப் பிள்ளைகள் நல்ல முறையில் தீர்க்கமாகப் போகும்படி அவர் களுக்கு அரசாங்கம் ஓர் உத்தரவு போடும் படியாகக் கேட்டுக்கொள்ளு கிறேன்.

அடுத்தபடியாக இந்த விலைவாசிகள் ஏற்றத்திற்குக் காரணம் என்ன என்பதை ஆராய வேண்டும். அதற்குக் காரணம் நடுத்தர வகுப்பினர் கள் இப்பொழுது அதிகப்படியாக கடன்பட்டிருக்கிறார்கள். எங்கே பார்த் தாலும் விவசாயிகள் கடன் வாங்கியிருக்கிறார்கள், வாங்கிய கடன்களைக் கட்ட முடியாமல் இருப்பதால் அவர்கள் சாகுபடி செய்யும் பொருள் கள் எல்லாவற்றையும் வியாபாரிகளுக்குக் குறைந்த விலைக்கு விற்க வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். அதோடு அவர்கள் விற்ற தானியங் களை அவர்களே வாங்கும்போது அதிகப்படியான விலை கொடுத்து வாங்கி வருகிறார்கள். அதனால் விவசாயிகள் கடன் பட்டு அவர்களால் வாங்கிய கடனைக்கொடுக்க முடியாமல் சாகுபடி செய்வதையும் நிறுத்தி விடுகிறார் கள். இதுதான் தானியங்களின் விலை உயர்வுக்குக் காரணமாக இருக்கிறது. இது வியாபாரிகளுடைய சூழ்ச்சியாக இருக்கிறது. இப்படிப்பட்ட சூழ் ச்சியாலும் விவசாயிகள் கடன்காரர்களாக இருப்பதாலும் இப்படி விலைவாசி கள் உயர்ந்திருக்கிறது. ஆகவே விவசாயிகள் கடன் வாங்குவதைக் குறைக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்க முன் வரவேண்டும்.

விவசாயிகளுக்கு விவசாயம் செய்வதில் ஊக்கம் குறைந்து வருகிறது. அதற்குக் காரணம் விவசாயிகளுக்கு வேண்டிய காலங்களில் உரம் முத லியவைகள் சரியானபடி சப்ளை செய்வது இல்லை. காலா

[Sri S. Ramasami Thevar] [10th September 1958

காலத்தில் அவர்களுக்கு வேண்டிய அளவில் உரம், கடன்கள், மற்ற வசதிகள் கிடைப்பது இல்லை. அப்படிக் கிடைத்தாலும் அதனுல் அவர்களுக்கு பல அல்லல்களும் இடைஞ்சல்களும் ஏற்படுகின்றன. பல கஷ்டங்களையும் அவர்கள் அனுபவிக்க வேண்டியதாக இருக்கிறது. கடன் கிடைப்பது என்ருலும் அவர்கள் பல மாதங்கள் அதில் அவர்கள் செலவிட வேண்டியதாக இருக்கிறது. உரம் மற்றவைகள் எல்லாம் விவசாயிகளுக்குக் காலாகாலத்தில் கிடைக்கும்படி அரசாங்கம் அதிகாரிகளுக்கு வலியுறுத்த வேண்டும்.

இன்னும் சில பகுதிகளில் செட்டில்மெண்ட் ஆகாமல் இருக்கிறது. அங்கேயெல்லாம் பத்து அல்லது பதினேரு வருஷ வாய்தாவை, வரியை, ஒரே காலத்தில் வசூலிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிருர்கள். அதனுல் விவசாயிகள் பல கஷ்டங்களை அனுபவிக்கிருர்கள். அப்படி வசூலிக்கும் போது உடனே வரியைக் கொடுக்கா விட்டால் ஜப்தி முதலிய நடவடிக்கைகளை கார்த்திகை மார்கழி மாதங்களில் கூட எடுத்துக்கொள்ளுகிருர்கள். அதனுல் விவசாயிகள் விவசாயத்தில் முழு கவனம் செலுத்த முடியவில்லை. அதற்கு வேண்டிய அவகாசமும் இல்லை. அவர்களுக்கு உற்சாகம் ஏற்படுவதும் இல்லை. இதை மாற்றி அமைக்க வேண்டும். அவர்களுக்குக் விவசாயத்தில் உற்சாகம் ஏற்படக்கூடிய அளவில் அவர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். கடன் வசதி முதலியவைகள் அவர்களுக்குச் செய்து கொடுக்க வேண்டும். கடன்பட்டிருப்பதால் தங்களுக்குக் கிடைக்கும் தானியங்களை குறைந்த விலைக்கு வியாபாரிகளுக்கு விற்றுவிட்டு தங்களுக்கு அதே தானியங்களை வாங்கும்போது அதிகப்படியான விலை கொடுத்து வாங்க வேண்டியதாக இருக்கிறது. இதைப் போக்க அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள முன் வர வேண்டும் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நமது சர்க்கார் சிறு நீர்ப்பாசனத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வருகிருர்கள். அப்படியிருந்தும் அது வாயளவில் இருக்கிறதேயொழிய செயலளவில் இல்லை. என்னுடைய தாலூக்காவில் சில காட்டாற்றின் தண்ணீர் எல்லாம் கடலுக்குப் போகிறது. அது பல கிராமங்களுக்குப் பாயலாம். சில நீர்த் தேக்கங்களைக் கட்டிஞல் அந்தத் தண்ணீரை நாம் தேக்கி விவசாயத்திற்குப் பயன்படுத்திக்கொள்ளலாம். ஆனல் அரசாங்கம் அதைச் செய்வதாகக் காணேம். வெள்ளார், பாம்பாறு, திருனூர் கடைகால் முதலிய ஆறுகளில் தண்ணீர்த் தேக்கங்கள் கட்டித் தேக்கினுல் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டு வந்து உணவு தானியத்தை பெருக்கிக்கொள்ளலாம். பெரும் அளவில் தானிய உற்பத்தி செய்து கொள்ளலாம். இப்படி பல தேக்கங்களைக் கட்டினுல் இன்னும் அதிகமான விளைச்சலைப் பெறலாம். அதன் மூலம் நம்முடைய நாட்டிலுள்ள பற்றுக்குறையைப் போக்கிக்கொள்ளலாம். நாம் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய அளவில் உற்பத்தியைப் பெருக்கிக்கொள்ளலாம் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக சர்க்கார் பல காரியங்களைச் செய்யத் தவறி விட்டார்கள். ஆவடையார் கோவில் தேவஸ்தானத்திற்குப் பல கிராமங்கள் இருக்கின்றன. அவைகளில் உள்ள குளங்கள் எல்லாம் மராமத்து செய்யப்படாமல் இருக்கின்றன். காரணம் சர்க்கார் அந்த கிராமங்களை எடுத்துக் கொண்டு விடுவார்கள் என்று நினைத்துக்கொண்டு கோவில்காரர்கள் அவைகளைக் கவனிக்காமல் இருக்கிருர்கள். சர்க்கார் அக் கிராமங்களை உடனடியாக வசப்படுத்தி அப்படிப்பட்ட குளங்களை எடுத்து மராமத்து செய்தால் அதிகப்படியான தண்ணீரைத் தேக்கி நல்ல விவசாயத்தைச் செய்யலாம். அதைப் பற்றி நமக்கு என்ன கவலை என்று நினைக்கிருர்கள். அந்தக் குளங்
10-40 p. m. களை எடுத்து மராமத்து செய்தால் அவைகளைக்கொண்டு நல்ல சாகுபடி செய்யலாம். இப்பொழுது தண்ணீர் வசதி இல்லாமல் இருப்பதால் அங்குள்ள விவசாயிகள் கஷ்டப்பட வேண்டியதாக இருக்கிறது. ஆனுல், சர்க்காருடைய முழுக் கவனமும் சிறு நீர்ப்பாசன விஷயத்தில் செலுத்தப்படவேண்டும். எந்த எந்த இடங்களிலே வசதி இருக்கிறதோ, எந்த எந்த இடங்களிலே அமைக்க முடியுமோ அங்கெல்லாம் உடனடியாக

10th September 1958] [Sri S. Ramasami Thevar]

வசதிகள் செய்துகொடுக்கப்பட வேண்டும். இன்ஜினீர் கிடைக்கவில்லை, சாமான் கிடைக்கவில்லை என்று இதற்காகச் சாக்குகள் சொல்லாமல், இலகுவாகச் செய்யக்கூடிய வேலையைச் சீக்கிரமாகப் பின்பற்றவேண்டுமென்று நான் சர்க்காருக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது உணவு நிலைமை திருப்திகரமாக இருக்கிறது என்று நாம் மகிழ்ச்சி அடையக் கூடாது. புள்ளி விவரங்களைக் கொண்டு நாம் கணக்கிடக்கூடாது. சர்க்கார் இன்னும் அதிக கவனம் செலுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயிகளுக்கு வேண்டிய உபகரணங்கள், உழவுக் கருவிகள், வண்டிப் பட்டைக்கான இரும்பு போன்றவைகளின் விலை அதிகரித்து விட்டதினாலே, அனைகளும் இலகுவாகக் கிடைக்கக்கூடிய வகையிலே விவசாயிகளுக்கு நாம் உதவி அளித்து அவர்களை உற்சாகப்படுத்த வேண்டும். அவர்கள் கடனாளியாக இருக்கும் நிலை மாறவேண்டும். அவர்கள் நல்ல வாழ்வு வாழ்வதற்கு அரசாங்கம் வகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

*SRIMATHI A. S. PONNAMMAL: மதிப்பிற்குரிய தலைவி அவர்களே, நம்முடைய இந்த நாட்டில் அதிகப்படியாக உணவு உற்பத்தி செய்திருந்தபோதிலும், விலைவாசிகள் அதிகமாக இருந்துகொண்டிருக்கின்றன என்பதை நாம் யாரும் மறுக்க முடியாது. இன்றைக்கு ஜப்பான் நாட்டை எடுத்துக்கொண்டால், அங்கு இயற்கையோடு போராடி, கடலிலே கூட அவர்கள் விவசாயம் செய்கிறார்கள் என்பதைக் காணும்போது நான் மிகவும் ஆச்சரியப்பட்டேன். ஆனால், நம்முடைய நாட்டில், நம்முடைய கட்சிகள் வேறு பல வகைகளிலே நாட்டை எப்படிப் பிரிக்கவேண்டும் என்பதிலே போராடுகிறார்களே தவிர, எங்கெங்கே விவசாய உற்பத்தியை எப்படி எப்படி பெருக்கவேண்டும் தரிசு நிலங்களிலே என்ன செய்ய வேண்டும் என்று மக்கள் மத்தியிலே சொல்வது கிடையாது என்று தான் எங்களைப் போன்றவர்கள் கருத வேண்டியதாக இருக்கிறது.

இன்றைக்கு ஜப்பானில் சாண் நிலத்தைக் கூட காலியாகப் போடாமல், மூங்கில் படகு செய்து, அதில் புழுதி மண் போட்டு, நெல்லை விதைத்து, கடலிலே மிதக்க விடுகிறார்களாம். அந்த அளவு நாம் இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். நம்முடைய நாட்டில் அதிகப்படியான தரிசு நிலங்களும் விவசாயத்திற்கு லாயக்கற்ற நிலங்களும் அதிகமாக இருக்கின்றபடியால் ஷை நிலங்களை நல்ல முறையில் பண்படுத்த ஜப்பான் நாட்டிலிருக்கும் 'Kutzs' என்ற புல்லை இறக்குமதி செய்து அதை ஷை நிலங்களில் போட்டால் அவைகள் வளர்ந்து மண் மிருதுவாக ஆகி நல்ல சத்து உள்ள விவசாயத்திற்குத் தகுதியான நிலங்களாக மாற்றி விடுவதாகத் தெரிகின்றது. எனவே, நம்முடைய விவசாய டெமான்ஸ்ட்ரேட்டர்கள் மூலமாக அந்தப் புல்லை ஜப்பான் நாட்டிலிருந்து வரவழைத்து, எங்கெங்கே விவசாயத்திற்கு அனுகூலம் இல்லாத நிலங்கள் நம்முடைய நாட்டில் இருக்கின்றனவோ அந்தந்த இடங்களில் இந்த 'கூட்ஸ்' புல்லைப் போட்டு, அதன் மூலம் உணவு உற்பத்தியைப் பெருக்கினால், நம்முடைய நாட்டில் உற்பத்தி பெருகி, உணவுப் பொருள்களின் விலைவாசி ஏற்றமும் குறைந்து நாம் வெளிநாட்டுக்கும் கூட கொடுத்துக்கொண்டிருப்போம் என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

விவசாயத்திற்கு வேண்டிய உரம் காலா காலத்திலே கிடைப்பதில்லை. கறுப்பு மார்க்கெட்டிலே கூட இவைகளை வாங்கக்கூடிய நிலைமை அனேக இடங்களில் ஏற்படுகிறது. அரசாங்கம் நிர்ணயித்திருக்கும் விலை ரூ. 39 ஆக இருந்தால், வெளியிலே தனிப்பட்ட வியாபாரிகளிடமிருந்து வாங்கும்போது ரூ. 50 அளவுக்குக்கூட கொடுத்து வாங்கக்கூடிய நிலைமை இருக்கிறது, இதுவும் விவசாயிகளுக்குக் காலா காலத்தில் கிடைக்காமல்

இருக்கிறது. அதனால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். "ஆடிப் பட்டம் தேடி விதை" என்று சொல்வது போல் அந்தந்தப் பருவத்தில் தான் பயிர் செய்ய முடியும். ஆகவே, விவசாயிகளுக்கு எந்த எந்த காலத்தில் என்ன என்ன பொருள்கள் தேவையோ, அந்த அந்தக் காலத்தில் அந்த அந்த பொருள்கள் சுலபமாகக் கிடைக்கும்படி வழி செய்தால், நம்முடைய நாட்டில் உணவு அதிகமாக உற்பத்தி செய்ய முடியும். எனவே, அரசாங்கத்தாரால் குறிப்பிடப்பட்ட விலைக்கு மேல் விற்றால் அவர்கள் பேரில் தக்க நடவடிக்கை எடுத்து, உரங்கள் நல்ல முறையில் அரசாங்கத்தாரால் குறிப்பிடப்பட்ட விலையிலேயே விவசாயிகளுக்குக் கிடைக்கும்படியாக வழி செய்தால் சௌகரியமாக இருக்கும் என்று நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

விவசாயத்திற்கு மின்சாரம் கொடுப்பதிலே "கட்" என்று வந்தது. நான் அநுபவத்திலே கண்ட உண்மையைச் சொல்கிறேன். விவசாயிகள் தண்ணீர் இரைத்துக் கொண்டே இருக்கும்போது பாதி நிலத்திலே தண்ணீர் பாய்ந்து இருக்கும். திடீரென்று மின்சார சப்ளை நிறுத்தப்பட்டு விடும். நகரத்தில் சினிமாக்கள் முதலிய ஆடம்பர விஷயங்களுக்கும் யாதொரு தடையும் இல்லாமல் மின்சாரம் சப்ளை செய்யப்படுகிறது. ஆகவே, விவசாய உற்பத்தி மிகவும் முக்கியமானது என்பதைக் கருதி, சினிமாக்களுக்கு முதலிலும், விவசாயத்திற்கு அடுத்தபடியும் என்று இருப்பதற்குப் பதிலாக, விவசாயிகளுக்கு முதலிலும், நகரத்திலே மற்ற விஷயங்களுக்கு அடுத்தபடியும் என்ற முறையிலே ஏற்பாடு செய்வதோடு, விவசாயத்திற்கு மின்சார சப்ளை செய்யும் விஷயத்தில் "கட்" இல்லாமல் செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். இதுவிஷயத்தில் மின்சார அமைச்சர் அவர்களும் வேண்டிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று நான் பணிவோடு கேட்டுக் கொள்ளுகின்றேன்.

ஐந்து வருஷக் கடனிலும், மூன்று வருஷக் கடனிலும் பம்ப் செட்டுகள் கொடுக்கிறார்கள். மூன்று வருஷக் கடன் திட்டப்படி, ஒரு வருஷத்திற்கு ரூ. 400 கட்ட வேண்டுமென்ற நிலைமை ஏற்படுகிறது. மூன்று ஆண்டுகளுக்குள்ளே கடனைத் திருப்பிக் கொடுக்க விவசாயிகளால் முடியாத காரணத்தால், அவர்கள் நிலத்தையோ மாட்டையோ விற்றுத்தான் கடனைக் கட்ட வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆகையால் ஐந்து ஆண்டுத் தவணைகளில் பம்ப் செட் கடனைத் திரும்ப வசூல் செய்யும் நிலைமையை ஏற்படுத்த வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகின்றேன். அப்படிச் செய்தால், எல்லா விவசாயிகளுக்கும் ஒரே மாதிரியாக இருக்குமானால், விவசாயிகளுக்கு ஆதரவாக இருக்கும்.

இன்றைக்கு நாம் எங்கெல்லாம் தரிசு நிலங்கள் இருக்கின்றனவோ, அவைகளை விவசாயிகளுக்கு வினியோகம் செய்து வருகின்றோம். என்னுடைய நிலக்கோட்டை தாலூகாவில் நாச்சிகுளம் கிராமத்தில் காட்டுப்பட்டி என்ற கிராமத்திற்கு அருகில் பெரியாறு **main channel** ஓடிக் கொண்டிருக்கிறது. அங்கே பாலத்திற்கு மேல்புறம் **channel**-க்கு இருபுறமும் விவசாயம் செய்யப்பட்டு வருகின்றது. ஆனால் பாலத்திற்குக் கிழக்குப்புறம் **channel**-க்கு இருபுறமும் அதிகப்படியான நிலங்கள் தரிசு கிடக்கின்றது. அதாவது 125 ஏக்கராக்கள் நிலம் தரிசாகக் கிடைக்கின்றது. அதிலே ஒரு சில நிலம் படைத்த முதலாளிகள் மேய்ச்சலுக்கு வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். மேய்ச்சலுக்கு ஒதுக்க வேண்டுமானால், 50 ஏக்கரா நிலம் மேய்ச்சலுக்கு என்று ஒதுக்கிவிட்டு பாக்கி 75 ஏக்கரா நிலங்களை ஆங்காங்கே இருக்கும் ஹரிஜன விவசாயிகளுக்கும் பிற்பட்ட ஏழை மக்களுக்கும் உடனடியாகச் சாகுபடி செய்வதற்குக் கொடுக்கலாம் என்று உத்தரவு போட்டும் அங்கே ஓரளவுக்கு அதிகப்படியான உணவு உற்பத்தி செய்யமுடியும் என்று அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். எனவே, அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று விவசாயப் பெருங்குடி மக்கள் சார்பில் நான் கேட்டுக் கொள்கிறேன்.

10th September 1958] [Srimathi A. S. Ponnammal]

நில வெளியேற்றம் மேலூர் தாலுகாவில் அதிகப்படியாக நடந்து கொண்டிருக்கிறது என்று கிராம தான கிராமங்களிலிருந்து எங்களுக்குப் பல மனுக்கள் வந்துகொண்டிருக்கின்றன. 60, 40 சட்டம் நல்ல முறையில் நடைமுறையில் இல்லாதது காரணமாக, இந்தச் சட்டத்தை ஏழை விவசாய மக்களுக்கு எதிராகச் சிலர் கையாண்டு, எப்படியாவது நிலத்தை விட்டு வெளியேற்றுகிறார்கள். இதில் அமைச்சர் அவர்கள் நடவடிக்கை எடுத்து, எப்படியாவது விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்படாது காப்பாற்ற வேண்டும். அந்த அளவுக்கு வழி வகை செய்தால், அங்கிருக்கும் ஆயிரக் கணக்கான விவசாயப் பெருங்குடி மக்களுக்குப் பெரிய உதவியாக இருக்குமென்று நான் கருதுகிறேன்.

கிராம தான கிராமத்தைப் பற்றியும் அங்கே அவர்களுக்கு விவசாயத்திற்குக் கொடுக்கப்படும் கடன்கள் ஒரு ஆண்டுக்குள்ளே திருப்பி வசூல் செய்யப்படுகின்றன. அப்படி வசூலிப்பதன் காரணமாக அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். வத்தலைக் குண்டு பிர்க்காவில் 30, 40 கிராம தான கிராமங்களில் வறண்ட நிலை காரணமாக மக்கள் உணவு உற்பத்தி செய்ய முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். ஒரு ஆண்டுக்குள் கடனைத் திருப்பிக் கொடுக்கவேண்டுமென்று இருப்பதற்குப் பதிலாக, ஐந்து ஆண்டுகளில் சுலபமான தவணைகளில் திரும்பவும் வசூல் செய்யக் கூடிய அளவு வசதி செய்தால் அதுவும் ஒரு பெரிய உதவியாக இருக்கும்.

கடைசியாக, பூச்சி மருந்து அடிப்பதற்கு ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஸ்பேரயர்கள் ஒதுக்கியிருக்கிறார்கள். மதுரை ஜில்லாவுக்கு சென்ற ஆண்டில் ஒதுக்கியதிலே மூன்றிலொரு பாகம் பூச்சி மருந்து அடிக்கும் ஸ்பேரயர் கொடுக்கப்படாமலிருக்கிறது. எங்கெங்கெல்லாம் விவசாயிகளுக்கு பூச்சி மருந்தோ, விவசாயக் கருவிகளோ தேவையாக இருக்கின்றனவோ, அங்கெல்லாம் கால தாமதம் செய்யாமல், உடனடியாக அவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்தால், அவர்கள் உணவு உற்பத்தியை ஓரளவு அதிகப்படுத்தி, பற்றுக்குறையைப் போக்க முடியும், விலைவாசியும் குறையும் என்று தெரிவித்துக்கொண்டு, உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri K. SATTANATHA KARAYALAR** : கனம் தலைவி அவர்களே, உணவுப் பிரச்னையானது அகில இந்திய அடிப்படையிலேயும், ஓரளவு மாகாண ரீதியிலேயும் பார்க்க வேண்டிய ஒரு பிரச்னையாகும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் லட்சிய வரம்பை நாம் எட்டிப் பிடித்த பாடாக இல்லை. இது அகில இந்திய ரீதியாக வெள்ளப் பெருக்கத்தால் பஞ்சம் ஏற்பட்ட பல காரணங்கள் குறிப்பிடப்படுகின்றன. நமது மாகாணத்தைப் பொருத்த மட்டில், உணவு உற்பத்தி 46 லட்சம் டன்னாக 1956–57ல் வந்திருந்தது. அது ஏற்கெனவே திட்ட மிட்ட திட்டத்திலே சுமார் ஒரு லட்சம் 50 ஆயிரம் டன் குறைவாக இருக்குமென்று தோன்றுகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின 56–57வது ஆண்டு திட்டத்திலும் அவ்வளவு குறைவு ஏற்பட்டுள்ளது. அதேபோல் இரண்டாவது ஆண்டிலும் கூட, எந்த அளவு குறைவு ஏற்பட்டிருக்கிறது என்பதற்குத் திட்டவட்டமான புள்ளி விவரம் இல்லை. ஆனால், இந்த அடிப்படையிலே ஏன் நாம் திட்டமிட்ட லட்சியத்தை எட்டிப் பிடிக்க முடியவில்லை. ஏன் குறைந்து இருக்கிறதென்பதைப் பார்த்தால், இந்த அறிக்கையிலே விவரம் கொடுக்கப்படவில்லை. அதோடு மாத்திர மில்லாமல், அகில இந்திய ரீதியிலும் நமது மாகாண ரீதியிலும் பல பாங்குகள் மூலமாகவும், ஷெட்யூல் பாங்குகள் மூலமாகவும் மிகப் பெரிய தொகை இன்று நெல் முதலிய உணவுத் தானியங்களுக்காகக் கடனாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. குறிப்பாக, 1958-ம் ஆண்டிலே ஷெட்யூல் பாங்குகள் மாத்திரம் 1396 லட்சத்திற்கு நெல் அரிசி இந்த இரண்டு இனத்திற்குக் கடன் கொடுத்திருக்கிறது. இதிலே 11 சதமானம் நம்முடைய மாகாணத்தில் இருக்கும். கழிந்த 10 50 a.m.
பல ஆண்டுகளின் புள்ளிவிவரத்தைப் பார்த்தால், எந்த அளவு உணவு தானியங்களுக்குக் கடன் கொடுத்திருக்கிறோம் என்று தெரிகிறது. கணிசமாக விலை ஏறுவதற்கு இது சந்தர்ப்பம் அளிக்கிறது. இதை அவசியம் தடுத்தாகவேண்டும். இதில் ஒருகால் நமது சர்க்காருக்கு நேரிடையாகக் கண்டிரோல் இல்லையென்று சொல்லலாம். ஆனால் இதனால் ஏற்படுகிற யதார்த்த நிலையை எடுத்துக் காட்டி ஷெட்யூல் பாங்குகள் இந்தக் கடனைச்

[Sri K. Sattanatha Karayalar] [10th September 1958

கொடுப்பதை நிறுத்த வேண்டுமென்ற கண்டிப்பான உத்தரவு பிறப்பிக்க வேண்டும். இல்லாவிட்டால் சென்ற ஆண்டைவிட இரண்டு பங்கு அதிகமாக இவ்வாண்டில் கொடுக்கலாம். அதனுல் தக்க பலன் ஏற்பட முடியாது. விலேவாசி குறைவும் ஏற்பட முடியாது.

அடுத்தாற்போல உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பலதிட்டங்கள் நம் ராஜ்யத்தில் அடிபடுகின்றன. குறிப்பாக விஞ்ஞானத் துறையில் ஆராய்ச்சி செய்து பல அரிய முறைகளையெல்லாம் கையாளவேண்டு மென்று சொல்லப்படுகிறது. 112 முறைகளுக்கு மேல் கையாளலாம் என்று புள்ளிவி வரங்கள் மூலமாகப் பலதரப்பட்ட நிலங்களில் எப்படி சாகுபடி செய்வது என்று கொடுத்திருக்கிருர்கள். நம்முடைய ராஜ்யத்தில் கல்டிவபிள் வேஸ்ட் லாண்ட்ஸ் 25 ஆயிரம் ஏக்கரா சொச்சம் இருப்பதாக ஆகிறது. இவைகளில் பயிரிடுவதற்குத் தகுந்த பொறுக்கு விதை நமது ஆராய்ச்சியின் மூலம் கண்டுபிடிக்கப்பட்டிருப்பினும் அவை இன்னமும் பயிரிடப்படாமல் இருப்பதற்குக் காரணம் என்னவென்று தெரியவில்லே. சென்னே ராஜ்யத்தில் பஞ்சமும், பிணியும் இல்லேயென்று சொல்லி ஓரளவு சந்தோஷப்படுவதில் அர்த்தமில்லே. நமது ராஜ்யம் உணவு உற் பத்தியில் உபரியாக இருக்கக்கூடிய நிலேமை இருக்கிறது. நல்ல பொறுக்கு விதைகளே எல்லாம் தயாரிக்கக்கூடிய விதைப் பண்ணேகள் இருப்பினும் நல்ல முறையில் விவசாயிகளுக்கு விதை கிடைப்பதில்லே. புதுமுறைச் சாகுபடியில் விவசாயிகளுக்கு நம்பிக்கை வருவது இல்லே. ஒருவேளே அதற்குக் காரணம் கொடுக்கக்கூடிய விதையின் தரம் மிகமிக மோசமாக இருக்கலாம். அல்லது அந்த விதைகளே உபயோகிப்பதனுல் அடையக்கூடிய லட்சியத்தைப் பற்றியோ, அவ்விதைகளின் தன்மையைப் பற்றியோ விவ சாயிகள் புரிந்து கொள்ளாமலும் இருக்கலாம். அதோடு நேரிடையாக நிலத்தில் விவசாயம் செய்பவர்களுக்கும், விவசாய இலாகா அதிகாரி களுக்கும் தொடர்பு இல்லாத காரணம் தான் இந்தக் குறைபாட்டுக்குக் காரணம்: ஆகவே எனது தீர்மானத்தில் நான் இந்தக் குறைபாட்டை நீக்கவே ஒரு வழி சொல்லியிருக்கிறேன். எல்லாக் கட்சிகளேயும் உள் படுத்திய ஒரு கமிட்டியை நிரந்தரமாக ஏற்படுத்தி, ஒரு கோ-ஆர்டினேஷனே ஏற்படுத்தி, பஞ்சாயத்து மூலமாக வரப்போகிற ஜில்லா வளர்ச்சி மன் றங்களின் மூலமாகவும் ஒரு தொடர்பையும் ஏற்படுத்திக் கொடுத்தால் உணவுப் பிரச்சனேயை சரியான முறையில் அணுக முடியும். இப்போது ஏதோ நடந்துகொண்டு போகிறது, அப்படியே நடந்துகொண்டு போ கட்டும் என்று விடுகிற கண்ணேட்டம் சரியாகாது. திடீரென்று ஒரு பெரிய வறட்சி ஏற்பட்டால் அதன் காரணமாக வருகின்ற நெருக்கடி மிகமிக பயங்கரமானதாக இருக்கும். அப்படிப்பட்ட நிலேமை எப்போது வரும் என்று சொல்வதற்கில்லே. அப்படிப்பட்ட நிலேமையே வராது என்று கொள்கிற மனேபாவம் சரியல்ல. வந்தால் அதற்குத் தக்க நிலேமையில் நாம் இருக்கவேண்டும் என்கிற கண்ணேட்டத்தின் அடிப்படையில் காரி யங்களேச் செய்யவேண்டிய நிலேமையில் நம் கொள்கை இருக்கவேண்டும். இப்படிப்பட்ட கண்ணேட்டத்துடன் காரியங்கள் நடைபெருத காரணத்தினுல் தான் யு. பி. போன்ற இடங்களில் இப்போது ஒரு பயங்கர நிலேமை ஏற்பட்டிருக்கிறது.

அதோடு மாத்திரம் அல்ல. நாம் பல சட்டங்களே நிறைவேற்றியிருக் கிறேம். நியாயவாரச் சட்டம், சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டம் போன்ற வைகளே நாம் கொண்டு வந்திருக்கிறேமே தவிர அவை எந்த முறையில் நமது ராஜ்யத்தில் அமுலுக்கு வந்திருக்கிறது என்பதைச் சரியாக அறிந்து கொள்ள முடியவில்லே. சட்டமியற்றி இரண்டு வருஷங்களுக்கு மேலாகி விட்டது. பல மாவட்டங்களில் இப்படிப்பட்ட சட்டம் இருப்பதாகக்கூட பல விவசாயிகளுக்குத் தெரியாத நிலேமை இருக்கிறது. இந்தச் சட்டத்தைத் தெரிந்து கொண்டு உரிமையைக் கேட்கக் கூடிய இடங்களில். நிலத்தைப் பயிரிடாமல் தரிசாகப் போட்டுவிடும் மனப்பான்மையும் வளர்ந்து வருவதா கத் தெரிகிறது. இதைப்பற்றியெல்லாம் நன்கு விசாரித்து அந்தக் கமிட்டி ஆலோசனே செய்வதற்கு முடியும். அதோடு நம் நாட்டில் உள்ள புறம்போக்கு நிலங்களேயெல்லாம் சாகுபடிக்குக் கொண்டுவருவதற்கும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியும். ஆகவே இந்த உணவுப் பிரச்

10th September 1958] [Sri K. Sattanatha Karayalar]

சனையை சமாளிப்பதற்கு எல்லாக் கட்சியினர்களையும் கொண்ட நிரந்தரக் கமிட்டி ஒன்றை நிறுவி அதன்மூலம் ஆவன செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

*SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : கனம் தலைவி அவர்களே சென்னை ராஜ்யத்தில் உள்ள பொதுவான உணவு நிலைமையை எடுத்துச் சொல்லும்போது கனம் அமைச்சர் அவர்கள் 'கேரளாவில் பற்றுக் குறை இருக்கிறது. அண்மையில் உள்ள ஆந்திராவில் அதிகமாக ஐந்தாறு லட்சம் டன் உணவு உற்பத்தி செய்கிறார்கள், அதே சமயத்தில் மைசூரில் தன்னிறைவு பெற்றிருக்கிறார்கள் தமிழ்நாட்டில் திருப்திகரம்' என்று சொல்லியிருப்பது குறிப்பிடத்தக்க விஷயம்தான்.

நாம் உணவு உற்பத்தியில் பின் தங்கிவிடவில்லையென்று குறிப்பிடா விட்டாலும் பருவ மழை நமக்குச் சாதகமாக இருந்திருந்தால் இன்னும் அதிகமாக உணவு உற்பத்தி செய்யலாம் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

அதோடு அகவிலை ஒருமுகமாக ஏறிக்கொண்டிருப்பதைப்பற்றி பலரும் பேசினார்கள். அகவிலை பற்றிப் பேசும்போது உணவு தானியங்களின் விலையை மட்டும் எடுத்துக் கொண்டு பேசிவிட்டால் போதாது. உணவு உற்பத்திக்குப் பயன்படுகிற சாமான்கள், விவசாயிகள் வாங்கி உபயோகப் படுத்துகிற சட்டி பானைகள், ஆடை அணிகள் எல்லாவற்றையும் கவனிக்க வேண்டும். ஒன்னறை அணு விற்றுக்கொண்டிருந்த மண் சட்டி இப்போது எட்டு அணுவாக உயர்ந்திருக்கிறது. இப்படி இதர பொருள்கள் எல்லா வற்றினுடைய விலையும் உயர்ந்து கொண்டே போகும்போது உணவு தானியங்களின் விலை ஏறுவதைப் பற்றி மட்டும் அதிகமாகப் பேசுவதில் பயன் இல்லை.

பொதுவாக இன்று உலகில் தொழில் அபிவிருத்தி கண்ட பல நாடுகளை எடுத்துப் பார்த்தால் தெரியும். விவசாயத்தில் 10 சத விகிதம் அபிவிருத் தியைக் கூட அந் நாடுகள் அடையவில்லை. ஆகவே விவசாயத்தில் நாம் இன்றைய தினம் 10 சத விகிதம் முன்னேறி அபிவிருத்தியைப் பெருக்கி இருக்கிறோம் என்று சொன்னால் அது போற்றத்தக்க விஷயமாகும்.

அதோடு விவசாயிகளுக்கு நாம் மாடு கொடுக்கிறோம். விதை கொடுக் கிறோம். உரம் கொடுக்கிறோம். இதனால் எல்லாம் விவசாயிகள் அதிகம் அபிவிருத்தி அடைந்திருக்கவில்லையா என்றால் சில இடங்களில் அப்படி அடைய வில்லையென்றுதான் சொல்ல வேண்டும். குறிப்பாக திருநெல் வேலி ஜில்லாவில் விவசாயி மாடு வைத்திருப்பான். வண்டி வைத்திருப் பான். போதுமான உரமும் சப்ளையாகி யிருக்கும். இருந்தாலும் அவ னுடைய நிலம் கால்வாய்க்கு மறு பக்கத்தில் இருக்கும். இந்தப் பக்கத் தில் இருந்து தலைச் சுமையாக எடுத்துக்கொண்டு அவன் பத்துப் பன் னிரண்டு முறை போய் வருவதற்குள் மனத் தளர்ச்சி அடைந்துவிடுகிறான். அதனால் ஒரு வண்டி உரம் அடிக்கவேண்டும் என்கிற வயலுக்கு அவனால் ½ வண்டிக்குமேல் அடிக்க முடியவில்லை. ஆகவே இப்படிப்பட்ட இடங் களில் எல்லாம் சிறிய பாலங்கள் நீர்ப்பாசன திட்டத்தின் கீழ் கட்டிக் கொடுக்கப்படவேண்டியது அவசியமாகும். மைனர் இர்ரிகேஷன் கீழ் இவைகள் கவனம் செலுத்தப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு 60, 40 சட்டம் கொண்டுவந்தோம், அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம் என்கிறபடி ஆகிவிட்டது. இந்தச் சட்டத்தினால் சிறிய நிலச்சுவாந்தார்கள்—பெண்கள்—கைம்பெண்கள்—இவர்கள்தான் பாதிக்கப் பட்டிருக்கிறார்கள். வழக்கு மன்றங்களில் வக்கீல்களை வைத்து வாதாட முடியாத நிலைமையிலும் இருக்கிறார்கள். திருநெல்வேலியில் எனக்குத் தெரிந்த வரையில் கூற முடியும். ஆகவே இந்தமாதிரியாக "60–40" வந்துவிட்டது. "60–40 வாரம்" நிர்ணயிக்கும் சட்டம் வந்துவிட்டதால் சிறு நிலச்சுவாந்தார்கள் மிகவும் மனச்சோர்வு அடைந் திருக்கிறார்கள். அவர்கள், முன்பெல்லாம் ஏழைக் குடியானவர்களுக்கு 11-10 a.m.

[Srimathi Rajathi Kunchithapatham] [10th September 1958

சகஜமாக 10–50 ரூபாய் கடன் கொடுத்துவந்தார்கள். இப்போது அவர்கள் மனச் சோர்வடைந்திருப்பதால், ஏழைக் குடியானவர்களுக்கு அவ்வாறு கடன் கொடுப்பதில்லை. அவர்கள் குடியானவர்களுக்குக் கடன் கொடுக்கும் வழக்கத்தை " 60–40 வாரச் சட்டம் " போக்கடித்து விட்டது. பண வசதி இல்லாத காரணத்தால் ஏழைக் குடியானவர்கள் சரிவர விவசாயம் செய்ய முடியாமல் இருக்கிறார்கள். ஆகவே இப்போது நெல்லை மாவட்டத்தில் பல்லாயிரக் கணக்கான ஏக்கர் நிலங்கள் விவசாயம் செய்யபடாத நிலங்களாக இருக்கின்றன.

மேலும், பெரிய அணைக்கட்டுத் திட்டங்களை எடுத்துக்கொண்டால், " வாசலோடு போனாலும் வீட்டுக்கு வராத மஹாலக்ஷ்மியைப் " போல அவை பல பகுதிகளில் இருக்கின்றன. மணிமுத்தாறு அணைக்கட்டுத் திட்டம் நெல்லை ஜில்லாவில் பல பகுதிகளில் அவ்வாறுதான் இருக்கிறது. மணிமுத்தாறு திட்டத்தில் முதலில் சேர்த்துக்கொள்ளப்பட்ட பிரதேசங்களைத் தவிர வேறு புதிய பிரதேசங்கள் சேர்த்துக் கொள்ளப்படவில்லை, சேர்த்துக் கொள்ளப்படுவதும் இல்லை. ஐந்து வருடங்கள் கழித்துத்தான் அவைகளைச் சேர்த்துக்கொள்ள முடியும் என்று ஜில்லா அதிகாரிகள் கூறுகிறார்கள். அத் திட்டம் உருவாக்கப்பட்டுவந்த சமயத்தில், சம்பந்தப்பட்டவர்கள் ஏனோ தானோ என்று இருந்துவிட்டதால், அவைகள் திட்டத்தில் சேர்க்கப்படாமல் போய்விட்டன. இதன் விளைவாக, விவசாயத்திற்குப் பயன்படுத்தக்கூடிய தண்ணீர் அருகே இருந்தும் அதைப் பயன்படுத்த முடியாத நிலைமை ஏற்பட்டு, மக்கள் அதிருப்தியடைந்து இருக்கிறார்கள். இந்தக் குறைகளைத் தீர்ப்பதிலும் அரசாங்கத்தார் சிரத்தை கொள்ள வேண்டும்.

மேலும், அவசர சந்தர்ப்பங்களில் உசிதமான உத்தரவுகளைப் போடுவதற்குரிய அதிகாரத்தை ஜில்லா அதிகாரிகளுக்குக் கொடுக்க வேண்டும். நெல்லை ஜில்லாவில் ஓர் இடத்தில் 400 ஏக்கர் நிலத்தில் விவசாயிகள் பயிரிட்டிருந்தார்கள். அவைகள் " அன்-ஆதரைஸ்ட் க்ராப்ஸ் ". ஆனால் அவை நன்றாக வளர்ந்திருந்தன. தண்ணீர் பாய்ச்சப்படாத காரணத்தால் அவை கருகிவிடும் தருவாயில் இருந்தன. தண்ணீர் பாய்ப்பப்படுவதற்கு வசதி இருந்தபோதிலும், அதற்கான அனுமதி சர்க்காரிடமிருந்து பெறவேண்டியிருந்தது. அப்போது கனம் மந்திரி ஸ்ரீ. கக்கன் அங்கே சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டிருந்தார். அவரிடம் அந்த 400 ஏக்கர் நிலங்களைக் காண்பித்தேன். அவைகளுக்குத் தண்ணீர் பாய்ச்சப்படுவதற்கு அனுமதி கோரினேன். " ஸ்பெஷல் ரிலீஸ் " ஆக அந்த நிலங்களுக்குத் தண்ணீர் விடப்படுவதற்கு அவர் அங்கேயே அனுமதி எழுதிக் கொடுத்தார். சென்னைக்கு வந்து கையெழுத்துப் போடுவதென்றால் கால தாமதமாகும் என்ற காரணத்தால் அவர் அங்கேயே அனுமதி எழுதிக் கொடுத்தார். இதை நான் மிகவும் பாராட்டுகிறேன். இதன் காரணமாக அந்த 400 ஏக்கர் பயிர்கள் காப்பாற்றப்பட்டன. கனம் மந்திரிகளின் சுற்றுப்பிரயாணத்தை கனம் அங்கத்தினர்கள் இம்மாதிரி பயன்படுத்திக் கொள்ளலாம். மந்திரிகள் அடிக்கடி சுற்றுப்பிரயாணம் செய்கிறார்களே என்று சில அங்கத்தினர்கள் அலுத்துக் கொண்டார்கள். மந்திரி கக்கன் சுற்றுப்பிரயாணம் செய்வது பொருத்தமாக இருக்கிறது என்றுதான் நான் சொல்வேன். மந்திரிகளின் சுற்றுப்பிரயாணங்களை இந்தமாதிரிப் பயன்படுத்திக்கொள்வோமானால், அவர்களுடைய சுற்றுப்பிரயாணங்களை நிச்சயம் வரவேற்போம் என்று நான் சொல்வேன். கனம் ஸ்ரீ. கக்கன் அவர்கள் அப்போது அங்கே சுற்றுப்பிரயாணம் செய்திராவிட்டால், நான் அந்த நிலங்களுக்காகச் சென்னைக்கு வந்திருக்க வேண்டும். சென்னைக்கு வந்து கனம் மந்திரியின் கையெழுத்தைப் பெறுவதற்காக ஒருவாரம் அல்லது 10 நாட்கள் காத்திருக்க வேண்டும். அதற்குள் சுமார் 100 ஏக்கர்களிலாவது பயிர்கள் கருகிப் போயிருக்கும். அவசர காலங்களில் உசிதமான உத்திரவுகளைப் போடுவதற்குரிய அதிகாரத்தை ஜில்லா அதிகாரிகளுக்குக் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரை மறுபடியும் கேட்டுக் கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

10th September 1958]

(Mr. Speaker in the Chair.)

SRI B. K. LINGA GOWDER : Mr. Speaker, Sir, though the report on the general food situation in the districts is very heartening, may I be permitted to bring to the notice of the Government the food position in the Nilgiris District, especially in regard to rice? As you know, the Nilgiris District looks to the other districts of the State for the supply of rice. We have no irrigation facilities due to the peculiar geographical position of the district. A few crops like potatoes and a few millets like wheat and ragi are raised. We entirely depend on the monsoon for raising these crops. You will be surprised to know if I say that there are many people in the rural parts and on the plantations who have not at all tasted good quality rice. It is because good quality rice does not reach them. Even if it should reach them, the price is very prohibitive. The reason is the abnormal cost of transport in these hilly tracts. It is not necessary for me to describe the condition of roads in rural parts and especially in plantations. The people in the rural parts and on the plantations are entirely at the mercy of the lorry owners. During the rainy season, the roads become so slushy that they are useless for traffic for months together with the result that people have to go without rice for many days. Why I am stressing this point is to induce the Government to consider specially the case of the Nilgiris in regard to the food position. I appeal to the Government to open more fair price shops in the rural areas and on the plantations with good stock of rice and millets. Especially during the rainy season, good quality rice must be made available through the fair price shops at a very reasonable price. It may not be out of place if I tell you that the plantation workers produce coffee and tea, the two commodities which earn for us a large portion of foreign exchange, which is most needed at present for our national development. So, it is the duty of the Government to see that these people in the interior parts are fed properly.

I, in conclusion, appeal to the Government to see that more fair price shops are opened and good quality rice and millets are made available to the people in the rural areas.

*SRI P. U. SHANMUGAM : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, நமது மாநிலத்தின் உணவு நிலைமை குறித்து நமது அமைச்சரும் உள் நாட்டு அமைச்சருமாகிய கனம் ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையின் மீது என்னுடைய சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். என்னுடைய கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு முன் நான் சார்ந்திருக்கும் கட்சியாகிய திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் ஒன்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். உணவுப் பிரச்னையில், ஆளும் கட்சியுடன் சகல முறைகளிலும் ஒத்துழைப்பதற்குத் திராவிட முன்னேற்றக் கழகம் தயாராயிருக்கிறது என்று என் கட்சியின் சார்பில் சொல்லிக் கொள்வேன். காரணம், ஒரு கட்சிக்குச் சொந்தமானது அல்ல உணவுப் பிரச்னை. இந்தப் பிரச்னை நாட்டு மக்கள் எல்லோரையும் பாதிக்கக் கூடியது.

திராவிட முன்னேற்றக் கழகத்தினர், தரிசு நிலங்களில் பயிர் செய்வதற்கு முயற்சி செய்வது கிடையாது என்றும், உணவுப் பொருள் உற்பத்தி அதிகரிப்பிற்காகப் பிரசாரம் செய்வகு கிடையாது என்றும், எப்போதும் பிரிவினை மனப்பான்மையுடனேயே இருக்கிறார்கள் என்றும் ஒரு கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார். தரிசு நிலங்களில் பயிரிடக் கூடாது

[Sri P. U. Shanmugam] [10th September 1958

என்று திராவிட முன்னேற்றக்கழகம் எங்கே, எப்போது சொல்லிற்று? தரிசு நிலங்கள் பயிரிடப்படவேண்டுமென்று சொல்லவில்லை என்ற குற்றச் சாட்டை எங்கள்மீது அந்த அங்கத்தினர் சுமத்துகிறார். இதே சபையில் பேசிய காங்கிரஸ் உறுப்பியனராகிய ஸ்ரீ வீரபாகு மத்திய சர்க்காரின் உணவு மண்டலத்திலிருந்து (ஜோனலிருந்து) இந்த ராஜ்யம் பிரிய வேண்டுமென்று கூறினார். அதை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். உணவு விஷயத்தில், நாம் கேரளாவுடன் சேர்ந்திருப்பதால் நம் உணவுப் பற்றுக் குறையை நாம் மேலும் அதிகரிக்கச் செய்கிறோம் என்பதை, கனம் அமைச்சரின் அறிக்கையிலிருந்தே நாம் தெரிந்துகொள்ளலாம். கனம் உள்நாட்டு அமைச்சரின் திறமையை நாம் அறிவோம்; நாடு அறியும், நாம் எல்லோரும் அறிந்திருக்கிறோம். கேரளாவிற்கு இந்த மாநிலத்திலிருந்து அரிசி அனுப்பப்படுவது தவறல்ல என்று வாதிப்பதற்காக சில புள்ளி விவரங்களைச் சேகரித்து அவைகளை இந்த அறிக்கையில் கனம் அமைச்சர் திறமையாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்; அது அவருடைய திறமைக்கே முத்து வைத்தாற்போல் இருக்கிறது. அவருடைய திறமையை நான் பாராட்டுகிறேன். ஆனால் அவருடைய கருத்தை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. சாதாரணமாக ஒவ்வொரு நபரும் நாள் ஒன்றுக்கு உட்கொள்ளும் உணவு 16 அவுன்ஸாக இருக்கும் என்றும் இம்மாநிலத்திலுள்ள ஒவ்வொரு நபரும் தினசரி 16 அவுன்ஸ் உணவு சாப்பிடுவார்களானால், நாம் உற்பத்தி செய்யும் உணவுப் பொருள்களால் நம் ராஜ்யத்தின் முழு உணவுத் தேவைகளையும் பூர்த்தி செய்வது சாத்தியமே என்றும் கனம் அமைச்சர் குறிப்பிட்டுவிட்டு, கேரளாவிற்கு இங்கிருந்து உணவுப் பொருள்கள் போவதை நியாயப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன், ". . . ஆயினும், வாஸ்தவமாக உட்கொள்ளும் அளவு 16 அவுன்ஸைவிட எவ்வளவோ குறைந்திருப்பதும் சாத்தியம் தான். சமீப ஆண்டுகளில் உட்கொள்ளும் அளவைப் பற்றி ஆராய்ச்சி செய்ததில் இது 15·4 அல்லது 15·3 அவுன்ஸ் என்ற திட்டத்தில் தான் இருக்கிறதே ஒழிய 16 அவுன்ஸ் என்ற அளவில் இல்லையெனத் தெரிய வந்திருக்கிறது. உட்கொள்ளும் அளவு 15·3 அவுன்ஸாக இருந்ததனால் தான் 2½ லட்சம் டன் சிறு உபரி கண்டு அதை நாம் கேரளாவுக்கு ஏற்றுமதி செய்ய முடிந்தது" என்று குறிப்பிட்டிருக்கிறார். 2½ லட்சம் டன் உபரி காணப்படுவதாகக் காண்பிப்பதற்காக, தம் முழுத்திறமையுயைம் உபயோகித்து கனம் அமைச்சர் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார். உபரியாகிய இந்த 2½ லட்சம் டன் உணவுப்பொருள் கேரளாவிற்குப் போவதால் குடியா முழுகிப்போய் விடும் என்று கேட்பதுபோல் அவர் அறிக்கையைத் தயாரித்திருக்கிறார். ஆனால், எப்படியும், இந்த மாநிலத்தில் உணவுப் பற்றுக்குறை இருக்கிறது என்பதை கனம் அமைச்சர் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்று நான் கூறுவேன். பற்றுக்குறை அதிகமாக இல்லை என்று சொல்ல முடியுமே தவிர, தேவைக்கு அதிகமாக உற்பத்தி செய்கிறோம் என்று சொல்ல முடியாது. மேலும், ஒவ்வொரு ஆண்டிலும் நம் மாநிலத்திலிருந்து இதர மாநிலங்களுக்கு அனுப்பப்படும் அரிசியின் அளவையும் வெளியிலிருந்து இந்த மாநிலத்துக்கு வரும் அரிசியின் அளவையும் குறிப்பிடும் பட்டியலை கனம் அமைச்சர் தமது அறிக்கையில் கொடுத்திருக்கிறார். அதைப் பார்க்கும்போது பயங்கரமான ஒரு உண்மை தெரிய வருகிறது; அதாவது, சென்னையிலிருந்து இதர மாநிலங்களுக்கு அனுப்பப்படும் அரிசியின் அளவு, 1954–55-லிருந்து 1956–57 வரை ஒவ்வொரு ஆண்டிலும் உயர்ந்துகொண்டே வந்திருக்கிறது; ஆனால் ஆந்திராவிலிருந்து சென்னைக்கு வரும் அரிசியின் அளவு 1954–55-லிருந்து 1957–58 வரையில் ஒவ்வொரு ஆண்டிலும் குறைந்துகொண்டே வந்திருக்கிறது. ஆந்திரம் பிரிந்துவிட்டதுதான் இதற்குக் காரணம் என்று கனம் அமைச்சர் சமாதானம் கூறுவாரோ என்னமோ தெரியவில்லை. எப்படியானாலும் சென்னையிலிருந்து இதர மாநிலங்களுக்குச் செல்லும் அரிசியின் அளவு வருடாவருடம் அதிகமாகிக் கொண்டே போயிருக்கிறது. இந்த நிலையில், கேரளாவிற்கு சென்னையிலிருந்து உணவுப் பொருள்கள் போவதைக் குறிப்பிடுமிடத்து, இந்த மாநிலத்தில் 2½ லட்சம் டன் உணவு தானியம் உபரி காணப்படுவதாகக் கணக்குக் காட்டியிருக்கும் கனம் அமைச்சர், தமது முழுத் திறமையையும் உபயோகித்துத்தான் அவ்வாறு கணக்குக் காட்டியிருக்கிறார் என்று நினைக்கிறேன்.

10th September 1958] [Sri P. U. Shanmugam]

பொதுவாக உணவு நிலைமை திருப்திகரமான நிலையில் இல்லை என்பதை நாம் எல்லோரும் அறிவோம். உணவு அதிகமாக உற்பத்திசெய்யப் படுகிறதா இல்லையா என்ற பிரச்னை கூட கிடையாது. உற்பத்தி செய்யப் படக்கூடிய உணவுப் பொருள்களை மக்கள் எளிதில் வாங்கக் கூடிய நிலையில் இருக்கிறார்களா, உணவுப் பொருள்களின் விலை குறைந்திருக்கிறதா என்பதைக் கவனிக்க வேண்டும். விலைவாசி குறைந்தால் அன்றி, உணவுப் பொருள்களின் இப்பொழுதுள்ள விலையின் நிலையால் இன்று மக்களிடையே இருக்கும் பசியையும் பட்டினியையும் போக்கி விட முடியும் என்று என்றால் நம்ப முடியாது. இரண்டு மாவட்டங்களைப் பற்றி மட்டும் இங்கு குறிப்பிட்டிருக்கிறார்கள். செங்கல்பட்டில் சில பகுதிகளும் தென் ஆற்காட்டில் உள்ள சில பகுதிகளும்தான் வறட்சியான பகுதிகள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. வட ஆற்காடு மாவட்டம் பஞ்சப் பகுதியாகக் காட்சி யளிப்பதை அமைச்சர் அவர்கள் அங்கு வந்திருந்தபோது கவனித்திருக்கக்கூடும். பச்சைப் பசேல் என்ற புல் தரைகளும், வளப்பம் மிகுந்த வயல் வெளிகளும் அங்கு மிகமிகக் குறைவு. இந்த இடத்தில் குடிதண்ணீருக்குக்கூட பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. அப்படிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிற வட ஆற்காடு மாவட்டத்தில் உணவு நிலை சரியாக இருக்கிறது என்று...... 111 உ.1

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பாதிக்கப்பட்ட என்று தான் குறிப்பிட்டிருக்கிறேன். வட ஆற்காடு மழையில்லாததால் சில பகுதிகளில் பயிரிடப்படவேயில்லை.

SRI P. U. SHANMUGAM : அமைச்சர் அவர்களின் விளக்கத்திற்கு நன்றி. மழையில்லாத காரணத்தினால் வட ஆற்காட்டில் சில பகுதிகளில் பயிரே செய்யப்படவில்லை என்று கூறினார்கள். வருத்தத்தோடு ஒன்று தெரிவித்துக்கொள்வேன். வட ஆற்காடு மாவட்டத்தில் இவர்கள் ஆரம்பித்த பேர் ப்ரைஸ் ஷாப்பில் ஒன்று கூடக் கிடையாது. ஆனால் ......

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வட ஆற்காடு ஜில்லாவில் நியாய விலைக் கடைகள் அவசியமில்லை என்றுதான் நான் விசாரித்து தெரிந்து கொண்டது.

SRI P. U. SHANMUGAM : அவசியமில்லை என்று குறிப்பிடுகிறார்கள். அங்கு எங்கு பார்த்தாலும் நியாயவிலைக் கடைகள் அவசியம் வேண்டும் என்ற நிலையைத்தான் சுற்றி வருகிற நாங்கள் அறிகிறோம். வட ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மற்ற காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் எனது குறிப்பை ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். வட ஆற்காடு மாவட்டம் இதில் விடப் பட்டிருந்தாலும் கூட பொதுவாக இன்று தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கிற உணவு நிலையைத் தீர்ப்பதற்கு எங்களால் இயன்ற உதவியைச் செய்யத் தயாராயிருக்கிறோம் என்று தெரிவித்துக் கொண்டு, அரசாங்கம் அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை உறுதியான கோரிக்கைகளைக் கையாள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

*SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : கனம் அவைத் தலைவர் அவர்களே, உணவு உற்பத்தி விஷயமாக நமது மாகாணத்தில் இன்றுள்ள உணவு உற்பத்தி நிலையைப்பற்றி அமைச்சர் அவர்கள் ஒரு அறிக்கை கொடுத்திருக்கிறார்கள். அந்த அடிப்படையில் பார்த்தால் நமது நாட்டின் உணவு உற்பத்தி சென்ற காலத்திற்கும் இப்பொழுதுள்ள நிலைக்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது, அதில் எவ்வளவு முன்னேற்றம் காணப்படுகிறது என்பதைப்பற்றி இதில் தெளிவாக கூறப்பட்டிருக்கிறது. இதற்கெல்லாம் காரணம், நிலம் உழவனுக்குச் சொந்தமாக்கப்பட வேண்டும். நிலத்தில் உழவனுக்கும் உரிமை இருக்க வேண்டுமென்ற அடிப்படையில் சென்ற காலத்தில் ஏற்பட்ட விவசாய பாதுகாப்புச் சட்டம், நியாயவாரச் சட்டம், பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம், போன்ற சட்டங்கள், உழவர்கள் ஓரளவு தங்களுக்கும் நிலத்தில் உரிமை இருக்கிறது, அந்த உரிமை பெருத்தளவு நமக்குப் பூர்ணமாக கிடைக்கும் என்ற நம்பிக்கையில் உணவு உற்பத்தி முழு அளவிற்கு உயர்ந்திருக்கிறது. மேலும் விவசாய இலாகா திறமையான முறையில் வேலை செய்து, சென்ற காலத்தில் உள்ளதை-

[Sri T. R. Ramamirtha Thondaman] [10th September 1958

காட்டிலும் இப்பொழுது நல்ல மாறுதல் ஏற்பட்டு வேலைகள் நல்ல முறையில் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. சென்ற காலங்களில் நிலச்சுவாந்தார்கள் ஒரு சிலருக்குத்தான் விவசாயக் கருவிகள், உரம், எரு போன்ற சாதனங்கள் எல்லாம் கிடைத்து வந்தன. அப்படி அப்பொழுது வாங்கப்பட்ட என்ஜின்கள் போன்ற சாதனங்கள் எல்லாம் உணவு உற்பத்திக்காக செலவு செய்யப்பட வேண்டியது போக பல பிரதேசங்களின் ஜில்லா விட்டு ஜில்லா தாண்டிக் கூட சினிமா போன்ற காரியங்களுக்குப் பயன் படுத்தப்பட்டு வந்தன. இந்த முறைகளை எல்லாம் மாற்றி விவசாய அமைச்சர் அவர்களின் திறமை காரணமாக இப்பொழுது அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் ஒரு டிவிஷனுக்கு ஒரு விவசாய அதிகாரியும், ஒரு பிர்காவிற்கு ஒரு டெமான்ஸ்ட்ரேட்டரும், நியமித்து, விவசாய அபிவிருத்தி அதிகாரிகளுக்கும், கிராம சேவகர்களுக்கும் விவசாயத்தில் பயிற்சி அளித்து கிராமாந்திரங்களில் விவசாய இலாகா சார்பில் வரக்கூடிய எல்லா சாதனங்களும் நேரடியாக விவசாயிகளுக்குக் கிடைக்கும்படிச் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பதால் இப்பொழுது உணவு உற்பத்தி ஓரளவு பெருகியிருக்கிறது என்று நிச்சயமாகக் கூறலாம். அதோடு கூட்டுறவு முறையில் சாகுபடி செய்வது என்ற அடிப்படையில், மத தர்ம பரிபாலன போர்டும், விவசாய இலாகா அமைச்சர் அவர்களிடம் இருப்பதால் எனது தொகுதியில் உள்ள பல தேவஸ்தானங்களுக்கும், மடாதிபதிகளுக்கும், சொந்தமான சில கிராமங்களில் உள்ள நிலங்களைக் கூட்டுறவு முறையில் எடுத்து இவ்வருடம் உணவு உற்பத்தியில் நல்ல முன்னேற்றம் காணும் விதத்தில் அங்குள்ள உழவர்கள் நல்ல முறையில் முன்னேற்றம் அடையும் விதத்தில் உறுதியுடனும், உணர்ச்சியுடனும் வேலை செய்து வருகிறார்கள். சென்ற ஆண்டுகளை விட இவ்வாண்டு உணவு உற்பத்தியில் லாபம் காண முடியும் என்ற நம்பிக்கை ஓரளவு ஏற்படுகிறது. அடுத்தபடியாக, தரிசு நிலங்கள். இந்த தரிசு நிலங்களைப் பற்றி சென்ற கூட்டத்தில் கூட நான் தெரிவித்து இருக்கிறேன். ஏராளமான தரிசு நிலங்கள் பாழாகக் கிடக்கின்றன. கொள்ளிடம் படுகையில் உள்ள தரிசு நிலங்கள் சாகுபடிக்கு லாயக்குள்ளவையாக இருப்பதால் அவைகளை உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி எடுத்துக்கொள்ள வேண்டிய நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. அதுபோன்று திருச்சி போன்ற ஜில்லாக்களில் ரிசர்வ் பாரஸ்ட் என்ற பெயரால் சில மரங்களை வைத்துக் கொண்டு தரிசு நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. தனிப்பட்டவர்களிடம் இருக்கும் நிலங்களில் தரிசு நிலங்கள் ஏராளமாக உள்ளன. சமுதாயம் என்ற பெயரால் தரிசு நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. அதேபோன்று தேவஸ்தானம், மடாதிபதிகள் போன்றவர்களிடம் தரிசு நிலங்கள் இருப்பது இயற்கையே. அவைகள் அப்படியே இருக்கின்றன. இந் நிலங்களை எல்லாம் எடுத்து நிலமற்றவர்களுக்குக் கொடுப்பது, அல்லது கூட்டுறவு முறையில் அவைகளைச் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு அதற்கு வேண்டிய சாதனங்களைக் கொடுப்பது, விவசாய இலாகா மூலம் கடன் கொடுப்பது, உரம் முதலியவைகள் கொடுப்பது போன்றவைகளைச் செய்வதன் மூலம் தஞ்சை ஜில்லாவிலேயே 50 ஆயிரம் 60 ஆயிரம் ஏக்கர் நிலங்களை உடனடியாகச் சாகுபடிக்குக் கொண்டு வர முடியும். அடுத்தபடியாக, உணவு உற்பத்திக்கு மிகவும் முக்கியமானது, நீர்பாசனம். நீர்பாசனம் என்ற அடிப்படையில் நாம் எடுத்துக் கொண்டால் கொள்ளிடத்து நீரை வடவாத்துக்கால் மூலம் வீராணத்து ஏரி, பெருமாள் ஏரி, எமனேரி வரையில் நீர்பாசனங்களைச் செய்யலாம். செய்வதற்கு பல இடையூறுகள் இருக்கின்றன. அவைகளை நிவர்த்திக்க வேண்டும். கழிவு நீரை கடலில் போய் விழக்கூடிய நீரை நாம் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளக் கூடிய ஒரு சூழ்நிலை நமக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. அப்படிக் கடலில் விழும் நீரை, அணைகள் கட்டி நாம் உபயோகிக்கலாம். பெருமளவில் திருச்சி தென்னாற்காடு, ஜில்லாவில் பொன்னேரி, ஆறு இருக்கிறது உடையார்பாளையம் தாலூக்கா வழியாக வருகிறது அது பாசன வசதியற்றுக் கிடக்கிறது. வீணாகும் கொள்ளிட நீரைக் கொண்டு அதை பாசன வசதிக்கு உபயோகப்படுத்திக்கொள்ளலாம். மேலும் பொன்னாறு என்ற ஆறு பாசன வசதி இல்லாமல் உணவு உற்பத்தி பாதிக்கப் பட்டு இருப்பதை கனம் மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் நேரில் பார்த்து விட்டு அங்கு 50,000 ரூபாய் செலவில் ஒரு கட்டை கட்டும்படி ஏற்பாடு

10th September 1958] [Sri T. R. Ramamirtha Tondaman]

செய்ததினால் ஓரளவு அங்கு நீர்ப்பாசன வசதி ஏற்பட்டிருக்கிறது. மேலும் அதைப் பலப்படுத்தி அதிகமான தொகையை ஒதுக்கி திட்ட பூர்வமாக அதை நடத்தினால் அந்தப் பகுதிகளில் பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை நல்ல முறையில் சாகுபடிக்குக் கொண்டு வர முடியும். சென்ற காலங்களில் கிராமங்களில் வாய்க்கால்கள் வெட்டுவது, மிராசுதார்களும் விவசாயத் தொழிலாளர்களும் ஒன்றாக இருந்தபோது, "குடிமராமத்து" என்ற பெயரால் வாய்க்கால்கள் வெட்டப்பட்டு வந்தன. நிலச் சட்டங்கள் வந்த பிறகு, நாலு ஆண்டுகளாக வாய்க்கால்களை யாரும் வெட்டுவதில்லை. சட்டத்தில் இருப்பது, மிராசுதார்தான் வாய்க்கால்களை வெட்டத் தொகை கொடுக்க வேண்டுமென்று இருப்பதால் இந்தச் சட்டத்தால் பயன் அடைய முடியாது மிராசுதார்கள் வாய்க்கால்கள் வெட்டுவதில் அக்கறை காட்டுவதில்லை. மிராசுதார்தான் வாய்க்கால் வெட்டத் தொகை கொடுக்க வேண்டுமென்ற காரணத்தினால் விவசாயிகளும் வாய்க்கால்களை வெட்டுவதற்கு முன் வருவதில்லை. ஆக, வாய்க்கால்கள் வெட்டப்படுவதில்லை. ஆகவே குடிமராமத்து என்ற தலைப்பில் உள்ள நிலங்கள் மண் மேடாகி, வாய்க்கால்கள் இன்று பாசன வசதியற்று, நிலங்களாக இருக்கின்றன. ஆகவே அங்கு மராமத்து இலாகாவே வாய்க்கால்களை வெட்டும் வேலையைத் ஏற்றுக் கொண்டால் நல்லது. அதற்கு ஏற்படுகிற செலவை, நிலவரியோடு சேர்த்து அவர்களிடமிருந்து வசூலிப்பது என்ற முறையில் உடனடியாக அங்கு வாய்க்கால்கள் வெட்டும் வேலையை மராமத்து இலாகாவே எடுத்துக் கொள்ள வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். 11-20 a.m. அடுத்தபடியாக இப்போதிருக்கின்ற கால்வாய்கள் வாய்க்கால்கள் மிக மிக மோசமாக இருக்கின்றன. அந்த வாய்க்கால்களை எல்லாம் நல்ல முறையில் செப்பனிட்டு அதற்கு நீர்ப்பாசன வசதி செய்ய வேண்டியது மிக மிக அவசியம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். விவசாய இலாகாவையும் தேவஸ்தான இலாகாவையும் ஒரே பொறுப்பில் வைத்திருக்கின்ற அமைச்சர் அவர்கள் இந்த ராஜ்யம் முழுவதிலும் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு பெரிய நிலச்சுவான்தார்கள் எவ்விதம் தங்களுடைய நிலத்திற்குப் பாடுபடுவார்களோ அந்த முறையில் பாடுபட்டு வருகிறார்கள். அதை நான் பாராட்டுவதோடு உணவை தன் உழைப்பால் பெருக்கிய உழவர் பெருமக்களையும் பாராட்டுகிறேன். மேலும் தனியார்கள் கையில் இருக்கும் அவ்வளவு நிலங்களையும் இந்தச் சர்க்காருடைய கைக்குக் கொண்டு வந்து நிலச் சீர்திருத்தத்தையும் கொண்டு வர வேண்டும், என்று கேட்டுக் கொண்டு, இச்சந்தர்ப்பத்தை அளித்த சபாநாயகர் அவர்களுக்கு என் நன்றியையும் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். உழவர்கள் வாழ்க.

*Sri S. PAKKIRISAMI PILLAI: கனம் தலைவர் அவர்களே, இந்த உணவு உற்பத்தி விஷயத்தில் கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கின்ற தகவல்களிலிருந்து இப்போது நம்முடைய ராஜ்யத்தில் இருக்கின்ற நிலைமையை ஒருவாறு அறிவதற்கு முடிகிறது. ஆனால் இதுவரையில் விவசாயத்தில் அபிவிருத்திக்காக நம்மால் ஆனதைச் செய்தோம், அதனால் நாம் திருப்தி அடைவோம் என்கின்ற மனப்பான்மையில்தான் இந்த அறிக்கையைச் சமர்ப்பித்திருக்கிறார்கள். மற்றவர்களை திருப்தி அடையச் செய்யவேண்டும் என்கின்ற எண்ணம் அவர்கள் மனதில் இருப்பதாகத் தெரிகிறது. இந்த மாதிரி எண்ணம் பொதுவாக இந்த கணக்கைப் பார்த்துக்கொண்டு நம்மால் வேறு யாரேனும் குற்றம் சொல்லாமல் இருப்பதற்கு ஒரு வழியாக இருக்குமே தவிர பொதுவாகப் பொது மக்கள் மத்தியில் திருப்தியை உண்டு பண்ண முடியாது. பொது மக்கள் எத்தனை கஷ்டங்கள் அடைந்தாலும் அதைப் பொறுத்துக்கொண்டு யாரையாவது அல்லது கடவுளையாவது நொந்து கொண்டுதான் இருப்பார்கள். உண்மையிலே இத்தனை வருஷமாகியும் சாதாரணமாக உணவு கிடைக்கவில்லை, போதுமான அளவு குறைந்த விலையில் உணவு கிடைக்கவில்லை என்று சொல்லும்போது மனக்கசப்பு ஏற்படக்கூடிய ரீதியில்தான் இருக்கிறது. பொதுவாக அரிசியினுடைய விலை எவ்வளவோ உயர்ந்து கொண்டு போயிருந்தும் கூட அதனுடைய விலையை அரசாங்கத்தார் கணக்கில் சரியாக பதிவு செய்ததாகத் தெரியவில்லை. உதாரணமாக ஒன்று சொல்லுகிறேன். ஒவ்வொரு மாதமும் கவர்ன்மெண்ட் கெஜட்டில் "காஸ்ட் ஆப் லிவிங்

இன்டெக்ஸ்'' பிரசுரிக்கப்பட்டது வருகிறது. அதில் அரிசியினுடைய விலை எவ்வளவு ஏறுகிறதோ அதற்குத் தகுந்தபடி "காஸ்ட் ஆப் லிவிங் இன்டெக்ஸ்'' ஸிலும் புள்ளிவிவரம் விலை ஏறிக்கொண்டு இருக்க வேண்டும். சென்ற ஆறு மாத காலமாக அரிசியினுடைய விலை எவ்வளவோ ஏறியிருந்தும் "காஸ்ட் ஆப் லிவிங் இன்டெக்ஸ்''ஸில் விலை ஏற்றி வைக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இதற்கு காரணம் இங்கே இருக்கக்கூடிய "எக்னாமிக்ஸ் ஸர்வே ஸ்டாட்டிஸ்டிக்ஸ் டிபார்ட்மெண்ட்''டில் இருக்கக்கூடியவர்கள் ஒரு கொள்கையை அனுஷ்டிக்கிறார்கள். இந்தக் கொள்கை எப்படியிருக்கிறது என்று பார்த்தால் முதலாளிகளை அடிப்படையாக வைத்து எடுக்கப்படுகிற கொள்கையாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. இப்பொழுதும் முதலாளிகள் அதிகமாகத் தொழிலாளர்களுக்குப் பஞ்சப்படி கொடுக்காத நிலைமையில்தான் இருந்து கொண்டிருக்கிறார்கள்.

MR. SPEAKER : I would like to know how all these are relevant to the discussion on the food situation. The hon. Member is raising some other issue. It should not be done. It is not correct.

* SRI S. PAKKIRISAMI PILLAI : What I say is relevant . . .

MR. SPEAKER : No. I am carefully watching and listening to the hon. Member. He was referring to the cost of living index. But, when he says something else and attributes motives to somebody for not taking action and all those things, I am afraid that all those remarks are outside the scope of the present discussion. So, let the hon. Member confine his remarks to the subject under discussion.

* SRI S. PAKKIRISAMI PILLAI : You cannot restrict me . . .

MR. SPEAKER : I can. I am sorry I cannot agree with the hon. Member. He must confine his remarks to the subject under discussion.

* SRI S. PAKKIRISAMI PILLAI : I am only confining myself to the subject . . .

MR. SPEAKER : No. His remarks are outside the scope of the present discussion. He must confine himself to the subject under discussion. If he goes beyond the scope of the subject under discussion, I am sorry I cannot allow him to do so.

* SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, you cannot anticipate what I am going to say.

MR. SPEAKER : I have been hearing the hon. Member's speech. Certain of his remarks were outside the scope of the present discussion. He was saying that those in authority were trying to help the managements. I am not questioning the correctness or otherwise of this statement. But, I only wish to point out that it has nothing to do with the food situation under discussion.

* SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, what I have said has nothing to do with the managements. I was only pointing out that the statistical survey should be correctly made.

MR. SPEAKER : The hon. Member will be in order if he stops with that. I am not objecting to that statement.

10th September 1958]

*SRI S. PAKKIRISAMI PILLAI : இந்தக் கணக்கு புள்ளி விவரத்தில் அரிசியினுடைய விலையை அரசாங்கத்தார்தான் கட்டுப்படுத்துகிறார்கள். அதோடு அதைப்பற்றியுள்ள விவரங்களையும் ரெக்கார்டு பண்ணுகிறார்கள். இந்த மாதிரி விஷயத்தில் அரசாங்கத்தார் முதலாளிகள் சார்பில், அவர்களுக்கு உதவி செய்யும்படியான நிலையில்தான் இந்த விவரங்கள் ரெக்கார்டு செய்யப்படுகின்றன என்பதுதான் என்னுடைய குற்றச்சாட்டு. இதன் விளைவாக எல்லோரும் பாதிக்கப்படுகின்றார்கள். இன்றைக்கு அரிசியின் விலை உயர்ந்திருந்தும் அந்த விலை கொடுத்துப் போதுமான அளவுக்கு வாங்குவதற்குத் தகுந்தபடி சாதாரண தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்படுவதில்லை, பஞ்சப்படி கொடுக்கப்படுவதில்லை. அவர்களுக்குச் சம்பளம் இவ்வளவு கொடுக்க வேண்டும் என்று நியதி ஏற்படுத்தி இருக்கிறார்கள். அரசாங்கத்தின் வாழ்க்கைப் புள்ளிவிவரத்தின் படி உயர்வு கொடுக்கவேண்டும் என்று நியதி இருக்கிறது. இந்த நியதி சரியான முறையில் கிடைக்காதவாறு நமது நிர்வாகத்தில் இருக்கின்ற ஒரு பகுதி வேலை செய்து கொண்டிருக்கிறது. அதை இப்போதும் சவால் விட்டுக் கேட்பதற்கு தயாராக இருக்கிறேன். டிப்பார்ட்மெண்ட் புள்ளி விவரத்தைச் சரியான விதத்தில் காண்பிப்பது கிடையாது. ஆகவே இதை விவரமாக மந்திரியார் அவர்கள் விசாரணை செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும், அல்லது முதல் மந்திரி அவர்கள் இதில் விசாரணை செய்து பார்க்கவேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன். இதோடுகூட சாதாரணமாக உணவு உற்பத்திப் பெருகவேண்டுமென்று சொன்னால், எங்கு எங்கு அபிவிருத்தி செய்திருக்கிறார்களோ, அந்த இடத்தில் இருக்கின்ற விவசாயிகள் தலையில் திடீரென்று தண்டத்தீர்வை என்று போட்டு வசூலிக்கக்கூடாது. உதாரணமாக நொய்யல், கீழ்பவானி, அமராவதி போன்ற இடங்களில் பல விவசாயிகள் இவ்விதம் இருந்து கொண்டிருக்கிறார்கள். அவ்விதம் அவர்கள் தண்டத்தீர்வையை செலுத்தி விட்டு அவர்கள் வேலை செய்யவேண்டும் என்று சொன்னால், கஷ்டப்பட்டு வேலை செய்து, அதன் பலனாகக் கிடைத்த விளைவை எல்லாம் அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய நிலைமை இருக்கிறது என்று சொன்னால் எந்த விவசாயினுடைய மனதும் வருத்தப்படத்தான் செய்யும். ஆகவே அந்த வரியை மாற்றி நவீன முறையில், வேறு எந்த வழியிலாவது அந்த வரியை வசூலிக்க ஏற்பாடு செய்யவேண்டும். உணவு உற்பத்தி பெருக வேண்டுமானால், கொஞ்ச காலத்திற்கு இந்த நிலைமை, அதாவது இம்மாதிரி தண்டத்தீர்வை போடுவது எல்லாம் இருக்கக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடுகூட வாய்க்கால்கள், கால்வாய்கள், ஓடைகள், ஸ்லூய்ஸ்கள் இவைகள் எல்லாம், அனேகமாகச் செப்பனிடப் படாமல் இருக்கின்றன. இவைகள் எல்லாம் சரியாக மராமத்து செய்யப் படாததினால் அதன் பக்கத்தில் இருக்கின்ற விவசாயிகள் எல்லாம் கஷ்டப் படுகிறார்கள். அவர்கள் பழைய முறையிலே பயிர் செய்து அவர்களுக்குச் சாதாரணமாகக் கிடைக்கும் கோட்டாவுடன் திருப்தி அடைந்துவிடுகிறார்கள். ஆகவே கூடுதலாக முன்னேறுவதற்கு இம்மாதிரிப்பட்ட மராமத்துகள் எல்லாம் செய்யப்படவேண்டும். அதோடு சண்டை சமயத்தில் (வார் டைம்) தண்டத் தீர்வை, உபரி வரிகள் எல்லாம் எடுக்கப்பட்டிருந்தன. அதே முறையில் இப்போது விவசாயிகளுக்கு ஊக்கம் அளிக்கின்ற வகையில் இப்போதும் கொஞ்சகாலத்திற்கு அந்தத் தீர்வைகளை எல்லாம் எடுத்து விடவேண்டும். அப்போதுதான் விவசாயிகளுக்கு உற்சாகம் ஏற்பட்டு உணவு உற்பத்தி பெருக்கில் அதிகமாக ஈடுபடுவார்கள் என்பதைத் தெரிவித்துக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

*SRI P. S. CHINNADURAI : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, 11 30 a.m. முதன் முதலாக ஒரு சின்ன விஷயம் சபாநாயகர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் தன்னுடைய நேரத்தில் ஐந்து நிமிஷத்தை விட்டு விட்டார்கள். அதை நான் உபயோகித்துக்கொள்ளலாமா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : மந்திரி அவர்கள் எடுத்துக்கொள்ளலாம். தாங்கள் அதை எடுத்துக்கொள்ள முடியாது.

[10th September 1958

**SRI P. S. CHINNADURAI** : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே நமது ராஜ்ய உணவு நிலைமைபற்றி நமது மதிப்பிற்குரிய விவசாயத் துறை அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்துள்ள அறிக்கை மித மிஞ்சிய நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டுள்ளதோவென ஐயுறுகிறேன். நம்முடைய உணவு உற்பத்தித் தேவையைக் குறித்து இந்த அறிக்கையிலே முக்கியத்துவம் எதும் கொடுத்திருப்பதாகக் காணும். இந்த அறிக்கையிலே 56–57-ம் ஆண்டிலே 46·22 லட்சம் டன் உற்பத்தியான தாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. 1957–58-ம் ஆண்டிலே உத்தேசமாக 46·58 லட்சம் டன்கள் உற்பத்தியாகக் கூடும் என்று சொல்லப்பட்டிருக் கிறது. சென்ற நான்கு, ஐந்து ஆண்டுகளின் நிலையை எடுத்து இந்த அறிக்கையிலே விவாதித்து, உணவு உற்பத்தி எந்த அளவுக்கு அதிகரித் திருக்கிறது என்று சபை முன்பு எடுத்துக்காட்ட கனம் அமைச்சர் முற்படாதது உண்மையிலேயே வியப்பைத்தான் கொடுக்கிறது.

அது மட்டுமல்ல. மேலும் ஒன்றை நான் இதிலே காண்கிறேன். இரண்டாவது பகுதியிலே அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள், ஆள் ஒன்றுக்கு 16 அவுன்ஸ் என்று கணக்கிட்டால், இந்த 46 லட்சம் டன்கள் போதுமானது. இது நம்முடைய தேவையைப் பூர்த்தி பண்ணும் என்று சொல்லியிருக்கிறார் கள். கனம் அமைச்சர் அவர்களும் சிறையிலே இருந்தவர்கள். நானும் சிறையிலே இருந்திருக்கிறேன். சிறையிலே, கடின தண்டனை பெற்ற கைதிகளுக்கு, ஒரு கைதிக்கு 20 அவுன்ஸ் தானியம் கொடுக்கப்பட்டு வந்ததை இந்த நேரத்திலே அமைச்சருக்குக் குறிப்பிட விரும்புகிறேன். ஏ-வகுப்பு, பி-வகுப்பு கைதிகளுக்கு 22 அவுன்ஸ் தானியம் அனுமதித்து வந்தார்கள். 42-ம் ஆண்டிலே நான் சிறையிலே இருந்த நிலை இது. இப்போது எப்படி இருக்கிறதோ, என்னவோ எனக்குத் தெரியாது. ஒருகால் மற்ற நண்பர்களுக்குக் குறிப்பாக ஸ்ரீ அண்ணாதுரை அவர்களுக்குத் தெரியுமோ என்னவோ ? சிறைக் கைதிகளுக்கு எவ்வளவு அனுமதித்து வந்தார்களோ, அந்த அளவுகூட இல்லாமல் கணக்கிட்டு உற்பத்தி பண்ண விட்டால் எவ்வாறு நாட்டுக்கு ஆரோக்கியமுள்ள பிரஜைகளை அளிக்கப் போகிறோம் ? எவ்வாறு நாட்டில் உற்பத்தி பண்ணுகிற வேலையை அதிகரிக்கப் போகிறோம் என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன். இவ்வாறு கணக்கிடுவதை விட்டுவிட வேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். உணவு தானியங்களின் தேவையைக் கணக்கிடும்போது ஒரு ஆளுக்கு 20 அவுன்ஸ் என்றோ, அதற்கு மேலோ வைத்துக் கணக்கிடுவது சிறந்த முறை என்று மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

அது மாத்திரமல்ல. நம் ராஜ்யத்தின் தேவையை மட்டும் நாம் கணக்கிட்டால் போதாது. இந்தியாவின் தேவையையும் கவனத்தில் வைத்துக்கொண்டு, நம் ராஜ்யத்தின் தேவையில் நாட்டம் செலுத்த வேண்டும். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி வெளியிட்டு வருகிற "எகனமிக் ரெவ்யூ" என்ற பத்திரிகையின் ஆகஸ்ட் இதழில் ஒரு விஷயத்தைக் கண்ணுற நேர்ந்தது. அதிலே பார்க்கும்போது நாம் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி பண்ணுகிற பண்டங்களில் உணவுப் பண்டத் தினுடைய இறக்குமதி அதிகரித்திருக்கிறது என்று நான் காண்கிறேன். "கிரெயின்ஸ், பல்ஸஸ் அண்ட் ப்ளவர்" என்று போடப்பட்டிருக்கிற பகுதியிலே, 55-ம் ஆண்டிலே, 35 கோடி ரூபாய் பெறுமானமுள்ள இறக்குமதி என்றால், 57-ம் ஆண்டிலே 55 கோடி ரூபாய் பெறுமானமுள்ள அளவிற்கு உணவுப் பண்டங்கள் இறக்குமதி செய்யப்பட்டிருக்கிறது. அது மாத்திரமல்ல. பழங்கள், காய்கறிகள் என்ற வகையில் 55-ம் ஆண்டில் 12 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொருள்கள் இறக்குமதியாகி இருக்கிறது. 57-ம் ஆண்டில் அந்த வகையிலேயே 21 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொருள்கள் இறக்குமதியாகியிருக்கிறது. வெளி நாடுகளிலிருந்து நாம் இறக்குமதி செய்கிற பண்டங்களில், பழங்கள், காய்கறிகள், தானியங்கள் இவைகளின் அளவு அதிகரித்துக்கொண்டே போனால், மற்ற நாடுகளின் முன்னால் தலை நிமிர்ந்து நின்று, பொருளா தாரத் துறையில் எப்படி முன்னேற்றம் காண முடியும். வெளி நாடுகளி லிருந்து இறக்குமதி செய்வதற்காகச் செலவிடும் பணம் அடி யோடு குறைக்கப்படுவதற்கு, வெளிநாடுகளிலிருந்து ஒரு ரூபாய்க்குக்கூட எந்தவித தானியங்கள், பழங்கள், காய்கறிகள் முதலியன இறக்குமதி பண்ண மாட்டோம் என்னும் அளவுக்கு நாம் தயார்படுத்திக்கொள்ள வேண்டும். அந்த அளவுக்கு நாம் வேலை செய்யவேண்டும்.

10th September 1958] [Sri P. S. Chinnadurai]

அகில இந்திய கண்ணோட்டத்தோடு பார்த்தால், நம் உணவு உற்பத்தியை அதிகரிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது என்ற விஷயத்தை கனம் அமைச்சர் அவர்கள் ஒப்புக் கொள்வார்கள் என்று நான் நம்புகிறேன். இவ்வாறு உணவு உற்பத்தி அதிகரிக்கவேண்டுமென்றால், எப்படி அதிகரிக்கும் என்பது குறித்து ஒரு யோசனையைச் சொல்ல விரும்புகிறேன். இது எல்லோரும் சொல்லும் யோசனைதான். நான் அதையே மீண்டும் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். இப்போது உற்பத்தி செய்யப்படும் நிலங்களில் விளைச்சலை அதிகப்படுத்த வேண்டும். நிலங்களில் விளைச்சலை அதிகப்படுத்தி இரட்டிப்பாக்க பெருமுயற்சியெடுக்கவேண்டும். நாங்கள் முயற்சி எடுத்துக்கொள்கிறோம் என்று பொதுவாகச் சொன்னால் போதாது. குறிப்பாக ஆறு மாத காலத்தில் முயற்சிகள் எந்த அளவு பலன் அளித்திருக்கிறது என்று ஆறு மாதங்களுக்கு ஒரு முறையோ, அல்லது ஆண்டுக்கு ஒரு முறையோ அறிக்கை சமர்ப்பிக்க முயற்சிக்க வேண்டும். அத்தகைய அறிக்கைகளைச் சமர்ப்பிக்கவேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன்.

மற்றவைகளைக் காட்டிலும் இந்த உணவுப் பிரச்னை, உணவுப் பண்டங்களின் உற்பத்தி பிரச்னை அதிக முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை உணர்ந்து கனம் விவசாயத்துறை அமைச்சர் இதற்கு முக்கியத்துவம் அளிக்க முன் வரவேண்டுமென்று கூற விரும்புகிறேன்.

ஏற்கெனவே புறம்போக்கு நிலங்களாக இருக்கக்கூடிய நிலங்கள் பல லட்சக்கணக்கான ஏக்கர்கள் இருக்கின்றன. 55–56-ம் ஆண்டு புள்ளிவிவரப்படி சுமார் 45,41,536 ஏக்கர் நிலம் இன்னும் சாகுபடிக்குக் கொண்டுவரக்கூடிய தகுதியுள்ள நிலங்கள் வீணாகக் கிடக்கிறது என்று அறிகிறேன். இந்த நிலங்களை உடனடியாக சாகுபடிக்குக் கொண்டுவர அரசாங்கம் முன் வர வேண்டும். இவைகளைக் குறித்து அரசாங்கம் புள்ளி விவரங்கள் கொடுத்தால் போதாது. இந்த நிலத்தை ஏன் இவ்வாறு போட்டு வைத்திருக்கிறார்கள், ஏன் இத்தனை நிலங்களை, சாகுபடிக்குத் தகுதியுள்ள நிலங்களை, சாகுபடி செய்யாமல் போட்டு வைத்திருக்கிறார்கள், ஏன் சாகுபடி செய்யக்கூடாது, என்ற விவரங்களை, தகவல்களை அரசாங்கம் விவரமாக வெளியிட்டாக வேண்டும். 45 லட்சம் ஏக்கர் நிலங்கள் வீணாக இருக்கிறது என்றால் அந்த ஆண்டு அறிக்கையில் அந்த 45 லட்சம் ஏக்கர் நிலத்தில் எத்தனை ஏக்கர் நிலம் அந்த ஆண்டிலே சாகுபடிக்குக் கொண்டுவரப்பட்டது, அதற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் என்ன என்று அவர்கள் தெளிவாக எடுத்துக் கூறக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இதனைத் தெரிந்துகொள்ள சபைக்குப் பரிபூர்ண உரிமை இருக்கிறது என்று சொல்ல விரும்புகிறேன்.

கனம் அமைச்சர் அவர்கள் தங்கள் அறிக்கையிலே தெற்கு மண்டலம் அமைத்தது குறித்தும், அந்தத் தெற்கு மண்டலத்திலே நம் ராஜ்யத்தின் நிலை குறித்தும் தெளிவாக அவருடைய கருத்தை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு நான் அவரைப் பாராட்ட விரும்புகிறேன். நம் ராஜ்யத்தை மாத்திரம் ஒரு மண்டலமாக வைத்துக்கொள்ளவேண்டுமென்பது நம் அரசாங்கத்தின் கொள்கை என்றும், அந்தக் கொள்கையை மத்திய சர்க்காருக்கு அறிவித்ததாகவும், அதற்கு தெற்கு மண்டலத்தில் நம் ராஜ்யம் இருக்கவேண்டுமேயல்லாது, நம் ராஜ்யம் ஒரு மண்டலமாக அமைவதை மத்திய சர்க்கார் ஏற்கவில்லை என்றும் கனம் அமைச்சர் அவர்களுடைய அறிக்கையிலிருந்து கண்டுகொள்கிறோம். இதனால் என்ன பலன் கிடைத்தது ? நாமே தனித்து இயங்கக்கூடிய அளவிற்கு, நமக்குப் போதிய அளவிற்கு தானியத்தை உற்பத்தி செய்யக் கூடிய வசதி இருக்கிறதா என்பதை கனம் அமைச்சர் அவர்கள் அறிக்கையில் தெரிவிக்கவில்லை. இந்த மண்டலத்தில் சேர்ந்ததால் நாம் அடைந்த பலன்கள், நன்மைகள் என்ன என்பதையும் அவர்கள் விளக்கவில்லை.

நான் என்னுடைய கருத்தை மீண்டும் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.
நம் நாட்டின் பொதுவான தேவையை அனுசரித்து, உணவுப் பண்டங்களை 11-40 a.m.
உற்பத்தி செய்வதையும், நமது ராஜ்யத்தின் குறிப்பான தேவைகளுக்கு ஏற்ப உணவு தான்யங்களைச் சேமிப்பதையும் நமது உணவுக் கொள்கையாக கொள்ள வேண்டும். அவ்வாறு செயல்படாவிடில் நம்முடைய ராஜ்யத்திலே

[Sri P. S. Chinnadurai] [10th September 1958

ஒரு செயற்கைப் பற்றுக்குறை சிருஷ்டிக்கப்பட்டாலும் கூட நான் ஆச்சரியப் படமாட்டேன். கேரளத்திலுள்ளவர்கள் தஞ்சையிலிருந்து ஏராளமான அரிசியை வாங்கிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை இந்த அறிக்கையிலே காண்கிறோம். தஞ்சையிலிருந்து கேரளத்திலுள்ளவர்கள் எவ்வளவு அரிசி வாங்கிறார்களோ, அந்த அளவுக்கு நமது ராஜ்யத்திற்கு ஆந்திரத்திலிருந்து போதுமான அளவு அரிசி கிடைக்கவில்லை. ஒரு புறத்திலே மத்திய அரசாங்கம் ஏராளமான உணவு தான்யங்களை வாங்கி, இருப்பு வைத்து, மற்ற ராஜ்யங்களுக்குக் கொடுக்கிறார்கள். ஆனால் நம்முடைய ராஜ்ய சர்க்கார் கேட்டபொழுது கூட அவர்கள் அதற்கு இணங்கவில்லை. நீங்கள் வேண்டுமானால் வாங்கிக் கொள்ளுங்கள், நாங்கள் வாங்கிக் கொடுக்க மாட்டோம் என்று கூறிவிட்டார்கள். நாம் மண்டலத்திற்குள் இருக்க வேண்டும் என்று மத்திய சர்க்கார் சொல்லுகிறார்கள். இந்த மண்டலத்திலிருந்து மத்திய சர்க்கார் அரிசி வாங்கி இருப்பு வைக்கிறது. ஆனால் வேறு ராஜ்யங்களுக்குக் கொடுத்து உதவுகிறது. நமக்குக் கொடுக்காமல், நீங்கள் வேண்டுமானால் வாங்கிக்கொள்ளுங்கள் என்று சொல்லுகிறார்கள். நாமாக அப்படி வாங்கிக்கொள்வதற்கும் முன்வரவில்லை. இந்த நிலையில் உணவுப்பண்டங்களின் விலை அநியாயமாக ஏறிக்கொண்டுபோகிறது. 10 சதவிகிதம் வேண்டுமானால் பண்டங்கள் விலை ஏற்றம் அடைந்திருக்கிறது என்று இறுதியாகச் சொல்லியிருக்கிறார்கள். உண்மையில் 10 சதவிகிதமல்ல. நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட் உரையின் போது கூறியது போல் 30 சதவிகிதத்திற்கு உணவுப் பண்டங்கள் விலை உயர்வு அடைந்திருக்கின்றன. நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டது சரியானதுதான் என்பதற்கு எவ்வளவோ ஆதாரங்களை எடுத்துச் சொல்ல முடியும். 1956-ம் ஆண்டிலே ஒரு மணங்கு அரிசியின் விலை 14·75 ரூபாய்களாக இருந்தது. நான் குறிப்பிடுவது கும்பகோணம் அரிசி. அதே அரிசி 1958-ம் வருடம் ஆகஸ்டு மாதத்திலே ரூ. 19·30 ஆக உயர்ந்திருக்கிறது. அது போலவே நெல்லூர் அரிசி 1956-ம் ஆண்டில் ரூ. 14·20 ஆக இருந்தது. சென்ற ஆகஸ்டு மாதத்திலே ரூ. 21·20 ஆக உயர்ந்திருக்கிறது. இதனைப் பார்க்கிற பொழுது, நெல்லூர் அரிசி 50 சத விகிதமும், கும்பகோணம் அரிசி 35 சத விகிதத்திற்கு மேலாகவும் உயர்ந்திருக்கிறது. ஆகவே, உணவுப் பண்டங்களின் விலை ஏற்றம் அக்கிரமமாக அதிகரித்துக்கொண்டு வருகிறது என்ற உண்மையை நாம் காண்கிறோம்.

அது மட்டுமல்ல. இந்த விலை உயர்வின் உண்மையான பலனை விவசாயிகள் அனுபவிக்கவில்லை என்ற உண்மையையும் நாம் காணமுடியும். குறிப்பாக, மார்ச் அல்லது ஏப்ரல் மாதங்களில் விலை குறைந்திருப்பதையும் அதற்குப் பிறகு உள்ள மாதங்களிலே விலைகள் படிப்படியாக ஏறிக்கொண்டு போயிருப்பதையும் நான் இச்சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். விவசாயிகளிடமிருந்து வியாபாரிகள் வாங்கும்போது விலை குறைவதையும், வியாபாரிகள் கைக்கு வந்த பிறகு, அதாவது அவர்கள் கிடங்குகளுக்குப் போய்ச்சேர்ந்த பிறகு பொது மக்கள் கைக்கு வருவதற்கு முன்னதாக விலைகள் உயர்ந்து போவதையும் நாம் அன்றாட நடவடிக்கையாகக் கண்டுவருகிறோம். அதனை இப்புள்ளி விவரங்கள் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. இந்த விலை உயர்வின் உண்மையான பலனை விவசாயிகள் அனுபவிக்கவில்லை என்ற விவரத்தை சர்க்கார் கவனத்தில் கொள்ள வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

இந்த உணவுப் பிரச்னையை அரசாங்கம் தன் சொந்தக் கட்சிப்பிரச்னையாக கருதாமல், எல்லாக் கட்சிகளுடைய பிரச்னையாகக் கருதி, பொது மக்களின் வாழ்க்கைப் பிரச்னையாகக் கருதி, எல்லாக் கட்சிகளுடைய ஒத்துழைப்பையும் பெற்று, இதைச் சரியானபடி சமாளிப்பதற்கு முன் வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்று உத்திரப் பிரதேசத்திலும், மேற்கு வங்கத்திலும், பீகாரிலும், ஒரிஸ்ஸாவிலும் ஏற்பட்டு இருக்கிற நிலைமை நம்முடைய ராஜ்யத்தில் ஏற்படாமல் தடுக்கவேண்டுமேயானால், இதற்கு எல்லாக் கட்சிகளுடைய பொதுவான ஒத்துழைப்புத் தேவை. அதனைத் பெறுவதற்கு இந்த அரசாங்கம் முயற்சிக்கவேண்டும். அதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டு, மேலும் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன்.

10th September 1958] [Sri P. S. Chinnadurai]

சமீபத்தில் ஸ்ரீ அசோக் மேத்தா தலைமையில் மத்திய அரசாங்கம் ஒரு கமிட்டியை நியமித்தது. அக்கமிட்டியின் சிபார்சுகளிலே மிகவும் முக்கிய மான சிபார்சு என்னவென்ருல், மகசூல் காலங்களில் விலையை நிர்ணயம் செய்வதற்கு சர்க்கார் தக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பது. இந்த சிபார்சை மத்திய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. எப்படி இருந்த போதிலும், நம்முடைய ராஜ்யத்தில் அதற்குரிய ஒரு ஏற்பாட்டைச் செய்வது விரும்பத்தக்கது. குறைந்தபட்ச விலையை மாத்திரம் நிர்ணயிக்காமல், அதிகபட்ச விலையையும் நிர்ணயித்தால் மிகவும் உபயோகமாக இருக்கும். அதன் மூலம் விவசாயிகள் உண்மையான பலனை அடைவார்கள். பொதுமக்களும் செயற்கை பற்ருக்குறையினுல் பாதிக்கப்பட மாட்டார்கள் என்று சொல்லிகொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, உணவு நிலைமையைப் பற்றி அநேகமாக வருடந்தோறும் இந்த சபையில் விவாதித்துக்கொண்டிருக்கிருேம். ஒவ்வொரு வருடமும் நமக்கு ஆறுதல் அளிக்கக்கூடிய முறையில் அமைச்சர் அவர்களின் பதில்கள் இருந் திருக்கின்றன. சென்ற வருடம் நவம்பர் மாதம் 7-ந் தேதி என்று நினைக்கிறேன், இதே சபையில் உணவுப் பிரச்னை கடைசியாக விவாதிக்கப் பட்டது. அந்த சமயத்திலும் "இனிமேல் உணவுப்பொருள்களின் விலை ஏருமல் பார்த்துக்கொள்ளமுடியும், இதுவரை எங்களுக்கு அதிகாரம் இல்லாமலிருந்தது, இப்பொழுது அதிகாரமும் வந்துவிட்டது, அதுமட்டு மல்ல. மண்டலங்கள் பிரிக்கப்பட்டு, தென் மண்டலத்தில் நான்கு ராஜ் யங்கள் ஒன்ருகச் சேர்ந்து, அவரவர்களுடைய தேவையைப் பரிமாறிக் கொள்வதற்கு ஒரு உதவிகரமான திட்டம் வந்துவிட்டது, ஆகவே, பிரச் னையை சமாளிக்கமுடியும்" என்று விவாதத்திற்கு பதிலளிக்கக் கூடிய சமயத்தில் அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். அதன்பிறகு, சென்ற மார்ச் மாதம் 1-ம் தேதியன்று, தன்னுடைய பட்ஜெட் பிரசங்கத்தில், நிதி அமைச்சர் அவர்களும் நமக்கு ஆறுதல் அளிக்கக்கூடிய வாக்குறுதி களைத்தான் கொடுத்தார்கள். நிதி அமைச்சர் அவர்களும் தன்னுடைய பிரசங்கத்தில் "நம்முடைய சென்னை ராஜ்யத்தில் சராசரி உற்பத்தியும் அதிகரித்திருக்கிறது, மொத்த உற்பத்தியும் அதிகரித்திருக்கிறது" என் பதற்குப் போதுமான புள்ளி விவரங்களைக் கொடுத்தார்கள். மேலும் "இந்தியா பூராவிலுமே ஒரு ஏக்கருக்கு சராசரி உற்பத்தி 750 பவுண்டு. ஆனுல் நம்முடைய ராஜ்யத்தில் சராசரி உற்பத்தி கிட்டத்தட்ட 1,500 பவுண்டு ஆகப் பெருகியிருக்கிறது. மொத்த உற்பத்தியும் 46 லட்சம் டன்னுகப் பெருகியிருக்கிறது. நம்முடைய தேவை 48 லட்சம் டன். ஆகவே பற்ருக் குறை 2 லட்சம் டன் தான். நமக்கு இனி உணவு நிலைமை சம்பந்தமாக நெருக்கடியே வராது. அதைப் பற்றிய விவாதம் கூட அவசியமில்லை" என்றெல்லாம் சொன்னுர்கள். நாங்களும் அவ்வாறே எதிர்பார்த்தோம். ஆனுல் இப்பொழுது நிலைமை மாறியிருக்கிறது. மண்டலங்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன. பதுக்கல் இருந்தால் பதுக்கிவைப்பவர்களை பிடிப்பதற்கு அதிகாரம் வந்துவிட்டது. அதனுல் பிரச்னை தீரும், விலைவாசி ஏருது என்றெல்லாம் எதிர்பார்த்தோம். அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய புள்ளி விவரங்களைப் பார்க்கலாம். புள்ளி விவரங்கள் மொத்த வியாபார புள்ளி விவரங்கள். சில்லரை விலையைப் பார்த்தால் இன்னும் அதிகமாக இருக்கும். அமைச்சர் அவர்கள் கொடுத்த தகவலிலிருந்து பார்க்கும் பொழுது கிட்டத்தட்ட ஒரு மணங்கின் சராசரி விலை ரூ. 21–8–0 ஆக இருக்கிறது. இது மட்டரக அரிசியின் விலை. உயர்தர ரக அரிசியின் விலை அல்ல. மட்டரக அரிசி ஒரு மணங்கு ரூ. 21 அல்லது 21–8–0 ஆக முக்கியமான பகுதிகளிளெல்லாம் விற்கப்பட்டு வருகிறது. கும்பகோணம், நாகர்கோவில் போன்ற இடங்களில் சிறிது விலை கம்மியமாக இருப்பதைக் கொண்டு கணக்குப் போடுவதில் பிரயோசனம் இல்லை. கும்பகோணத்திலும், நாகர் கோவிலிலும் விற்பனைக்காக வாங்குவது அதிகம். மற்ற பகுதிகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஒரு மணங்கு ரூ. 21–8–0 ஆக இருக்கிறது. அதாவது மூட்டை ஒன்றுக்கு ரூ. 43 அல்லது 44 ஆக இருக்கிறது. சில்லரை விலை யைப் பார்த்தால் இன்னும் அதிகமாகயிருக்கிறது என்பதைப் பார்க்கிருேம். இந்த விலை உயர்வை மற்ற ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால் பிரயோசனம்

[Sri M. Kalyanasundaram] [10th September 1958

இல்லே. ஆந்திரத்தோடு ஒப்பிட்டு, 8 அணு தான் குறைவாக இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஒப்புக் கொள்கிறேன். இன்னும் நம்மைவிட அதிகமாகப் பற்றுக்குறை உள்ள கேரள ராஜ்யத்தோடு ஒப்பிட்டு, மணங்கு 8 அணு அதிகமாகயிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். வடக்கே இருக்கக்கூடிய ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போழுது, இங்கு விலேவாசி மிகவும் குறைவாக இருக்கிறது என்று ஆறுதல் அளிக்கக்கூடிய சமாதானத்தைச் சொல்லுகிறார்கள். வடக்கே இருக்கக்கூடிய ராஜ்யங்களின் விலேவாசியோடு ஏன் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். நம்முடைய ராஜ்யத்திலுள்ள பிற பகுதிகளோடு ஒப்பிட்டுப்பாருங்கள். நியாய விலேயை ஒப்பிட்டுப் பார்த்து நிலேமையைப் புரிந்துகொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சென்ற வருஷம் நவம்பர் மாதம் அமைச்சர் அவர்கள் தன் பிரசங்கத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்கள்.

" தீர்மானத்தைக் கொண்டு வந்த பழனிசுவாமி அவர்கள் சொன்னார்கள். இந்த ஸோனல் ஏற்பாடு வந்ததினுல் என்ன பயன்? விலே அதிகமாக போய் விட்டதே என்று குறிப்பிட்டார்கள். நான் இதற்கு சொல்ல விரும்புவது என்ன வென்றால், இந்த ஸோன் ஜூலே மாதத்தில் ஏற்பட்டது. அப்போது இந்த ராஜ்யத்தில் சராசரி விலே மணங்குக்கு 18·77 ரூபாயாக இருந்தது. இப்பொழுது நமது ராஜ்யத்தில் சராசரி மணங்கு விலே 18·50 ரூபாய்தான். ஆகவே ஸோன் வந்த பிறகு விலே அதிகமாக ஏறிவிட்டது. என்று சொல்வதற்கு இல்லே. இருந்தாலும் இந்த விலே பாதகம் இல்லே என்று நான் சொல்லவில்லே. இந்த விலே அதிகம் என்றுதான் சொல்லுவேன். வாங்கும் சக்தியை நாம் பார்க்கவேண்டும். அந்த வாங்கும் சக்தியை எடுத்துக்கொண்டு பார்ப்போமானுல் இந்த விலே அதிகம் என்பதுதான். அரசாங்கத்தினுடைய கருத்து, என்னுடைய கருத்தும் அவ்விதம் தான். இந்த விலே இனியும் குறையவேண்டும். இதன் விலே பதினைங்கு ரூபாயாக குறைந்தால்கூட நான் வரவேற்பேன். ஆனல் அதற்கு மேலும் குறையக்கூடாது." அமைச்சர் அவர்கள் இவ்வாறு கூறியிருப்பதை சட்டசபை நடவடிக்கைகளிலிருந்து நான் படிக்கிறேன். ரூ. 14 லிருந்து ரூ. 16 வரை நியாயமான விலே என்று தாம் கருதுவதாக அமைச்சர் அவர்களே அன்று கூறியிருக்கிறார்கள். ரூ. 14-க்கு கீழே போனல் விவசாயிகளுக்கு கஷ்டம். ரூ. 16-க்கு மேலே போனல், உபயோகபடுத்தும் மக்களுக்கு கஷ்டம் என்று அமைச்சர் அவர்களே கூறியிருக்கிறார்கள். அப்படியிருந்தும் விலே குறைவதற்கு அமைச்சர் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்ற விவரம் தரவில்லே. ரூ. 16-க்கு பதிலாக இப்பொழுது ரூ. 21-க்கு விற்கிறது. மூட்டை ஒன்றுக்கு விலே ரூ. 10 அதிகமாக இருக்கிறது. அப்படியிருக்கும்போழுது விலேவாசி ஏதோ சிறிது அளவு தான் உயர்ந்திருக்கிறது. அல்லது வடக்கே இருப்பதைவிட நம்முடைய ராஜ்யத்தில் மலிவாக இருக்கிறது என்று சொல்லி திருப்தி அடைவதற்கு இல்லே என்பதை அமைச்சர் அவர்கள் முதலில் மனதில் வைக்கவேண்டும் என்று நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த காலகட்டத்தில் மூட்டைக்கு விலே ரூ. 10, 12 அதிகரித்திருக்கிறது என்பதை பார்க்கவேண்டும். அமைச்சர் அவர்களே நியாயம் என்று கருதிய விலேக்கு மேல் இப்பொழுது அதிக விலே விற்கிறது. இம்மாதிரி உணவு விலே அதிகரித்ததற்கு காரணம் என்ன என்பதை அமைச்சர் அவர்கள் சிந்திக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். விலே அதிகரிப்புக்கு காரணம் பற்றுக்குறையாக இருக்கலாம். பற்றுக்குறையால் விலே அதிகரித்திருந்தால் அதை என்னுல் புரிந்துகொள்ளமுடியும். அப்படியானுல் அரிசி கிடைக்காமல் மக்கள் கஷ்டப்படவேண்டும். அது இல்லேயே ? படிக்கு விலே ரூ. 1·25 அல்லது 1·31 கொடுத்தால் உயர்தரமான அரிசி எவ்வளவு வேண்டுமானுலும் வாங்கலாம். நமது ராஜ்யத்தில் அரிசி கிடைக்காத கஷ்டமில்லே. விலேவாசி அதிகமாக இருக்கக்கூடிய கஷ்டம் தான் ஏற்பட்டிருக்கிறது. வடக்கே ஐக்கிய பிரதேசம், பீஹார், மேற்கு வங்காளம் ஆகிய இடங்களில் இருக்கக்கூடிய நிலேமை வேறு. அங்கு உணவு பண்டமே கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. அதன் காரணமாக அங்கே விலே ஏறியிருக்கிறது. இங்கே உணவு கிடைக்காத கஷ்டம் மக்களுக்கு இல்லே. மக்கள் வாங்கக் கூடிய விலேக்கு அரிசி கிடைக்காததுதான் கஷ்டமே தவிர, அரிசி கிடைக்காத கஷ்டமில்லே. அப்படியானுல் அரிசி

10th September 1958] [Sri M. Kalyanasundaram]

விலை ஏறுவதற்கு காரணம் என்ன என்பதை அமைச்சர் அவர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அதற்குக் காரணம் அவர்களுக்கு தெரியாமல் இருக்காது. மறைமுகமாக சில காரணங்களை சொல்லியிருக்கலாம். சென்னையிலிருந்து 2 லட்சம் டன் வெளி ராஜ்யத்திற்கு போவதாகச் சொல்லியிருக்கிறார். சென்னை ராஜ்யத்திலிருந்து வெளி ராஜ்யங்களுக்கு போன மொத்த அளவு 216,000 டன் ஆகும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. சராசரி 2 லட்சம் டன்களுக்கு மேல் இருக்கிறது. கேரள ராஜ்யத்திற்கு சென்றிருக்கலாம். மைசூர் ராஜ்யத்திற்கு சென்றிருக்கலாம். இதற்குக் குறைவாகவும் சென்றிருக்கலாம். அதிகமாகவும் சென்றிருக்கலாம். அதைப் பற்றி நான் அதிகமாக சொல்லப்போவதில்லை. என்ன பார்க்கவேண்டுமென்றால், தென்மண்டலம் ஒன்று அமைத்தார்களே, நம்முடைய ராஜ்யத்திற்கு வரவேண்டிய உணவு பூராவும் வந்ததா ? அதற்கு என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ? ஆந்திர ராஜ்யம் வேறு, சென்னை ராஜ்யம் வேறு, மைசூர் ராஜ்யம் வேறு, கேரள ராஜ்யம் வேறு என்று இருந்த போதிலும், இந்த ராஜ்யங்கள் ஒன்றுக்கொன்று ஒத்துழைத்து, ஒரு ராஜ்யத்தின் கஷ்டத்தை மற்றொரு ராஜ்யம் மதித்து, ஒரு ராஜ்யத்தின் தேவையை மற்ற ராஜ்யம் பூர்த்தி செய்வதற்கு அக்கரை எடுக்கவேண்டும் என்ற உயர்ந்த கருத்தின் அடிப்படையில் இந்த மண்டலம் அமைக்கப்பட்டது உண்மையாக இருந்தால், ஏன் ஆந்திர ராஜ்யத்திலிருந்து சென்னை ராஜ்யத்திற்கு வரக்கூடிய அரசியின் அளவு குறைந்திருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் தயவு செய்து இச்சபையில் விளக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். மண்டல திட்டம் ஏற்பட்டதன் அர்த்தம் என்ன, நோக்கம் என்ன, கருத்து என்ன என்பதையும் கடந்த சட்டசபை கூட்டத்தில் அமைச்சர் அவர்கள் விளக்கியிருக்கிறார்கள் :

"மைசூர், சென்னை, கேரளம், ஆந்திரம் இந்த நான்கு ராஜ்யங்களும் சேர்ந்து இந்த உணவு பிரச்னையை சமாளிக்கும் விஷயத்தில் ஒரு ஸோன் என்று ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்விதம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்றால் அதனுடைய அடிப்படையான கருத்து, முக்கியமான கருத்து, இந்த நான்கு பிராந்தியங்களின் எல்லைகளுக்கு அப்பால் வெளியே உணவுப் பொருட்கள் மத்திய அரசாங்கத்தின் உத்தரவின்றி ஏற்றுமதி செய்யக்கூடாது என்பதுதான் அடிப்படையானது."

என்று அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அப்படியானால் தெற்கிலிருந்து ஆந்திர ராஜ்யத்திற்கு வடக்கே அரிசி போகக்கூடாது என்று திட்டவட்டமாக கூறப்பட்டிருக்கிறது. அப்படி போக வேண்டிய அவசியமிருந்தால், மத்திய சர்க்கார் வாங்கி, அவர்களுடைய அனுமதியைப் பெற்றுத்தான் போக முடியும் என்பதை திட்டவட்டமாக அமைச்சர் அவர்களே எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அப்படியிருந்தும், ஆந்திராவில் ஆறு லட்சம் டன் அரிசி உபரி இருக்கிறது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அந்த ஆறு லட்சம் டன் எங்கே போகிறது ? ஆந்திராவில் இருக்கக்கூடிய மக்கள் ஒரு பவுண்டுக்கு மேல் இரண்டு பவுண்டு சாப்பிட்டுவிடுகிறார்களா ? அதனால் அரிசி இல்லாமல் போய்விட்டதா ? ஆந்திரா பிரிந்த பிறகு, 1954–55-ல் ஆந்திராவிலிருந்து கிட்டதட்ட ஒரு லட்சம் டன் அரிசி நம் ராஜ்யத்திற்கு வந்தது. ஆனால் இப்பொழுது 12,000 டன்கள்தான் வருவதாக அமைச்சர் அவர்கள் தன்னுடைய புள்ளி விவரத்தில் காட்டியிருக்கிறார்கள். ஆந்திராவிலிருந்து வரக்கூடிய அரிசி இப்பொழுது எந்த அளவிற்கு குறைந்திருக்கிறது ? முன்பு வந்த அரிசியில் பத்தில் ஒரு மடங்குதான் இப்பொழுது வருகிறது. இதற்கு என்ன காரணம், மண்டலம் அமைத்ததின் அர்த்தம் என்ன, மத்திய சர்க்காரும், சென்னை சர்க்காரும் இதற்காக என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள். போதுமான அளவு அரிசி ஆந்திராவிலிருந்து இங்கு வருவதற்கு ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை என்பதை அறிய விரும்புகிறேன். இதனுடைய உண்மையான காரணம் என்னவென்பதை சுருக்கமாகச் சொல்லிவிட்டு, மற்ற விஷயங்களுக்கு போகலாம் என்று நினைக்கிறேன். அரிசி விலை இந்த அளவிற்கு உயரக்கூடிய பற்றுக்குறை நம் நாட்டில் இல்லை. நான்கு ராஜ்யங்களும் ஒன்றாகச் சேருமானால் ஓரளவுக்கு சமாளிக்கக்கூடிய பற்றுக்குறை இருந்தால் இருக்குமே தவிர, அரிசி விலை இவ்வளவு உயரக்கூடிய அளவிற்கு பற்றுக்குறை இல்லை. இது விஷயமாக தகுந்த நடவடிக்கை

[Sri M. Kalyanasundaram] [10th September 1958

எடுப்பதற்கு சர்க்கார் தவறிவிட்டார்கள். ஆந்திராவிலிருந்து வடக்கே அரிசி செல்லுவதை தடுப்பதற்கு நடவடிக்கை எடுத்திருக்க வேண்டும். ஆந்திராவில் உள்ள வியாபாரிகள் இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொள்ளாமல் சும்மா விட்டுவிடுவார்களா ? ஐக்கிய பிரதேசம், பீஹார், மேற்கு வங்காளம் ஆகிய இடங்களில் அரிசி விலை ஒன்றுக்கு இரண்டாக விற்கும் பொழுது; வியாபாரிகள் எட்டு அணு கூட வைத்து சென்னைக்கு அனுப்பி விடுவார்களா ? சர்க்கார் தலையிட்டு அரிசியை கொள்முதல் செய்திருக்க வேண்டும். சென்னை ராஜ்யத்திற்கு அரிசி போதுமான அளவு வராததற்குக் காரணம், ஆந்திர ராஜ்ய சர்க்காரும், மத்திய சர்க்காரும் தலையிட்டு கொள் முதல் செய்யாமல் இருந்துவிட்டதால், வியாபாரிகள் கையில் விட்டுவிட்டதினால் அவர்கள் தங்கள் இஷ்டம்போல் கொள்ளை லாபத்தைக் கருதி மண்டலத்திற்கு வெளியே அரிசியை கள்ளக்கடத்தல் செய்தார்கள் என்ற முடிவுக்கு வராமல், வேறு எந்த முடிவுக்கு வர முடியும் என்று அமைச்சர் அவர்களை கேட்க விரும்புகிறேன். இதைத் தடுப்பதற்கு என்ன நடவடிக்கை எடுத்தார்கள் ? மத்திய சர்க்கார் தலையிட்டு கொள்முதல் செய்திருக்கலாம். ரோடு, ரயில் மூலமாக அரிசி கொண்டுபோகப்படுவதை தடுப்பதினால் மட்டும் இதில் நாம் வெற்றி அடைந்துவிட முடியும் என்று நான் நினைக்கவில்லை. ஏனென்றால், ரோடு மூலமாக திருட்டுத்தனமாக அரிசி கொண்டு போவது எப்பொழுதும் சாத்தியம். இதற்கு முக்கியமான காரணம் ஆந்திராவில் இருக்கக்கூடிய வியாபாரிகள் கொள்ளை லாபத்தையே நோக்கமாகக் கருதி அரிசியை வடக்கே அனுப்புவதுதான். அரிசி உண்மையாகவே வடக்கே தேவையாக இருந்தால், மத்திய சர்க்கார் அரிசியை கொள்முதல் செய்து, நமக்கு வேண்டிய அளவு கொடுத்து வெளியேயும் அனுப்பியிருந்தால், இந்த சங்கடம் ஏற்பட்டிருக்காது. அப்படிப்பட்ட அதிகாரம் இருந்தும்கூட மத்திய சர்க்கார் இதை ஏன் செய்வதற்கு முயற்சி எடுக்கவில்லை ? நம்முடைய ராஜ்ய சர்க்கார் ஏன் முயற்சி எடுக்கவில்லை ?

எப்பொழுதும் ஜனவரி, பிப்ரவரி மாதம் அறுவடை காலம். ஜனவரி, பிப்ரவரி மாதத்தில்தான் விலைவாசிகள் மிகவும் குறைவாக இருக்கக்கூடிய காலம். மற்ற வருஷங்களோடு விலை வாசியை ஒப்பிட்டுப் பார்த்தால், ஜனவரி 1956-ல் விலை ரூ. 14·89, 1957-ல் ரூ. 16·99, 1958 ஜனவரியில் ரூ. 18·19 விலையாக இருந்திருக்கிறது. ஆரம்பத்திலேயே விலை சூடாக இருந்திருக்கிறது. அக்டோபர் மாதத்தில் குறுவை அறுவடைக் காலத்தில் விலை கொஞ்சம் குறையலாம் என்று அமைச்சர் அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். சர்க்காரே நியாயம் என்று கருதக்கூடிய விலைக்கு மணங்குக்கு ரூ. 2½ அல்லது 3 அதிகமாக ஜனவரிலேயே இருந்திருக்கிறது. மூட்டைக்கு ரூ. 6 அதிகமாக இருக்கிறது. ராஜ்ய சர்க்கார் தன்னுடைய அதிகாரத்தை உபயோகித்து கொள்முதல் செய்வதற்கு ஏதாவது நடவடிக்கை எடுத்தார்களா, கொள்முதல் செய்திருந்தால் எவ்வளவு கொள்முதல் செய்திருந்தார்கள் இம்மாதிரி விலை உயர்ந்திருக்கக்கூடிய காலத்தில் என்பதை நான் அறிய விரும்புகிறேன். அவர்கள் தங்கள் அதிகாரத்தை சரியானபடி பயன்படுத்தவில்லை. அதன் காரணமாகத்தான் பதுக்குவதற்கு வாய்ப்பு அதிகரித்து, வியாபாரிகள் வாங்கி பதுக்கி வைத்ததினால் இந்த அளவிற்கு விலை உயர்ந்திருக்கிறது என்பதைத் தவிர வேறு முடிவுக்கு வர முடியாது. நம்முடைய ராஜ்யத்தில் இருக்கக்கூடிய வியாபாரிகள் மட்டுமல்ல. ஆந்திராவில் இருக்கக்கூடிய வியாபாரிகள் அந்த ராஜ்யத்திலுள்ள அரிசியை வாங்கிப் பதுக்குவது மட்டுமல்ல, தமிழ் நாட்டிலும் வந்து வாங்கிச் செல்லக்கூடிய வாய்ப்பும் வசதியும் அவர்களுக்கு கொடுத்துவிட்டு, கேரளாவிற்கு
12 noon. இரண்டு லட்சம் டன் அரிசி அனுப்பப்படுகிறது என்று மறைமுகமாக சுட்டிக் காட்டுவது அவ்வளவு சரியல்ல என்பதை நான் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். கேரளா மண்டலத்தில் இருப்பதை ஒப்புக்கொண்ட பிறகு கேரளாவின் பொறுப்பும் இருக்கத்தான் செய்யும். அமைச்சர் அவர்கள், தங்களுக்கு கொடுத்து இருக்கும் அதிகாரத்தை, வாக்குறுதி கொடுத்தபடி செய்யாது விட்டுவிட்டது ஒரு முக்கிய காரணம். மத்திய சர்க்கார் பாதுகாப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுப்பதிலிருந்து தவறி இருக்கிறது. மத்திய சர்க்கார் ராஜ்ய சர்க்கார் இரண்டுமே சேர்ந்துதான் இந்த விலை உயர்வுக்குக் காரணமே தவிர, விவசாய உற்பத்தி பெருகாதது காரணம் இல்லை, என்பதை சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஆகையினால்,

இருக்கக்கூடிய அதிகாரத்தை உபயோகிக்காமல், வியாபாரிகளுக்கு அனுதாபம் காட்டாமல் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். சர்க்காருக்கு, அவர்கள் சேமித்து வைத்திருக்கும் சரக்குகளைக் கைப்பற்ற அதிகாரம் இருக்கிறது. இவர்களுக்கு சேமித்து வைத்திருக்கும் இடங்கள் தெரியாதா ? ஏன் அந்த அதிகாரம் உபயோகிக்கப்படவில்லை ? வியாபாரிகளுக்கு இந்த சர்க்கார் ஒரு தொந்தரவும் தங்களுக்கு கொடுக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கை இருப்பதால்தான் பணம் ஈடு செய்து, இந்த அரிசியைப் பதுக்கி வைத்து, விலை உயர்வு ஏற்பட்டபொழுது விற்கலாம் என்ற முறையில் நடந்து கொள்ளுகிறார்கள்.

MR. SPEAKER : The hon. Member has already taken seventeen minutes.

SRI M. KALYANASUNDARAM : இதோடு முடித்து விடுகிறேன். விலைவாசி உயர்வுக்குக் காரணம், ராஜ்ய சர்க்கார் கையாண்டு வரும் அதிகாரத்தை உபயோகிக்க மறுக்கும் கொள்கைதான். இதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சமீபத்தில் பஞ்சாலை நெருக்கடியைப் பற்றி விசாரித்த கமிட்டியார் செய்த சிபார்சு என்னவென்றால், உணவுப் பொருள்கள் விலை அதிகரிப்பதால், மக்களிடத்தில் உபயோகப் பொருள்களான, துணி போன்றவை வாங்கும் சக்தி குறைந்து பெரும் நெருக்கடி ஏற்படுகிறது. இந்த 58–ல் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் குறிப்பிட்டு இருப்பது என்னவென்றால், அரிசி விலை உயர்ந்து விட்டது, பிறகு விறகு விலை உயர்ந்து விட்டது, எண்ணெ விலை உயர்ந்துவிட்டது, பருப்பு விலை உயர்ந்து விட்டது என்றெல்லாம் குறிப்பிட்டிருக்கிறது. உணவுப் பிரச்னை ஏதோ மக்கள் பட்டினியால் செத்தால்தான் என்று நினைக்க வேண்டாம். அது மற்ற துறைகளிலும் ஏற்படும் நெருக்கடிகளைப் பொறுத்தது. இன்று மில் முதலாளிகள் உற்பத்தியை 25 சதம் குறைக்கப் போவதாகச் சொல்கிறார்கள். கைத்தறிக்காரர்கள் ஜவுளி வாங்க மக்கள் இல்லை என்கிறார்கள். ஆகையால் இந்த உணவு பிரச்னை ஒரு சாதாரணப் பிரச்னை இல்லை. திருப்திகரமாக இருக்கிறது என்று உள்ளம் புளகாங்கிதம் அடைந்து மக்களையும் ஏமாற்றி, தங்களையும் ஏமாற்றிக்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொண்டு என் பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

*SRI C. N. ANNADURAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, உணவு நிலைமையில் இந்த ஆண்டு ஏற்பட்டிருக்கும் வளர்ச்சியை நாம் எல்லாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற விதத்தில், அமைச்சர் அவர்களால் தயாரிக்கப்பட்டு, மன்றத்திலே ஒப்புவிக்கப்பட்டிருக்கின்ற அறிக்கையில் நான் அதிகமான அளவுக்குத் திருப்தி அடைவதற்கில்லை என்னும்பதை நான் சுட்டிக்காட்டுவதைப் போலவே, கனம் அங்கத்தினர்கள் பல இதற்கு முன்னாலே எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

பற்றாக்குறையாக இருந்த இந்த மாநிலத்தினுடைய உணவு நிலைமையை, ஓரளவுக்கு அதிகப்படியான விளைவு இருக்கிறது என்று புள்ளி விவரங்கள் மூலமாக கொஞ்சம் திருப்தியடையத்தக்க வகையில் மாற்றியமைத்திருக்கின்றவர்களை நாம் பாராட்டத்தான் வேண்டும்.

பற்றாக்குறையாக இருந்த இந்தமாநிலத்தினுடைய உணவு நிலைமை மேலே இருக்கும் மேற்கு வங்காளத்தைப் போலவோ, பீகாரைப் போலவோ, உத்தரப் பிரதேசத்தைப் போலவோ மோசமான நிலைமைக்குச் சென்றுவிடவில்லை. அங்கு மக்கள் உணவுக்காகத் திண்டாடி, சட்ட மன்றத்திலேயும் சட்ட மன்றத்திற்கு வெளியிலேயும் அதனுடைய எதிரொலிகளும் கலவரங்களும் அதிகமான அளவுக்குப் பரவியிருக்கிறதென்பதை நாம் இன்றைய தினம் பார்க்கின்றோம். அந்த வகையிலே எல்லாம் இல்லாமல், பற்றாக்குறையாக இருந்த இந்த மாநிலம், ஓரளவுக்குத் தன்னுடைய நிலைமையைச் சரி செய்து கொள்ளுகின்ற அளவுக்கு வளர்ந்திருப்பதற்காக நாம் பாராட்டத்தான் வேண்டும். ஆனால், யாரைப் பாராட்ட வேண்டும் என்பதிலேதான் எனக்கும் மற்றவர்களுக்கும் கருத்து வேறுபாடு இருக்கிறது. இந்த மாநில அமைச்சரவையோ சர்க்காரையோ பாராட்டப்படவேண்டியவர்கள் என்று சர்க்கார்த்தரப்பிலே உள்ளவர்கள் கருதிக்கொண்டி

[Sri C. N. Annadurai] [10th September 1958

ருக்கிறார்கள். எவ்வளவு பெரிய இடுக்கண்கள், இடையூறுகள், இன்னல்கள் திணிக்கப்பட்டாலும், அவைகளையெல்லாம் சமாளித்துக்கொண்டு, இந்த அளவுக்குகாகிலும் உற்பத்தியை அதிகமாகச் செய்து காட்டியிருக்கின்ற உழவர் பெருங்குடி மக்கள் தாம் உண்மையான பாராட்டுதலுக்கு உரியவர்கள் என்பதை இந்த மன்றத்திலே நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

உழவர் பெருங்குடி மக்களுக்கு உரிமைகள் சரவர வழங்கப்படவில்லை என்பது ஒருபுறம் இருக்கிறது. அவர்களுடைய உழவுத் தொழிலுக்குத் தேவையான உபகரணங்கள் நல்ல வகையில் தரப்படவில்லை என்பதை ஒவ்வொருவரும்.—ஆளும் கட்சியிலுள்ள ஒவ்வொருவரும் அழுகுரலோடு—ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். உற்பத்தி செய்கிற பண்டங்களைக் கட்டிக் காக்கும் உரிமையும் பொறுப்பும் அவர்களிடத்திலே ஒப்படைக்க வில்லை என்று பல கட்சிகளிலே உள்ளவர்கள் வலியிறுத்திக் காட்டியிருக்கிறார்கள். இவ்வளவு பெரிய தொல்லைகளுக்கிடையே நம்முடைய மாநிலத்தில் உள்ள உழவர் பெருங்குடி மக்கள் உற்பத்தியைப் பெருக்கி, நம்மை அவல நிலைமைக்கு ஆளாக்காமல் பார்த்துக்கொண்டதற்காக இந்த மன்றத்திலேயுள்ள எல்லாக் கட்சி அங்கத்தினர்களும், இந்த மன்றத்தில் சம்பந்தப்பட்ட அனைவரும் உழவர் பெருமக்களுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

உணவு நிலைமை எந்த அளவு இருக்கிறதென்பதை ஆளும் கட்சியினர் அல்லது அமைச்சரவை எடுத்துக்காட்டும் நேரத்தில், என்ன செய்துவிட்டோம் என்பதை எடுத்துக்காட்டுவதைவிட, என்ன செய்திருக்கலாம் என்பதை எடுத்துச் சொல்லி, அதிலே எந்த அளவு வெற்றி பெற்றிருக்கிறோம் என்று சுட்டிக்காட்ட வேண்டியது ஒரு நல்ல க்ஷேமநல சர்க்காருடைய அடிப்படைக் கொள்கையாகும். நாட்டு மக்களைப் பட்டினி போடாமல் பார்த்துக்கொண்டோம் என்று எடுத்துச் சொல்வதாலேயே ஒரு நல்ல க்ஷேமநல சர்க்காருக்கு கீர்த்தி ஏற்பட்டுவிடாது. உலகத்திலேயே பயங்கரமான யுத்தம் நேரிட்ட காலத்தில், இந்த நாட்டை ஆண்டு கொண்டிருந்த அன்னியர் இந்த நாட்டில் பட்டினி ஏற்படாமல் பார்த்துக் கொள்வதற்காக வெளிநாடுகளிலிருந்தும் உணவுப் பொருள்களை வரவழைத்து மக்களை ஓரளவு அமைதியாக வைத்திருந்தார்கள். அமைதியாக வைத்திருந்தார்கள் என்று நான் சொல்வதை அடிமைகளாக வைத்திருந்தார்கள் என்று வேண்டுமானால் சில அரசியல் கட்சிகள் தங்களுடைய அகராதியிலுள்ள பதத்தைப் பயன்படுத்தலாம். அந்த யுத்த காலத்தில் எடுத்துக் கொண்ட முயற்சிகளைவிட, சாதாரண காலத்திலே நாம் எடுத்துக்கொண்டிருக்க வேண்டிய முயற்சிகளை தீவிரமான விதத்தில் எடுத்துக்கொண்டிருப்போமானால், நம்முடைய மாநிலத்திலே பற்றுக்குறை நிலைமையை மாற்றிவிட்டோம் என்பது மட்டுமல்ல, நம்முடைய மாநிலத்திலே தங்கு தடை இல்லாமல், மக்கள் அத்தனை பேரும் மூன்று வேளை வயிறார உண்டு, மீதம் இருக்கும் உணவுத் தானியங்களை வெளி மாநிலங்களுக்கும் வள்ளல் தன்மையோடு வழங்கி, அதன் மூலம் கிடைக்கும் வருவாயை வைத்துக்கொண்டு இந்த மாநிலம் நல்ல முறையிலே வளர்ச்சி அடைந்திருக்க முடியும். அந்த நல்ல எண்ணம், ஆர்வமான எண்ணம், என்னுடைய மனதிலே தோன்றுவதற்குக் காரணம், இந்த சட்ட மன்றத்திலே இதற்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர் ஒருவர், மற்ற மற்ற கட்சிகள் நாடு பிரியவேண்டும் மக்கள் பிரியவேண்டும் என்று பார்க்கிறார்களே தவிர, ஜப்பான் நாட்டிலே உள்ளதைப்போல் உள்ளங்கை அளவுகொண்ட நிலத்தைக்கூட பாழ்படுத்தாமல், தண்ணீரின் மேல் ஒரு மூங்கில் பாலம் அமைத்து, அதன் பேரில் மண்ணைத் தூவி, நல்லவிதமாக பயிர் செய்கிறார்கள் என்று சொன்ன நேரத்தில், பிற பிற நாடுகளில் எப்படி எப்படியெல்லாம் பயிர் செய்கிறார்கள் என்ற எண்ணம் தோன்றிற்று.

கடல், நாட்டையே அழித்துக்கொண்டு போய்விடும் நிலையில் இருக்கும் நாடுகள் உலகத்திலே இருக்கின்றன. பூகம்பம் மிகுந்திருக்கக்கூடிய நாடுகளும் உலகத்தில் இருக்கின்றன. எரிமலைகள் நிறைந்த நாடுகளும் உலகத்தில் இருக்கின்றன. மழையை ஆண்டொன்றுக்கு ஒரு திங்கள்கூட காணாத நாடுகளும் உலகத்தில் இருக்கின்றன. அந்த நாட்டிலே உள்ளவர்கள்

10th September 1958] [Sri C. N. Annadurai]

செய்யத்தக்க அளவுக்கு த்தீவிரமாக திட்டங்களை இந்த நாட்டிலே உள்ளவர்கள் செய்யவேண்டிய அவசியம் இருக்கிறதா என்றால், இயற்கை அந்த அளவு நம்மை இன்னல்களுக்கு ஆளாக்கவில்லை. நம்முடைய நில வளத்தில், நீர் வளத்தில் வேறு பலநாடுகளில் உள்ளதைவிட நம்நாடு குறைந்தது அல்ல. பூசாரமும் மற்ற நாடுகளில் உள்ளதைப்போல் பிற்பட்ட நிலையில் இருக்கவில்லை. ஆனால், மன வளம் தான் இல்லை. நமக்கு மன வளம் இல்லை என்பதைவிட ஆளும் கட்சியில் உள்ளவர்களுக்கு மக்களுடைய மனதை ஆராய்ந்து பார்க்கத்தக்க அளவுக்கு மன வளம் இல்லாததால்தான், இந்த அளவுக்கு நிலைமை சீர்குலைந்திருக்கிறதே தவிர, தீவிரமான திட்டங்களிட்டு உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்று ஆரம்பித்திருப்போமானால்—என்னுடைய பிற அங்கத்தினர்கள் அகில இந்தியக் கண்ணோட்டத்தோடு பார்க்கவேண்டும் என்று சொன்னதுபோல—அகில இந்தியாவுக்கு மட்டுமல்ல, பல வெளிநாடுகளுக்கும் நாம் ஏற்றுமதி செய்யத் தக்க அளவு நம்முடைய நாட்டில் உணவு உற்பத்தியை அதிகப் படுத்திக் காட்டியிருக்கலாம்.

அந்த வகையில் செல்ல வேண்டுமென்றால் இந்த உணவு உற்பத்திப் பிரச்னை தனிப்பட்ட பிரச்னையல்ல என்பதையும் அத்துடன் இணைந்திருக்கிற 12-10 p.m. வேறு பல பிரச்னைகளையும் மற்றவர்கள் எண்ணிப் பார்த்தாகவேண்டும். உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டிய பல காரியங்களில் சர்க்கார் தவறி இருக்கிறார்கள் என்பதைப் பல அங்கத்தினர்கள் சுட்டிக்காட்டினார்கள். அப்படிச் சுட்டிக் காட்டுகிற நேரத்தில் நீர்ப்பாசனத்தை சரியான முறையில் விருத்தி செய்து எந்த அளவில் அதைச் சர்க்கார் பயன்படுத்திக்கொள்ளவேண்டுமோ அந்த அளவில் பயன்படுத்திக்கொள்ளத் தவறியிருக்கிறார்கள் என்பதனை எல்லாக் கட்சி அங்கத்தினர்களும் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள்.

இந்த நேரத்தில் நான் மறுபடியும்—அது என்னுடைய வழக்கமான பல்லவி என்று கருதினாலும்கூட வடக்கு தெற்கு என்கிற பாகுபாடு செய்யப்பட்டிருப்பதை எடுத்துக்காட்டுவதற்கு உங்களுடைய அனுமதியைக் கோருகிறேன். அது துவேஷ மனப்பான்மையில் விளைந்த சொற்களாகவும் ஆகாது. ஒரு பேலாவில் இருக்கிற சந்தனத்தை முதலில் ஒருவன் அள்ளி எடுத்து அப்பிக்கொண்டு விட்டான் என்றால் பாக்கியுள்ள சந்தனத்தை வைத்துக்கொண்டு தான் மற்றவர்களையெல்லாம் உபசாரம் செய்யமுடியும். அப்படி இந்திய துணைக்கண்டத்தின் பெரும்பகுதி வருமானத்தை வடக்கேயுள்ள பெரிய பல அணைக்கட்டுக்களுக்காக செலவழிப்பதால் தமிழகத்தில், தென்னாட்டில் சிறிய சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக ஒதுக்கப்பட்ட தொகை மிகமிகக் குறைவாயுள்ளது. பஞ்ச நிலைமைக்குச் சமானமாக இருந்திருக்கிறது.

ஆனால் அமைச்சர் அவர்கள் பேசும்போதெல்லாம் இந்த ராஜ்யத்தில் மழைத்தண்ணீர் கொஞ்சம்கூட வீணாக்கப்படவில்லை என்பதை எடுத்துச் சொன்னாலும், கனம் அங்கத்தினர்கள்—எல்லாக் கட்சிகளையும் சார்ந்தவர்கள்—தங்கள் தங்கள் மாவட்டத்திலும், தொகுதிகளிலும் வீணாகப் போகிற மழைத்தண்ணீரை உபயோகித்துக்கொள்ள கட்டப்படவேண்டிய சிறு சிறு நீர் தேக்கங்கள் பற்றியும், அணைக்கட்டுகளைப்பற்றியும், சாகுபடிக்குக் கொண்டு வரப்படாத தரிசு நிலங்கள் பற்றியும், தரப்படும் உரம் உரிய காலத்தில் கொடுக்கப்படாததன் காரணமாக உணவு உற்பத்திக்குப் பயன்படாமல் போவது பற்றியும், மிக உச்ச நிலையில் இருக்கக்கூடிய நில விகிதாசாரத்தைப் சரியான முறையில் பகிர்ந்து கொடுக்காதது பற்றியும், அளிக்கப்பட வேண்டிய உரிமைகள் அளிக்கப்படாததுபற்றியும் வலியுறுத்திப் பேசியிருக்கிறார்கள். இவைகளையெல்லாம் செய்வதற்கு தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் இன்று ஆட்சியாளருக்கு நல்லதொரு அரசியல் சூழ்நிலை அமைந்திருக்கிறது. அவர்கள் கட்சிக்குள் எந்த விதமான குழப்பமும் இல்லை. வெளியிலுள்ளவர்களும் அவர்களுக்கு அதிக சாதகமான வேலைகளைச் செய்துகொண்டுதான் வருகிறார்கள். இவ்வளவு அமைதியான சூழ்நிலையில் ஆளும் கட்சியினருக்குத் தரப்பட்டிருந்தும் கூட இந்த நாட்டின் விவசாயத்தைக்கூட சரியான முறையில் விருத்தி செய்ய முடியவில்லையே என்று—நாங்கள் சுட்டிக்காட்டா விட்டாலும்—அவர்களுக்கே அடிக்கடி ஐயப்பாடு வருகிறது என்பதில் சந்தேகமில்லை.

முதலில் உணவுப் பிரச்னே என்று எடுத்துக்கொள்கிற நேரத்தில் அதை மூன்று வகையாக அவர்கள் மனதில் பாகுபாடு செய்துகொள்ளவேண்டும். ஒன்று—ப்ரொடெக்ஷன்—உற்பத்தி. மற்றென்று—டிஸ்ட்ரிபூஷன்—எந்த எந்தப்பகுதிக்கு எவ்வளவு அனுப்பி வைக்கப்படுகிறது என்கின்ற வினியோகம். மூன்றுவது—கன்ஸம்ஷன்—எப்படி உபயோகப்படுத்திக் கொள்கிறோம் என்பதைப் பொறுத்து இருக்கிறது. இந்த மூன்று விஷயங்களும் ஒன்றுடன் ஒன்று நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிற காரணத்தால் தான்—சபாநாயகர் அவர்களே, நாங்கள் பேசும்போது சிலபல நேரங்களில் வழி தவறி பேச நேரிட்டு விடுகிறது. நீங்கள் சட்டமன்ற ஒழுங்கு முறையை நிலைநாட்ட எங்களைத் தடுத்து நிறுத்துகின்றீர்கள். அதற்காக எங்களுடைய நன்றியை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆனால் உணவுப் பிரச்னையை நாம் வெறும் உற்பத்திப் பிரச்னையாக மட்டும் கருதாமல் விநியோகப்படுத்துகின்ற பிரச்னையாக மட்டும் கருதாமல், வாங்கி உபயோகித்துக்கொள்ளுகிற மக்களுடைய வாங்கும் சக்திப் பிரச்னையாகவும் கவனித்தால்தான் நம்முடைய நிலைமை நமக்கு நன்றாகப் புரியும். இந்த மூன்று விஷயங்களிலுமே அமைச்சர் அவை இன்றைய தினம் சரியான முறையில் காரியங்கள் ஆற்றவில்லை என்பதை எடுத்துக் கூற நான் உண்மையிலேயே வருத்தப்படுகிறேன். ஆனால் நிலைமை அப்படித்தான் இருக்கிறது. நம்முடைய அமைச்சர் அவர்கள் இதற்கு முன்னதாகத் தந்திருக்கிற புள்ளி விவரத்திற்கும் இப்போது தந்திருக்கிற புள்ளி விவரத்திற்கும் கூட சில முரண்பாடுகள் இருப்பதை நான் கூறும் படியாகத்தான் நேரிடுகிறது. **"Production of foodgrains for Madras during the year 1956–57"** என இருக்கிற சர்க்கார் தந்திருக்கிற புள்ளி விவரக் கணக்கில் அவர்கள் தந்திருப்பது 42, 94 என்று இருக்கிறது. ஆனால் இப்போது தந்திருக்கிற அறிக்கையில் அது 29 என்பதற்கு 60 என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த முரண்பாட்டுக்குக் காரணம் அச்சுப் பிழையோ அல்லது வேறு என்ன காரணமோ தெரியவில்லை. இப்படிப்பட்ட புள்ளிவிவரங்கள் மூலமாக நாம் திருப்தி அடைவதைவிட—நான் சார்ந்திருக்கிற கட்சியின் சார்பாகச் சொல்வேன்—நாள் ஒன்றுக்கு மூன்று வேளை சோறு மக்கள் எல்லோருக்கும் கிடைக்கும்படிச் செய்யவேண்டும்: ரூபாய்க்கு மூன்று படி அரிசி விற்கப்படவேண்டும். விவசாயிகளுக்குத் தேவையான உபகரணங்கள் அவர் கட்டுக்கு அடங்கக் கூடிய விலையில் தரப்படவேண்டும். எந்த இடத்தில் நிலம் இருக்கிறதோ அந்த இடத்திற்கு உரம் தரப்படவேண்டும். இப்பொழுது உரம் லாப வேட்டைக்காரர்களின் உள்ளக் குளிர்ச்சிக்காகத் தரப்படுகிறதே தவிர நிலத்திற்குத் தரப்படவில்லை. பல அங்கத்தினர்கள் இன்றையதினம் உரம் கள்ள மார்க்கெட்டில்தான் விற்கப்படுகிறதென்பதைச் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு மாற்று யோசனை என்ன என்று சர்க்கார் எங்களைத் திருப்பிக் கேட்கலாம். கார்டு கவர் விற்கப்படுவதைப்போன்று, கொய்னா மருந்து விற்கப்படுவது போன்று தபால் இலாகா மூலம் அமோனியம் சல்பேட் போன்ற உரங்கள் எந்த எந்த விவசாயி கேட்கிறானே அவனுக்குத் தான் நேரிடையாகக் கொடுப்பது என்று வைத்துக்கொள்ளலாம். இந்த யோசனை சிறு பிள்ளைத்தனமானது என்று தோன்றினால்—அவர்களுக்குத் இருக்கக்கூடிய நிறைந்த அனுபவத்தைக் கொண்டு வேறு ஏதாவது நல்ல முறைகளை அவர்கள் கையாளலாம். ஆனால் இன்று இருக்கிற முறை விவசாயிகளுக்குத் தேவையான உதவியை அவ்வப்போது அளிக்கக் கூடியதாய் இல்லை. அவர்களது நல்வாழ்வுக்குப் பயன் அளிப்பதாய், நாட்டின் உணவு உற்பத்திக்கு அடிகோலியிருப்பதாகத் தெரியவில்லை.

விவசாயத்திற்கு அதிகமாகப் பயன்படுகிற இயந்திரங்களுக்கு உபயோகிக்கும் டீசல் எண்ணெய்க்கு வரிபோடுகிற நேரத்தில் இந்த வரிப் பிரேரணை விவசாயத்தை மிகவும் பாதிக்கக்கூடியது என்கிற விஷயத்தைப்பற்றி பல கட்சிகளைச் சார்ந்தவர்களும் குறிப்பிட்டார்கள். குறிப்பாக காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களே கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு இந்தப் பிரேரணையை ஆதரித்தார்களேதவிர பேசும்போதெல்லாம் இந்த வரி குறைக்கப்பட வேண்டும், நீக்கப்படவேண்டும், போக்கப்படவேண்டும் என்று பலமாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். நாங்கள் கூறியது எல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் காதில் ஏறுமல் போனது போலவேதான் காங்கிரஸ்

10th September 1958] [Sri C. N. Annadurai]

கட்சிக்காரர் சொன்னது எல்லாம்கூட கனம் அமைச்சர் அவர்களுடைய ஒரு காதின் வழியாக ஏறி மறு காதின் வழியாக வெளியே போய்விட்டது. பூசல் எண்ணெக்குப் போடப்படும் வரி விவசாய உற்பத்திச் செலவை அதிகமாக்கும் என்று விவசாயிகள் பயந்தது இன்றைகைகுச் சரியாகப் போய் விட்டது. அதனால் உணவுப் பொருள்களின் விலையும் அதிகமாக அந்த அளவுக்கு உயர்ந்தது விட்டதே என்று மக்கள் வருத்தப்பட்டுக்கொண்டிருக் கிறார்கள். அவைகள் எல்லாவற்றையும் விட விவசாயிகளுக்கு இருக்கிற உரிமைகள் எந்த அளவுக்குப் பாதுகாக்கப்படும் என்பதனைப் பற்றிய நிரந் தரத் தன்மை அவர்கள் உள்ளத்தில் ஏற்படவில்லை. அப்படி ஏற்படா திருக்கக் காரணம் நம் நாட்டை ஆளுகின்ற பொறுப்பை ஏற்றுக்கொண் டிருக்கிற அமைச்சர் அவை—அமைச்சர் அவை அமைத்திருக்கிற காங்கிரஸ் கட்சிக்காரர்கள்—ஓரிடத்தில் " உழுபவனுக்கே நிலம் சொந்தமாக்கப்படும் " என்கிற உறுதியைத் தரும்படியாகப் பேசுவதும், " நிலத்தின் உற்பத்தி யைப் பெருக்குவதுதான் எங்களுடைய திட்டம் " என்பதாக மற்றோரிடத் தில் பேசுவதும், " உற்பத்தி பெருகினால்தான் விலைவாசி குறையும் " என்று வேறு இடத்தில் பேசுவதும் இப்படி முரண்பட்ட முறையில் அங்கங்கே பேசிக்கொண்டு போவதுதான் என்று பொதுமக்கள் ஐயப் படுகிறார்கள். உழுபவனுக்கே நிலம் என்று இவர்கள் சொல்கிறார்களே என்பதாகவும், " நிலத்தின் உச்ச வரம்பைக் கட்டுப்படுத்தப் போகிறோம் " என்று பேசிவருகிறார்களே என்றும் திட்டவட்டமாக அவர்கள் எதுவும் பேசாத கொள்கையை வகுக்காத காரணத்தினால் அதன் விளைவு எப்படி இருக்குமோ என்கிற ஐயப்பாட்டினால் நிலம் வைத்துக்கொண்டிருப்பவர்கள் அவைகளைத் தரிசாகப்போட ஆரம்பித்துவிட்டார்கள். விவசாய உற்பத்தியில் ஊக்கம் காட்டுவதற்குப் பதிலாக ஊக்கம் குன்றிப் போய் இருக்கிறார்கள் என்பதை அமைச்சர் அவை உணராமல் இருக்கமுடியாது.

எங்கே தங்களுடைய நிலம் பிறன் கைவசப்பட்டுவிடுமோ என்கிற கார ணத்தினால் எனக்குத் தெரிந்த பலயிடங்களில் நிறைய நிலம் வைத்துக் கொண்டிருப்பவர்கள் அந்நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவராமல் சவுக்குப் பயிரிட்டிருக்கிறார்கள். அதுவும் குறிப்பாக உணவு மந்திரி அவர் களுக்கும் தெரிந்திருக்கும்—அவரும் நானும் எங்களுடைய தொகுதி என்று உரிமையோடு சொல்லிக் கொள்கிற செங்கல்பட்டு மாவட்டத்தில் தங்கள் நிலம் எந்த நேரத்தில் தங்கள் கரத்தைவிட்டுப்போய்விடுமோ என்கிற எண்ணத்தினாலோ, அல்லது 60, 40 என்பது அவர்கள் மன திற்கு ஏற்காத காரணத்தினாலோ சவுக்கு மரங்களை வைக்கிறார்கள். சவுக்கு வைத்தாலும்கூட சிலபல தொல்லைகள் உண்டாகிவிடுமோ என்று முள்செடியை வளர்த்து வெட்டி விறகாக மாற்றலாம் என்கிற எண்ணத்தில் செயல்பட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

உழுபவர்களுக்கும், நிலச் சொந்தக்காரர்களுக்கும் சம அந்தஸ்து உண்டாகவேண்டும். சம நிலை உண்டாகவேண்டுமென்று சர்க்கார் முயற்சி எடுத்துக் கொள்கிறார்கள். அதை வரவேற்கிறேன், பாராட்டுகிறேன். ஆனால் சர்க்கார் எடுத்துக்கொள்கிற அந்த முயற்சியில் இருந்து தப்பித்துக் கொள்வதற்குப் பணம் படைத்தவர்கள், சட்டத்தின் சந்துபொந்துகளைக் கண்டறியக்கூடியவர்கள் தீவிர முயற்சி மற்றொரு பக்கத்தில் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எந்தக் காலத்திலும் தங்கள் உரிமைகளை விட்டுவிட மனம் இல்லாத சுயநலக்காரர்களோடு சர்க்கார் எதிர்த்துப் போராட வேண்டிய நிலைகளில் எல்லாம்—வெட்கத்தோடு மிகவும் வேதனையுடன்தான் ஒப்புக்கொள்ளவேண்டும்—சர்க்கார் தோற்கடிக்கப்பட்டு வருகிறதே தவிர சுயநலவாதிகள் வெற்றி பெற்றுக்கொண்டுதான் இருக்கிறார்கள். அந்தப் பணக்காரச் சுயநலவாதிகளின் செய்கைகளை முறியடிக்கவேண்டுமென்றால் இந்தச் சர்க்காருக்கு நெஞ்சு உரம் வேண்டும். அந்த நெஞ்சு உரத்தை அவர்கள் பெறுவதற்குத்தான் இரண்டு நாட்களுக்கு முன்பாக இந்தியத் துணைக் கண்டத்தின் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள்கூட " உணவுப் பிரச்னையைப் பொறுத்த வரையில் " எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த நிர்வாகக் கமிட்டி ஒன்றை—ஸ்டேட் லெவலில்—ஏற்படுத்தி இது சம்பந்தமான எல்லாப் பிரச்னைகளையும் நன்றாக அலசி ஆராய்ந்து பார்த்து அவர்கள் சொல்கிற வழிப்படிச் செல்லவேண்டுமென்று தங்கள் கட்சியைச் சார்ந்தவர்களுக்கு பொதுவாக நாட்டுக்கு நல்லதொரு யோசனையை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

[Sri C. N. Annadurai] [10th September 1958

ஆனால் இதுவரையில் நம் மாநிலத்தில் நடைபெற்றுக் கொண்டிருப்பது—ஆளும் கட்சி ஒரு காரணத்தைச் சொல்வதும், எதிர்க்கட்சியிலுள்ள நாங்கள் அதை மறுப்பதும், ஆளும் கட்சியிலுள்ளவர்கள் நாங்கள் எப்படிப்பட்டவர்கள் என்கிற அங்க ஆராய்ச்சிகளைச் செய்வதும், அதற்குத் திரும்பி நாங்கள் பதில் சொல்வதும் ஆக இப்படிப்பட்ட விளையாட்டில் நாடு சென்று கொண்டிருக்கிறது.

கட்சிக்கு அப்பாற்பட்டதும்—எல்லாக் கட்சிகளுக்கும் உயிர்ப் பிரச்சனையாக இருப்பதும் ஆகிய இந்தப் பிரச்சனையில் நாம் எல்லோரும் கட்சிப் பாகுபாடுகளை மறந்து ஒருமுகமாக இதை நல்லவகையில் தீர்ப்பதற்கு முயற்சி செய்யவேண்டுமென்று பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டிருப்பதை வரவேற்கிறேன். அதற்கேற்ற வகையில் காரியங்கள் செய்யப்படவேண்டும் என்று வற்புறுத்துகிற நேரத்தில் " வடநாடு தென்னாடு என்கிறார்களே. வடநாட்டில் பெரிய ஆறுகள் இருக்கின்றன. அணைகள் கட்டுகிறார்கள். தென்னாட்டில் அணை கட்டக்கூடிய பெரிய ஆறுகள் என்ன இருக்கின்றன ? ஏதாவது கட்டவேண்டுமென்றால் அண்ணாத்துரை வாய்க்குத்தான் அணை கட்டலாமே தவிர வேறு எதற்குக் கட்டுவது ? " என்று அங்கலாய்க்கிறார்கள்.

என்னைப் பொறுத்த வரையில்—இந்தியத் துணைக் கண்டத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறவர்கள் முதலிலே தண்ணீர் இல்லாத பகுதியில் அதிக கவனம் செலுத்தியிருக்கவேண்டும். தண்ணீர் இருக்கிற பகுதியைக் கவனிக்காது இருந்தாலும் அத்தனை தீமை நாட்டில் ஏற்பட்டிருக்காது என்று சொல்வேன். கங்கையும், சிந்தும், யமுனையும் பாய்கிற இடத்தில் பெரிய அணைகளைக் கட்டுவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளாமல் அங்கு இருக்கிற தண்ணீரை வைத்து ஐந்து வருஷங்கள் சமாளித்துக் கொள்ளலாம் என்று அங்கே பணத்தைக் கொட்டாமல், தெற்கே—வறண்டு இருக்கிற நம் பகுதிக்கு—பெரிய பெரிய ஆறுகள் இல்லாத பகுதிகளில் ஓடும் சிற்றாறுகளையும், ஓடைகளையும், காட்டாறுகளையும், கால்வாய்களையும் கட்டுப்படுத்தித் தேக்கிவைக்கும் சிறுசிறு பாசனத்திட்டங்களை நிறைவேற்றுவதற்குச் சிலபல கோடிகளை ஒதுக்கியிருந்தால் நம்முடைய நிலைமை மிகவும் நல்லபடியாக வளர்ந்திருக்கும். ஆனால் அதைச் சொன்னால் நமது அமைச்சரவையில் உள்ளவர்களுக்குச் சீற்றம் உண்டாகலாம். அதிலும் நானும் கனம் உணவு அமைச்சர் அவர்களும் சேர்ந்து எங்கள் மாவட்டம் என்று சொல்லிக்கொள்கிற செங்கல்பட்டு மாவட்டத்தை எடுத்துக் கொண்டால், தென்னாற்காடு மாவட்டத்தை எடுத்துக்கொண்டால், வடாற்காடு மாவட்டத்தை எடுத்துக்கொண்டால் சிலபல பகுதிகளில் வறட்சியான இடங்கள் இருக்கின்றன. அங்கே ஏன் வறட்சி ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்கக் கூடாதா ? அங்கே வறட்சி ஏற்படாமல் இருந்திருக்கவேண்டுமானால் பாலாறு திட்டம் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு, வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டிருந்தால் செங்கல்பட்டு மாவட்டத்திலும் அதைச் சுற்றியுள்ள மாவட்டங்களிலும் வறட்சி
12–20 p.m. யான நிலைமை ஏற்படுவதற்கு வழி இல்லாமல் இருந்திருக்கும். செங்கல்பட்டு ஜில்லாவையும் வட ஆற்காடு ஜில்லாவையும் பொறுத்தவரையில் பாலாற்றுத் திட்டம் பாழாகிக்கொண்டிருக்கிறது. வேகவதித் திட்டம் கவனிப்பாரற்றுக் கிடக்கிறது. செய்யாற்றுத் திட்டத்தைச் சீந்துவார் இல்லை. இவைகளெல்லாம் சாதாரணத் திட்டங்கள். என்னைப் போன்றவர்களும் கனம் அமைச்சரைப் போன்றவர்களும் சென்னையில் குடியேறியிருக்கிறோம்; ஆகவே, நாங்கள் அந்தத் திட்டங்களை நம்பியிருக்கவில்லை. சென்னை நகர கார்ப்பொரேஷன் குழாயில் தண்ணீர் வந்தால் எங்களுக்குப் போதும். ஆனால் பாலாற்றில் இருக்கும் உழவர் பெருங்குடி மக்கள் பாலாற்றில் தண்ணீரை எதிர்பார்த்தே இருக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் பாலாற்றில் வரக்கூடிய தண்ணீரை நம்பியே இருக்க வேண்டியிருக்கிறது. பாலாற்றில் தண்ணீர் வந்தால்தான் அவர்களுடைய நிலங்களுக்கு பாசன வசதி கிடைக்கும். ஆகவே, அத்தகைய பகுதிகளில் பாசன வசதி செய்துகொடுப்பதில் அரசாங்கத்தார் அக்கறை கொள்ளவேண்டும். அதற்கான திட்டங்களில் அரசாங்கத்தார் அக்கறை கொள்ளவேண்டும். ஆற்றில் தண்ணீர் ஓடா விட்டாலும், அங்கெல்லாம் விஞ்ஞான முறைப்படி பூமியிலுள்ள

10th September 1958] [Sri C. N. Annadurai]

தண்ணீரை வெளியில் கொண்டுவந்து பாசன வசதி செய்துகொடுப்பதற்கான யோசனைகளை பாசன இலாகாவினர் தெரிவித்திருக்கிறார்கள். "லிப்ட் இர்ரிகேஷன்" முறையில் அங்கெல்லாம் பாசன வசதி செய்துகொடுக்கலாம். செங்கல்பட்டு, வட ஆற்காடு ஜில்லாக்களில் பாசன வசதிக்கு, "லிப்ட் இர்ரிகேஷனைத்" தவிர வேறு வழி இல்லை. ஆகையால் மாநிலத்தில் அந்த முறையில் பாசன வசதிகளைச் செய்துகொடுப்பதில் பணத்தைச் செலவழிப்பதற்கு அமைச்சரவையினர் சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கவேண்டும். இப்படிப்பட்ட காரியங்களைச் செய்வதற்கான உரிமை மாநில அரசாங்கத்திற்கு இருக்கிறதா அல்லது மத்திய அரசாங்கத்திற்கு இருக்கிறதா என்ற பிரச்னை சென்ற கிழமைதான் பாராளுமன்றத்தில் பலத்த விவாதத்திற்கு உட்பட்டது.

நாங்கள்தான் "வடக்கு தெற்கு" என்று பேசுகிறோம் என்று சிலர் கருதுகிறார்கள். ஆனால், இந்த "வடக்கு-தெற்கி" லிருந்து வேறு பலராலும் தப்பித்துக்கொள்ள முடியவில்லை என்பது கனம் உள்விவகார அமைச்சரின் அறிக்கையிலிருந்து தெரிகிறது. குறிப்பாக கனம் அமைச்சராலேயே தப்பித்துக்கொள்ள முடியவில்லை என்பது அவருடைய அறிக்கையிலிருந்தே தெரிகிறது. இதை நான் சொல்லவில்லை. அவருடைய அறிக்கையே தெரியப்படுத்துகிறது. "நாம் உணவு தானியங்களை அதிகமாகத்தான் உற்பத்தி செய்திருக்கிறோம். அப்படி இருந்தும், இங்கே உணவு தானியங்களின் விலைகள் ஏறியதற்குக் காரணம், வடக்கேயுள்ள ராஜ்யங்களில் விலைகள் ஏறியிருப்பதுதான்" என்று கனம் அமைச்சர் குறிப்பிட்டிருக்கிறார். இவ்வாறு கூறியதன் மூலம், கனம் அமைச்சர் "உடலில் இருக்கும் நோயாக இருந்தாலும் அழுக்காக இருந்தாலும், வேர்க்குருவாக இருந்தாலும், சிரங்காக இருந்தாலும் அதன் பலாபலன் களிலிருந்து யாரும் தப்பித்துக்கொள்ள முடியாது" என்பதை மிகத் தெளிவாக எடுத்துக்காட்டியிருக்கிறார். "நாம் உற்பத்தி செய்திருக்கும் உணவுப் பொருள்களின் அளவு விலையை இறங்கச் செய்யக்கூடியதாகத் தான் இருக்கிறது" என்பதை எடுத்துக்காட்டிய கனம் அமைச்சர் ". . . வடக்கு ராஜ்யங்களில் விலை ஏறியதால் இங்கேயும் விலை ஏறியது" என்று குறிப்பிட்டிருக்கிறார். "அண்டை நாடுகளில்" என்றோ, "இந்தியாவின் மற்றப் பகுதிகளில்" என்றோ சொல்லாமல், "வடக்கு ராஜ்யங்களில்" என்று அவர் சொல்லியிருக்கிறார். கனம் அமைச்சர் அடுத்த தடவை இந்தப் பதத்தை ஜாக்கிரதையாக விட்டுவிடுவார் என்று நினைக்கிறேன். (சிரிப்பு). வடக்கேயுள்ள நிலைமை தெற்கேயுள்ள நிலைமையை பாதிக்கிறது என்பதை கனம் அமைச்சர் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார். அரசியல் தெளிவு ஏற்பட்டதால் கனம் அமைச்சர் இவ்வாறு கூறியிருக்கிறார் என்று அர்த்தமில்லை. நல்ல வார்த்தைகளை கவனிக்காமல் இருக்க வேண்டுமென்று நாம் விரும்பினாலும், சில சமயங்களில் அவைகளை நாம் கவனித்துவிடுவதுண்டு. அந்த விதத்தில்தான் கனம் அமைச்சர் அவ்வாறு கூறியிருக்கிறார்.

இந்தியத் துணைக் கண்டத்தில் இப்போது பெரிய பிரச்னையாக இருப்பது உணவுப் பிரச்னை. "உணவு சம்பந்தப்பட்ட பொறுப்பு எங்களுடையது இல்லை. அது மாநில சர்க்கார்களைச் சேர்ந்தது" என்று இப்போது மத்திய அரசாங்கத்தார் கூறுகிறார்கள். உத்திரப் பிரதேசம் போன்ற மாநிலங்களின் அரசாங்கத்தார்களோ "அந்தப் பொறுப்பிலிருந்து மத்திய அரசாங்கத்தார் தப்பித்துக்கொள்ளக்கூடாது, தப்பித்துக்கொள்ள முடியாது" என்று கூறுகிறார்கள். இந்திய பிரதமர் ஸ்ரீ. ஜவஹர்லால் நேரு அவர்களோ, இந்த விஷயத்தில் மத்திய சர்க்காருக்கு "**though there is no constitutional right, there is a moral obligation**" என்று கூறியிருக்கிறார்கள். "எங்களுக்கு, சட்டப்படி பொறுப்பு இல்லை, ஆனால் ஆத்மார்த்த முறைப்படி எங்களுக்குப் பொறுப்பு இருக்கிறது" என்று அவர் கூறியிருக்கிறார். அப்படிப்பட்ட ஆத்மார்த்தப் பொறுப்புகளை நிறைவேற்றத்தக்க சந்தர்ப்பங்கள் வந்த காலத்திலெல்லாம் மத்திய சர்க்கார் மாநில சர்க்கார்களை ஏமாற்றியும் வஞ்சித்தும் இருக்கிறார்கள் என்பதை எடுத்துக்கூறும்போது நாங்கள் வேதனைப்படுகிறோம். நாங்கள் இவ்வாறு கூறுவதை ஏற்றுக்கொள்வதில் ஆளும் கட்சியினருக்கு சங்கடங்கள் இருக்கலாம்.

[C. N. Annadurai] [10th September 1958

சென்னை மாநிலத்தை ஒரு தனி உணவு மண்டலமாக அமைக்க வேண்டுமென இந்த அரசாங்கத்தார் பல காலமாகவே மத்திய அரசாங் கத்தாரிடம் கூறி வந்திருந்தும், மத்திய அரசாங்கத்தார் அந்த யோசனையை ஏற்றுக்கொள்ளவில்லை என்றும் கனம் அமைச்சர் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார். இனிமேல், மத்திய சர்க்காரிடம் மாநில சர்க்கார் இதுவிஷயமாகத் தெளிவாகச் சொல்லிவிட வேண்டும். உணவு விஷயத்தில் தங்களுக்குப் பொறுப்பு இல்லை என்று மத்திய சர்க்கார் கூறிவிட்ட பிறகு, "எங்களுக்குத் தேவையான உணவு தானியங்களை நாங்களே தேடிக்கொள்கிறோம். ஆனால், அப்படித் தேடிக்கொள்ளும் போது, நீங்கள் குறுக்கிடவோ எங்களுக்கு உணவு தானியங்கள் கிடைப்பதற்குக் குந்தகம் விளைவிக்கவோ கூடாது" என்று மத்திய அரசாங்கத் தாரிடம் சொல்லத்தக்க நெஞ்சுரம் இந்த அமைச்சரவையினருக்கு ஏற்பட வேண்டும்.

அப்படி நெஞ்சுரம் ஏற்பட்டு, நாங்கள் அடிக்கடி வடக்கு தெற்கு என்று பேசுவதால் எங்கள் பேரில் ஏற்படுகிற கோபம் அவர்கள் மனதில் ஆத்திரமாக ஆழப்பதிந்து அதை சமயம் கிடைக்கிறபோதெல்லாம் எங்கள் பேரில் பாய்ச்சி, நாங்கள் காணாத நேரத்தில், அவர்கள் டெல்லிக்குப் போகிற நேரத்தில் காட்டவேண்டிய இடத்தில் காட்டவேண்டிய முறைப்படி, காட்டவேண்டிய நெஞ்சுரத்துடன் காட்டி இம்மாநிலத்திற்கு தொடர்ந்து நல்ல உரிமைகளைப் பெற்றுத் தரவேண்டுமென்று நான் குறிப்பிட்டுக்கொள்வேன். வரட்சியான பிரதேசங்களில் ஏன் செயற்கை முறையில் மழை பெய்விக்க விஞ்ஞான முறையை பயன் படுத்தியிருக்கக் கூடாது? வரண்டு போயிருக்கிற ஆறுகளின் அடியூற்றுத் தண்ணீரை பயன்படுத்திக் கொள்ளக் கூடாதா? ஐக்கிய மாகாணத்தில் "ட்யூப் வெல்ஸ்" தோண்டித் தோண்டி பலன் ஒன்றும் ஏற்படவில்லை என்று சொல்லி உத்தரப் பிரதேச சர்க்கார் லட்சக்கணக்கான ரூபாய், கோடிக்கணக்கான ரூபாய்களை பாழ் படுத்தி விட்டு இனியும் கொடுங்கள் இனியும் கொடுங்கள் என்று மத்திய சர்க்காரை அவர்கள் கேட்கும்போது, நல்ல திட்டங்களை வைத்துக்கொண்டிருக்கிற நீங்கள், காரியங்களை நன்கு செய்துகொண்டிருக்கும் நீங்கள், அதுபற்றி வேண்டிய புள்ளிவரங்கள் வைத்துக்கொண்டிருக்கும் நீங்கள் மத்திய சர்க்காரிடம் வேண்டிய பண உதவி கேட்க ஏன் கூச்சப் படவேண்டும்; ஏன் தயக்கப்படவேண்டும், ஏன் வெட்கப்படவேண்டுமென்று நான் கேட்கிறேன். இந்த மாநிலத்தின் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கும் அதை சரியான முறையில் பங்கிடு செய்வதற்கும், அதை வாங்கும் நேரத்தில், கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் அவர்கள் மிகத் தெளிவாக சுட்டிக்காட்டியபடி அதை, பதுக்கல்காரர்களின் லாப வேட்டைக் காடாக்காமல் உணவுப் பண்டங்களை வாங்கும் மக்களுக்கு அவை நியாயமான முறையில் செல்வதற்கு ஏற்ற வழிவகைகள் செய்யவேண்டுமென்று அமைச்சரவையை நான் பணிவன்புடன் வேண்டிக் கொண்டு பற்றாக் குறையாக இருந்த இம்மாநிலத்தை ஓரளவு அதிலிருந்து நீக்கி நிலையை உயர்த்தி வைத்திருக்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் அறிக்கைக் கொடுக்கக் காரணம், இன்றையதினம் இம்மாநிலத்திலுள்ள உணவு நிலையைப் பார்த்து அவர்களே வருத்தப்படுவதுதான். அவர்களின் வருத்தத்தில் நானும் பங்கு கொள்கிறேன். அவர்கள், உணவுநிலையை சரிபடுத்த முடியவில்லையே என்று வெட்கப்படுகிறார்கள். அப்படி வெட்கப்படுவதிலும் "நான் பங்குகொள்கிறேன்." உணவு நிலை இன்னும் சரியாகவில்லையே என்று வேதனைப்படுகிறார்கள், அதிலும் நான் பங்குகொள்கிறேன் என்றும் கூறிக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

*Sri M. R. KANDASWAMI MUDALIYAR : (Sir, on a point of information.) தலைவர் அவர்களே, கனம் அண்ணாதுரை அவர்கள் சொல்லும்போது, பிரிட்டிஷ் அரசாங்கம் யுத்த காலத்தில்கூட உணவு நிலைமையை நல்லமுறையில் சமாளித்து வந்தது என்று சொன்னார்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் இருந்த காலத்தில் வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சத்தின் காரணமாக லட்சக்கணக்கான மக்கள் மடிந்தும், மக்களை உயிரோடே நாயும் நரிகளும் பிடுங்கித் தின்று செத்து மடிந்தனர் என்பதும் அவர்களுக்குத் தெரியுமா ?

10th September 1958]

**MR. SPEAKER :** பாயிண்ட் ஆப் இன்பர்மேஷனில், நீங்கள் இன்பர்மேஷன் கேட்க வேண்டியது. இப்போது நீங்களே இன்பர்மேஷன் கொடுக்கிறீர்களே !

*** SRI V. K. RAMASWAMY MUDALIYAR :** சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் வெள்ளை அறிக்கையின் பேரில் அநேக அங்கத்தினர்கள் அவர்களது அபிப்பிராயங்களையும், கருத்துக்களையும் தெரிவித்தார்கள். என்னைப் பொறுத்த மட்டில் நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது, உலக சரித்திரத்திலே எல்லா நாடுகளையும் சேர்த்து கணக்கிட்டுப் பார்த்தால் நாள் ஒன்றுக்கு குறைந்தது ஒரு லட்சத்தி இருபதினாயிரம் குழந்தைகள் பிறக்கின்றன. பிறக்கின்ற குழந்தைகள் எல்லோருக்கும் உணவு கொடுத்தாக வேண்டும். அவர்கள் சாப்பிட்டாக வேண்டும். இப்பிரச்சனை ஒரு முக்கியமான பிரச்னையாகும். அதிலும் முக்கியமாக நம் பாரத நாட்டிலே, அதிலும் நம் சென்னை மாகாணத்தைப் பொறுத்தமட்டில் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு ஆளும் கட்சியினர் என்ன செய்திருக்கிறார்கள், அமைச்சர்கள் என்ன செய்திருக்கிறார்கள் என்பதைப்பற்றி நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். நம் தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டில் லட்சக்கணக்கான ஏக்கர் நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வராமல் கரம்பாகவே யிருக்கிறது. சாகுபடி செய்து வரும் நிலங்களில், $12\frac{1}{2}$ சத விகிதம் நிலங்கள்தான் ஜல வசதியுள்ள நிலங்களாக இருந்து சாகுபடி செய்யப்பட்டு வருகிறது. மீதி $87\frac{1}{2}$ சத விகிதம் வானம் பார்த்த பூமி என்று எங்கள் பிராந்தியத்தில் சொல்வார்கள், அதே மாதிரி வானம் பார்த்த பூமிகளாகயிருந்து, கடவுளை மழைக்காக வேண்டிக் கொண்டும், எப்பொழுது மழை பெய்யும் என்று பார்த்துக்கொண்டும் இருக்கிறார்கள் சாகுபடி செய்கிறவர்கள். இது தவிர லட்சக்கணக்கான ஏக்கர்களை இன்னும் சாகுபடிக்கு கொண்டு வரவில்லை. இதற்கு முக்கிய காரணம் என்னவென்றால் நீர்பாசன வசதி போதுமான அளவுக்கு இல்லாததுதான். இந்தியாவிலும் சரி, தென் பிராந்தியத்திலும் சரி, எல்லா இடங்களிலும் அனேக நீர்பாசனத் திட்டங்களை எல்லாம் போட்டு சர்க்கார் நடத்திக் கொண்டு வந்திருக்கிறார்கள். அப்படியிருந்தும் போதுமான அளவுக்கு நாட்டில் உணவு உற்பத்தி பெருகவில்லை. அதைப் பார்த்தால் வருத்தப்பட வேண்டியதாக இருக்கிறது. முக்கியமாக நீர்ப் பாசன திட்டங்களைப்பற்றி பார்க்கப்போனால் பல "மல்டி பர்பஸ் ப்ராஜக்ட்ஸ்" திட்டங்கள் இருக்கின்றன. அதன் கீழ் பல திட்டங்கள் இருந்தும் போதுமான அளவுக்கு விவசாயிகளுக்கு மின்சார வசதி கிடைக்கவில்லை. சிறு கைத்தொழில்களும் அதிகமாக வளரவில்லை. அதன் காரணமாக அந்த பிராந்தியத்திலே இன்னும் ஆயிரக்கணக்கான நிலங்கள் சாகுபடிக்கு கொண்டு வரவில்லை. சாகுபடிக்கு கொண்டு வரப்பட்டிருக்கும் லோயர் பவானி போன்ற இடங்களை எடுத்துக் கொண்டு பார்ப்போமானால் அங்கு தீர்வை கொடுப்பது ஒரு பெரிய பிரச்னையாகவே இருந்து கொண்டிருக்கிறது. அங்கு சில வசதிகள் செய்து கொடுத்திருந்த போதிலும் பெரும்பாலும் அங்குள்ள நிலங்கள் எல்லாம் கரம்பாகவே இருந்து கொண்டிருக்கிறது. பொருளாதார வசதி யில்லாமல் நீர்ப்பாசன வசதியிருந்தும் அவர்களுக்கு கிடைக்கக்கூடிய நிலங்களை யெல்லாம் சாகுபடிக்கு கொண்டு வராமல் இருக்கின்றார்கள், அங்குள்ள விவசாயிகள். சர்க்கார் அம்மாதிரிப்பட்டவர்களுக்கு பண உதவி கொடுத்து அவர்களுக்கு இருக்கின்ற நிலங்களை எல்லாம் சாகுபடிக்கு கொண்டு வந்தால் உணவு உற்பத்திக்கு ஏதுவாக இருக்கும் என்பதை நான் அதிகமாக எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. இதைப்பற்றி முக்கியமாக கனம் அமைச்சர் அவர்கள் வேண்டிய கவனம் எடுத்துக் கொண்டு இதற்கு வேண்டிய திட்டங்களை போடுவார்கள் என்று நம்புகிறேன். முக்கியமாக இப்போது நேஷனல் எக்ஸ்டன்ஷன் பிளாக்குகள், கம்யூனிட்டி ப்ராஜக்ட் இவைகள் எல்லாம் இருக்கின்றன. அந்த இடங்களில் எல்லாம் லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவழித்து உத்தியோகஸ்தர்களை போட்டு வேலைகள் நடத்தி வருகிறார்கள். அந்த பிராந்தியத்திலுள்ள விவசாயிகளின் தேவைகள் எல்லாம் கவனிக்கப்பட்டு வருகிறதா, அல்லது அவர்களுடைய குறைகள் எல்லாம் நீக்கப்பட்டு வருகிறதா என்பதைப் பார்த்தால் அவர்களுடைய குறைகள் எல்லாம் நீக்கப்பட்டு வருவதாகத் தெரியவில்லை. மேலும் சிறு நீர்ப்பாசன திட்டங்களை எடுத்துக் கொண்டு பார்த்தால், வாய்க்கால்கள், ஏரிகள் இவையெல்லாம் சரியாக

12-30 p.m.

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [10th September 1958

செப்பனிட்டு கொடுக்கப்படவேண்டும். இவைகளைப்பற்றி யெல்லாம் யோசிக்க வேண்டும். இவைகள் எல்லாம் அனேக பிராந்தியங்களில் நடக்கவில்லை. முக்கியமாக எங்களுடைய பிராந்தியத்தை எடுத்துக்கொண்டால், இன்னும் அனேக ஏரிகள் மைனர் இறிக்கேஷன் திட்டத்தின் கீழ் அவைகளை விருத்தி செய்வதற்கு எடுத்துக்கொண்டு வருஷக் கணக்காகியும் இன்னும் அவற்றில் பல க்ஷீண திசையில்தான் இருந்து கொண்டிருக்கின்றன. இவைகளுக்கு எல்லாம் காரணம் போதுமான இஞ்சினியரிங் ஸ்டாப் இல்லாததுதான் என்று சொல்லப்படுகிறது. ஆனல் இதற்கென்று உணவு உற்பத்தி இலாகா "புட் ப்ரொடக்ஷன் டிபார்ட்மெண்ட்" இறிகேஷன் இலாகா என்றெல்லாம் வைத்திருந்தும் இதில் வேண்டிய முன்னேற்றத்தை காண முடியவில்லை. இதில் என்னுடைய யோசனை என்னவென்றல் இரண்டு, இரண்டு தாலூகாக்களை சேர்த்து, அந்த தாலூகாக்களுக்கு தனித்தனியாக இஞ்சினியரிங் ஸ்டாப் போட்டு, அந்த ஏரியாவை ஒரு இஞ்சினியர் பொறுப்பில் விட்டு, அங்குள்ள மக்களுடைய ஒத்துழைப்பையும் பெற்று, அந்த இடத்தில் உணவு உற்பத்தி செய்வதற்கும், நீர்பாசன வசதி செய்வதற்கும் வேண்டிய வழிகளை செய்தால்தான் இந்த பிரச்னையை தீர்க்க முடியும் என்பதை நான் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. இவைகளில் அமைச்சர் அவர்கள் கண்ணும் கருத்துமாக இருந்து, இப்போது இருக்கும் டிபார்ட்மெண்ட் சரியாக வேலை செய்யவில்லை என்றிருந்தால் அதையும் கவனித்து மேலும் அதிகமாக ஸ்டாப்களை போட்டு இதில் உடனடியாக வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தப்படியாக நம்முடைய விவசாயிகள் கனம் அண்ணுதுரை அவர்கள் சொன்னதுபோல் ஊக்கத்துடன்தான் பயிரிட்டு வருகிருர்கள். அவர்களுக்கு எந்த விதமான வசதிகள் இல்லாமல் இருந்தபோதிலும்கூட, அவர்களுக்கு பல்வேறு இடையூறுகள் இருந்த போதிலும் கூட அதையெல்லாம் அவர்கள் பொருட்படுத்தாமல் உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் வேண்டிய அளவு முயற்சி செய்துதான் வருகின்ருர்கள். ஆனல் அவர்களுக்கு போதுமான வசதிகள் சர்க்காரால் கொடுக்கப்படவில்லை என்பதை நான் திட்டவட்டமாக சொல்லுகிறேன். அனேக தடவைகள் இதைப்பற்றி பேசி இருக்கிறேன். இப்போதும் அதைப்பற்றி நான் சொல்வது என்னவென்றல் அவர்களுக்கு வேண்டிய உரங்கள் எல்லாம் இன்று அதிகமான விலையாக இருக்கிறது. உதாரணமாக அமோனியம் சல்பேட், சூப்பர்பாஸ்பேட், பிண்ணுக்கு இவைகளை எல்லாம் எடுத்துக் கொண்டால் முன்பு யுத்த சமயத்தில் (வார் டைம்) இருந்ததை விட 10 மடங்கு விலை அதிகமாக இருந்து கொண்டிருக்கிறது. சென்ற இரண்டு வருஷங்களுக்குள் விலை அதிகமாக ஏறிக்கொண்டே இருக்கிறது. இவ்விதம் விலைகள் ஏறிக்கொண்டேயிருந்தால், இதே விலை கொடுத்து அவர்கள் வாங்கி உணவு உற்பத்தியை பெருக்கிக்கொண்டிருந்தால் அவர்களுக்கு என்ன லாபம் கிடைக்கும்? இவ்வளவு கஷ்டங்கள் இருந்தும்கூட எவ்வளவு தூரம் அவர்களால் தாங்க முடியுமோ அந்த அளவுக்கு அவர்கள் செலவு செய்துதான் வருகிருர்கள். இதில் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம் என்னவென்றல் தழை உரத்திற்கு வேண்டிய விதைகளை (க்ரீன் மான்யூர் ஸீட்ஸ்) குறைவான விலையில் கொடுக்கவேண்டும். அதே மாதிரிதான் சூப்பர் பாஸ்பேட், எலும்புத்தூள் போன்றவைகளும் குறைவான விலையில் கொடுப்பதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து ஸப்ஸிடி உதவி கேட்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதே மாதிரிதான் பூச்சி மருந்து விஷயத்திலும் போதுமான அளவுக்கு ஸப்ஸிடி கிடைப்பதில்லை. ஒவ்வொரு இடத்திலும் போதுமான அளவுக்கு இம்மாதிரியான மருந்துகள் கொடுக்கப்பட வேண்டும். இப்போது சரியாக கொடுக்கப்பட்டு வருவதாகத் தெரியவில்லை. இப்போது சிறிய அளவுக்குத்தான் கொடுக்கப்பட்டு வருகிறது. இந்த மருந்துகள் ஒவ்வொரு பகுதியிலும் அங்குள்ள டெமான்ஸ்ட்ரேட்டர் ஆபீஸ்-க்கு வருகிறது, அது வந்த இரண்டு, மூன்று தினங்களுக்குள் அவைகள் எல்லாம் செலவழிந்து போகின்றன. அதன் பின்னல் பலருக்கு மருந்து கிடைக்காமல் கஷ்டப்படுகிருர்கள். அதே மாதிரி டீஸல் எண்ணெய் விஷயத்திலும் விலை அதிகமாக இருக்கிறது. இதைப்பற்றி இந்த ஆயிலுக்கு வரி போடும் காலத்திலும் சொல்லியிருக்கிறேன். இந்த எண்ணெயின் விலை அதிகமாக இருப்பதினல் ரயத்துகள் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். அவர்களுக்கு தனியாக

சலுகை கொடுக்கும்படியான ஒரு வழியை தேட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதே மாதிரிதான் விதைகளும் சரியான முறையில் கொடுக்கப்படுவதில்லை. இதில் அனேக ஊழல்கள் எல்லாம் இருக்கின்றன. இதைப்பற்றி ஆளும் கட்சியில் இருக்கும் பலரும் எடுத்துச் சொன்னார்கள். இது உண்மையான சமாச்சாரம்தான். இப்போதுள்ள சர்க்கார் அறிக்கையின்படி **154** விதைப் பண்ணைகள் ஆரம்பித்து இருப்பதாக சொல்லியிருக்கிறார்கள். இவைகள் எல்லாம் எந்த முறையில் நடக்க போகிறது என்பதை பின்னிட்டுதான் யோசனை செய்யவேண்டும். அமைச்சர் அவர்கள் இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னால் அளித்த பதிலிலும், எஸ்டிமேட் கமிட்டியார் சொன்ன யோசனைகளை கவனித்து இதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்து ஆவன செய்வோம் என்று சொல்லியிருக்கிறார்கள். எஸ்டிமேட் கமிட்டியில் நான் இல்லாதிருந்த போதிலும் சில ஜில்லாக்களை சுற்றி வரும்போது சில விதைப்பண்ணைகளை நான் பார்த்தேன். அவற்றில் அனேகமாக எல்லா இடங்களிலும் ஊழல்கள் நடந்திருப்பதாகவே தெரிந்தது. அனேக இடங்களில் தகராறான நிலங்களை எல்லாம் விதைப் பண்ணை ஆரம்பிப்பதறகு எடுத்திருக்கிறார்கள். விதைப் பண்ணைக்கு சாதாரணமாக நல்ல நிலமாகவும், சத்துள்ள நிலமாகவும் இருக்கவேண்டும். அந்த மாதிரிதான் பொறுக்கி நிலங்களை எடுக்கவேண்டும். அனேகமாக மட்டரக நிலங்களை எடுத்திருப்பதால் அவைகள் எல்லாம் பிரயோசனமில்லாமல் இருக்கின்றன. ஸிங்கிள் பார்மாக இருக்கக்கூடிய இடத்திலும் அங்கு இருக்கக்கூடிய டெமான்ஸ்ட்ரேட்டர் இந்த வேலையை செய்ய வேண்டுமென்றிருக்கிறது. ஒவ்வொரு டெமான்ஸ்ட்ரேட்டருக்கும் பலவிதமான வேலைகள் இருந்தும் அவைகளுக்கு மேலாக இந்த விதைப் பண்ணைகளையும் பார்க்கவேண்டும். அவர்களுக்கு கீழே மேஸ்திரிகள் ஒருவரையும் போடாமல் இருப்பதால் அனேக இடங்களில் விதைப் பண்ணைகள் சரியான முறையில் நடைபெற வில்லை என்று தெரிகிறது. இது தவிர சில இடங்களில் சரியான சமயத்தில், அதாவது நாத்து நடும் தருணத்தில் விதை சரியாக வருவதில்லை. அதோடுகூட பம்பு செட்டுகளும் போடுவதில்லை. இதனால் அந்த பிராந்தியங்களில் நர்ஸரி செய்ய வேண்டிய காலத்தில் செய்யப்படாமல் இருக்கிறது. இவையெல்லாம் வருத்தப்பட வேண்டிய காரியமாக இருக்கிறது. மேலும் சில இடங்களில் பணவசதி குறைவினால் கூலிகள் கிடைக்காமல் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. அவர்களிடத்தில் பெர்மனண்டு அட்வான்ஸ்-ம் கிடையாது. இம்மாதிரி இருந்து கொண்டிருந்தால் இந்த பண்ணைகள் எந்த விதமாக நடக்கும் என்பதை சொல்ல வேண்டிய தேவையில்லை. அதற்காக நான் சொல்லும் யோசனை என்னவென்றால், ஆராய்ச் 12-40 p.m.
சிப் பண்ணைகள், ஆடுதுரை பண்ணைகளைப் போன்ற பண்ணைகள், ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒன்றிரண்டு இடங்களில் வைத்து நடத்தினால் நன்றாக இருக்கும். இப்போது இதைப்பற்றிப் பேசுவதில் பிரயோசனம் இல்லையென்று நினைக்கிறேன். ஏனென்றால் 150 பண்ணைகளை ஆரம்பித்து விட்டார்கள். இன்னும் 150 பண்ணைகளை ஆரம்பிக்கப் போகிறார்கள். இதைப்பற்றி சர்க்கார் நன்கு யோசிக்கவேண்டும். விதை உற்பத்திகள் காரியத்தை ரயத்துக்களுக்குக் கொடுத்து, அவர்களுக்கு மூட்டைக்கு இரண்டு ரூபாய், மூன்று ரூபாய் என்று கொடுத்தால் நல்ல முறையில் விதைகளைத் தயாரித்துக் கொடுப்பார்கள். இருந்தபோதிலும், இந்த மாதிரி விதைப் பண்ணைகள் நடத்தவேண்டுமென்பது மத்திய சர்க்கார் உத்திரவு என்று சொல்லலாம். எப்படியிருந்தபோதிலும் இது எந்த முறையில் நடக்க வேண்டுமென்று அமைச்சர் கக்கன் அவர்கள் யோசித்து ஒரு முடிவு செய்தால் நலமாக இருக்குமென்று நினைக்கிறேன்.

தவிர, ரயத்துகளுக்கு கடன் வசதிகளை போதுமான அளவு கொடுப்பதில்லை. அப்படிக் கொடுப்பதும் சரியான நேரத்தில் கிடைப்பதில்லை. முக்கியமாக எங்கள் ஜில்லாவில், அநேக இடங்களில் கடன் வசதி கொடுத்த போதிலும், சாகுபடி சமயத்தில் நிர்ப்பந்தமாக ஒரு உத்திரவு போட்டு அந்தக் கடன்களை வசூலித்து, மும்முரமாக ஜப்தி முதலியவை செய்து ரயத்துக்களை கஷ்டப்படுத்தியிருக்கிறார்கள். அநேக இடங்களில் ரயத்துக்கள் மாடுகள் முதலியவைகளையெல்லாம் விற்று, சாகுபடி செய்யக்கூடிய நிலங்களை கரம்பாகப் போட்டிருக்கிறார்கள். மாகூலை வேண்டுமானாலும்

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [10th September 1958

எடுத்து வரலாம். கடந்த 5, 6 வருஷ பாக்கியை சாகுபடி செய்யும் தருணத்தில் ஹிம்சை செய்து வசூலிக்கும்போது அநேகம் பேர்கள் துன்பத்திற்கு ஆளாகியிருக்கிறார்கள்.

தவிர, தொழிற்சாலைகளுக்கு 4 சத வீத வட்டிக்குக் கடன் கொடுக்கிறார்கள் அரசாங்கத்திலே. ஆனால் நம் விவசாயிகளுக்குக் கொடுக்கப்படும் கடனுக்கு வட்டி 6¼ சத வீதம். இரண்டேகால் சத வீதம் மேலே வைத்து அரசாங்கம் ஏன் கொடுக்க வேண்டுமோ தெரியவில்லை. தொழிற்சாலைகளைப் போல், 4 சத வீத வட்டிக்குக் கொடுக்க சர்க்கார் முன் வரவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

அரிசியானது பற்றாக்குறையாக சில இடங்களில் இருக்கிறது. சில பிராந்தியங்களில் ஏதோ சில வியாபாரிகளும் பதுக்கி வைத்திருக்கலாம். ஆகையால் வியாபாரிகளுக்குக் கடன் கொடுப்பதைப் பற்றி யோசித்துச் செய்ய வேண்டும். முக்கியமாக விவசாயம் செய்பவர்களுக்குக் கடன் கொடுக்க வேண்டும். வியாபாரிகளுக்குக் கொடுக்கும் போது யோசிக்க வேண்டும். அவர்களுக்கு ரூபாய் கொடுத்தால், அரிசியை அதிகமாக வாங்கி ஸ்டாக் செய்து, பற்றாக்குறையை ஏற்படுத்தி, பிளாக் மார்க்கெட் ஏற்படுகிறது. அதைப் பற்றி தீர்க்காலோசனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அநேக இடங்களில் இப்போது வாங்கும் சக்தி குறைந்துவிட்டது. அரிசி கிடைத்தபோதிலும், மக்களிடம் வாங்கும் சக்தி இல்லை. அநேக பிராந்தியங்களில் மக்கள் வேலை கிடைக்காததால் கஷ்டப்படுகிறார்கள். ஆக, உற்பத்தியாகும் பொருளுக்கு, உற்பத்திக்கு என்ன செலவாகிறது எவ்வளவு என்று பார்த்து ஒரு விலை நிர்ணயம் செய்தால், இரண்டு பேர்களுக்கும் சௌகரியம் ஏற்படும், அதனால் உணவு உற்பத்தி பெருகும் என்று சொல்ல ஆசைப்படுகிறேன்.

கனம் அண்ணாதுரை அவர்கள் சொன்னார்கள், நானும் சொல்ல விரும்புகிறேன். மத்திய சர்க்காரில் பிரதம மந்திரி அவர்கள் சர்வ கட்சி மகாநாடு ஒன்றைக் கூட்டி உணவு பிரச்னையைப் பற்றி அவர்களோடு கலந்து ஆலோசிக்கிறார்கள். நம் பிராந்தியத்தில் இப்போது ஒரு கமிட்டி போட்டிருக்கிறார்கள். அதிலே எதிர் கட்சி அங்கத்தினர்கள் ஒருவரும் இல்லை என்று வருத்தத்தோடு சொல்ல விரும்புகிறேன். என்ன காரணத்தினால் எதிர் கட்சி அங்கத்தினர்களைச் சேர்க்கவில்லை என்று அமைச்சர் அவர்கள் தன்னுடைய பதிலிலே சொல்வார்கள் என்று நினைக்கிறேன். உற்பத்தி பெருகி, மக்கள் பட்டினி இல்லாமல் சாப்பிட வேண்டுமென்பதில் கட்சி பாகுபாடு கிடையாது. இதிலே எல்லோரும் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறோம் என்று சொல்ல விரும்புகிறேன். உடனடியாக இதைப்பற்றி நன்கு யோசித்து "ஆல் பார்ட்டி கமிட்டி" (எல்லா கட்சியினரையும் சேர்த்து ஒரு கமிட்டி) ஒன்றை அமைத்தால் எல்லோருடைய ஒத்துழைப்பும் கிடைக்கும், அப்படி ஒரு கமிட்டியை அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, அசோக் மேத்தா கமிட்டி என்ற ஒரு கமிட்டியை மத்திய சர்க்கார் போட்டிருந்தார்கள். அதனுடைய முக்கியமான ஆலோசனைகளை, மத்திய சர்க்கார் நம் சர்க்காரை அமுல் நடத்தவேண்டும் என்று உத்திரவு போடாததன் காரணத்தாலோ என்னவோ, அவர்களுடைய சிபார்சுகளை அமுலுக்குக் கொண்டு வரவில்லை. அமைச்சர் அவர்கள் அதற்கான காரணங்களையும் கூறவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நம் மாகாணத்தில் பற்றாக்குறை இருந்தாலும், இல்லாவிட்டாலும், குறைந்தது 10 லட்சம் டன் ஸ்டாக் இருக்க வேண்டும். அதன் பிறகு தான் மற்றவர்களுக்கு விநியோகிக்க வேண்டும். இந்தப் பகுதியிலிருந்து சொல்லப்பட்ட யோசனைகளையும் திருத்தங்களையும் அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொண்டு, முக்கியமாக உடனடியாக ஒரு ஆல் பார்ட்டி கமிட்டியைப் போடுவதைப்பற்றி தீவிரமாகப் பரிசீலனை செய்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் சொற்பொழிவை முடித்துக்கொள்கிறேன்.

10th September 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move the following amendment to the motion which I moved at the commencement of this debate—

'*Add* the following at the end—

" and on such consideration this House approves the policy of the Government ".'

SRI P. G. KARUTHIRUMAN : Sir, I second it.

SRI A. GOVINDASAMY : There is no need to second it.

MR. SPEAKER : He has done it by way of abundant caution.

Amendment moved—

'*Add* the following at the end—

" and on such consideration this House approves the policy of the Government ".'

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, முதன் முதலாக இந்த விவாதத்தைக் கோரிய எதிர் கட்சியினருக்கும், இந்த விவாதத்தில் கலந்து கொண்ட கனம் அங்கத்தினர்கள், கட்சித் தலைவர்கள், எல்லோருக்கும் நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

உணவுப் பிரச்னை—உணவு நிலைமை—இந்த ராஜ்யத்திலே எவ்வாறு இருந்த போதிலும் அதைத் தெரிந்து கொள்வது அவசியம், அதைப் பற்றிப் பேசுவதும் அவசியம் ஆகும். முக்கியமாக நாம் பத்திரிகைகளில் பார்க்கிறோம். டில்லியிலிருந்து வரும் செய்திகளை வாசிக்கிறோம். அந்தச் செய்திகளிலே ஒரு கவலைக்கிடமான நிலைமை வெளிப்படுகிறது. அது, வாசிக்கின்ற எல்லோருக்கும், கவலையை அளிக்கும். உணவுப் பிரச்னை ஒரு முக்கியமான பிரச்னை. ஆகவே உள்ள நிலைமையைத் தெரிந்து கொள்வதில் த்வறில்லை. யுத்த காலத்திலே கூட வற்புறுத்தப்பட்டது என்னவென்றால் இதிலே தீவிர கவனம் செலுத்த வேண்டும், பீதியடையக் கூடாது என்பது. ஆகவே, இன்று உணவு நிலைமை மோசமானதாக இருந்தால், மோசம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். மோசமானதாக இல்லையென்றால், அதையும் தெரிந்து கொள்ளவேண்டும். மோசமான நிலைமை வேறு எங்காவது இருந்தாலும் நம் மாகாணத்தில் இல்லை என்று தெரிந்து கொள்ளவேண்டும். மோசமானதாக இல்லையென்று சொல்லும்போது, கூடிய வரையில் இந்தப் பிரச்னையைத் தீர்த்தாகி விட்டது, இனி செய்வதொன்றுமில்லை, எல்லாவற்றையும் செய்து விட்டோம் என்று அர்த்தமில்லை. மேலும் அபிவிருத்தி அடைய வேண்டும். அதிலே கவனம் செலுத்தி அப்போதைக்கப்போது உள்ள நிலைமையை உணர்ந்து, அதற்கு மேல் நாம் அபிவிருத்தியில் ஈடுபட வேண்டும். அப்போதைக்கப்போது, எவ்வாறு நாம் செல்கிறோம், செல்லும் வழி சரிதானா என்று நன்கு யோசித்தாலன்றி நாம் அபிவிருத்தியை நாட முடியாது.

அந்த வகையிலேதான் கனம் அங்கத்தினர்களும் உணவு நிலைமை பற்றிய விவாதத்தை நடத்த வேண்டுமென்று கூறினார்கள். அந்த வகையிலேயே தற்போதைய உணவு நிலைமையை அரசாங்கத்தின் சார்பாக நான் தெளிவாகக் கூறினேன். நான் முதலிலேயே சொல்லிவிடுகிறேன், " காம்ப்ளஸென்ஸி " ஒன்றும் இல்லை அரசாங்கத்தைப் பொருத்தவரையில். நிலைமை திருப்திகரமாக இருக்கிறது என்றால் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை என்று சொல்ல முடியாது. இதை நான் தெளிவாக கூறுகிறேன். இன்னும் நாம் உற்பத்தியை கணிசமான

[Sri M. Bhaktavatsalam] [10th September 1958

அளவு பெருக்க வேண்டும். இன்று தேவையான அளவுக்கு கூடிய வரையில் உற்பத்தியாகக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்றால், உணவுத் தேவையைப் பொறுத்தமட்டில் அது போதும் என்று நான் ஒப்புக்கொள்ளவில்லை. பருவ மழை தவறவில்லையென்பதால், பயிர்கள் பாதிக்கப்படாமல் விளைந்ததால், நம்முடைய தேவைக்கு வேண்டிய உணவு இந்த ஆண்டிலே உற்பத்தியாகிறது என்று கூறினேன். ஆனால் சில ஆண்டுகளிலே பருவ மழை தவறுகிறது. அதற்கும் சேர்ந்தாற்போல உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்று நான் வற்புறுத்தியிருக்கிறேன். அவ்வாறு கணக்கிட்டு, இதுவரையிலும் ஏதாவது உற்பத்தி பெருகியிருக்கிறதா என்றுகூட சில கனம் அங்கத்தினர்கள் தெரிந்து கொள்ள விரும்பினார்கள். நான்கு லட்சம் டன்னுக்கு மேல் உற்பத்தி பெருகித்தான் இருக்கிறது. ஆனால் நம்முடைய லட்சியம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவு காலத்திற்குள் மொத்தம் 12 லட்சத்து சொச்சம் டன் உணவு தான்யங்கள் அதிகமாக உற்பத்தி செய்யவேண்டுமென்பது. ஆகவே, இன்னும் குறைந்தபட்சம் 8 லட்சம் டன் அதிக உற்பத்தி செய்ய வேண்டுமென்றுதான் சொல்லுகிறேன். இந்த 8 லட்சம் டன் அதிக உற்பத்தியை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் செய்தாக வேண்டும். ஆகவே, இதிலே நாம் கவனம் செலுத்த வேண்டியவர்களாக இருக்கிறோம்.

12-30 p.m.

SRI K. SATTANATHA KARAYALAR: Sir, may I know the target for 1956–57 and 1957–58?

*THE HON. SRI M. BHAKTAVATSALAM: அந்த விவரம் இப்பொழுது என் கையில் இல்லை. பின்னர் தருகிறேன். அப்படி 8 லட்சம் டன் அதிகமாக உற்பத்தி செய்தால்தான் பின்னர் பருவ மழை தவறினாலும்கூட பயன்படும். பிறரை எதிர்ப்பாராமல் இருக்கவும், பற்றுக்குறையினால் பாதிக்கபடாமல் இருப்பதற்கும் அது பயன்படும். மற்றொன்றும் சொல்ல விரும்புகிறேன். நமது உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வது மட்டுமல்ல. நம்முடைய லட்சியம் விவசாயிகளுடைய பொருளாதார நிலையை உயர்த்துவது என்பது. ஆகவே, உணவு தான்யப் பயிர்கள் மட்டுமல்லாமல், மற்ற பயிர்களிலும்கூட நாம் அக்கரை செலுத்தி வருகிறோம். விவாதத்தில் கலந்துகொண்ட சில அங்கத்தினர்கள் கவலை தெரிவித்தார்கள். அதாவது, உணவு தான்யங்கள் பற்றுக் குறையாக இருக்கும்பொழுது, ரொக்கப் பயிர்கள் **(Commercial crops)** அதிகமாகிக் கொண்டு வருகின்றன என்று சொன்னார்கள். விவசாயிகளுக்கு கட்டுப்படியாக வேண்டுமென்று சொன்னால், பல பயிர்களை உற்பத்தி செய்ய வேண்டும். உணவு தான்ய உற்பத்தியோடு ஒப்பிட்டு பார்த்தால், இந்த ரொக்கப் பயிர்களின் உற்பத்தி மிகவும் குறைவு என்பது புலப்படும். ஆகவே, ரொக்கப் பயிர்களின் உற்பத்தியும் அதிகரிக்கவேண்டும். முக்கியமாக பருத்தியை எடுத்துக்கொண்டால், இப்பொழுதே 2 லட்சத்திலிருந்து 3½ லட்சம் டன்னாக உற்பத்தி பெருகியிருக்கிறது. இதோடு நாம் திருப்தி அடையமுடியாது. பருத்தி உற்பத்தியிலே சுய தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். பருத்தியிலிருந்து நூல் நூற்கப்படுகிறது. நூலிலிருந்து ஆடை நெய்யப்படுகிறது. இதற்குப் பருத்தி மூலப் பொருள் தேவை. ஆகவே இதிலே விசேஷ கவனம் செலுத்த வேண்டியவர்களாகயிருக்கிறோம். பல பயிர்களிலே கவனம் செலுத்தி நமது நாட்டின் தேவையைப் பூர்த்தி செய்வதோடு மட்டுமல்லாமல், நாம் ஏற்றுமதி செய்ய முற்பட்டாலன்றி, நமது விவசாயிகளின் பொருளாதார நிலைமையை உயர்த்த முடியாது. அதுதான் அரசாங்கத்தின் லட்சியம். இப்பொழுது நமது உணவு தேவை எவ்வளவு தூரம் பூர்த்தியாகியிருக்கிறது என்பதைக் காட்டுவதற்கு சில புள்ளி விவரங்கள் கொடுத்ததைப் பற்றி சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். ஏதோ கணக்கிலே **"Jugglery"** என்று சொல்லுவார்களே, அதைப் போல கணக்கைக் காட்டி திருப்திப் படுத்த வேண்டுமென்ற எண்ணம் எனக்குச் சிறிதும் கிடையாது. இருக்கிற நிலைமையை எடுத்துச் சொல்ல வேண்டும் என்பதற்காகத்தான் அவற்றைக் குறிப்பிட்டேன்.

10th September 1958] [Sri M. Bhaktavatsalam]

(இச்சமயத்தில் சபாநாயகர் தலைமை வகித்தார்.)

கணக்கைப் பார்க்கவேண்டாம். ஆனால் இன்றைக்கு உணவுப் பொருள்கள் அவரவர்களுக்கு வேண்டிய அளவு கிடைக்காமல் போயிருக்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும். கணக்கை மறந்துவிட்டுப் பார்த்தால், பற்றுக்குறை இல்லை, உணவுப் பொருள்கள் கிடைக்காத நிலைமையில்லை என்பது புலப்படும். ஆந்திராவிலிருந்து நமக்கு மிகவும் குறைவாக அரிசி வந்தபோதிலும், கேரள ராஜ்யத்திற்கு நமது ராஜ்யத்திலிருந்து 2½ லட்சம் டன் அரிசி ஏற்றுமதியான போதிலும், வேறு ராஜ்யங்களிலிருந்தோ, மத்திய சர்க்காரிடமிருந்தோ கோதுமையைத் தவிர மற்ற தானியங்கள் கிடைப்பதில்லை என்றாலும், உணவுப் பொருள்கள் கிடைக்கவில்லை என்ற நிலைமையில்லை என்பதை கனம் அங்கத்தினர்கள் ஒப்புக்கொள்வார்கள்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே உற்பத்தி அளவின் லட்சியம் என்னவென்று கேட்டார்கள். 1956–57லே 2 லட்சம் டன் அதிக உற்பத்தி செய்வது, 1957–58லே 38,000 டன் அதிக உற்பத்தி செய்வது, 1958–59-ல் 3 லட்சம் டன் அதிக உற்பத்தி செய்வது என்று கணக்குப் போட்டு வைத்திருக்கிறோம். இந்த 2½ லட்சம் டன் வெளியே போனாலும், சதாரணமாக ஒரு கட்டுப்பாடும் இல்லாமல், யாரும் படி அளக்க வேண்டிய நிமித்தம் இல்லாமல், எவ்வளவு உணவு தான்யங்கள் உட்கொள்ள வேண்டியிருக்கிறது என்று பார்த்தோம். அந்த அளவைக் கணக்குப் பார்த்துத்தான் 15·3 அல்லது 15·4 இப்பொழுது உட்கொள்ளப்படுகிறது என்று சொன்னேன். எல்லா உணவு தான்யங்களையும் நாம் ஏற்றுமதிக்கு இடம் கொடாமல் நம்முடைய மா நிலத்திலே வைத்துக்கொள்ள வேண்டுமென்று கூறுவதைப் பற்றி ஒன்று சொல்ல விரும்புகிறேன். உற்பத்தி செய்கிற விவசாயிகளுக்குத்தான் அதனுடைய அருமை தெரியும். உற்பத்தி செய்கிறவர்கள் விற்றுத்தான் ஆக வேண்டும். விற்பதிலே சிலசமயம் கஷ்டப்படுகிறார்கள். ஒருபுறம் விலை அதிகரித்துக்கொண்டு போகிறது. வாங்குகிறவர்களுக்கு விலை அதிகரித்துக்கொண்டு போனாலும், உற்பத்தி செய்கிற விவசாயிகள் விற்க முடியாமல் போகிறது. இதை தஞ்சை மாவட்ட அங்கத்தினர்கள் நன்கு அறிவார்கள். தஞ்சை மாவட்டத்திலே குறுகிய கால உணவு தான்யம் குறுவை. குறுவை அரிசியை சாதாரணமாக தமிழ் நாட்டிலுள்ளவர்கள் சாப்பாட்டிற்கு வாங்குவது இல்லை. வியாபாரத்திற்காகத்தான் வாங்குகிறார்கள். இந்த அரிசி அதிகமாக கேரள நாட்டிலேதான் உட்கொள்ளப்படுகிறது. தனியாக சென்னை மாநிலத்திற்கு மட்டும் ஒரு மண்டலம் வைத்து இந்த அரிசி வெளியில் போவதை நாம் தடுத்துவிட்டோமென்றாலும், இந்த தான்யத்தை விற்க வேண்டிய பிரச்னை வரும். ஆகவே சென்னை மாநிலத்தை ஒரு தனி "ஸோன்" ஆக்கிவிட்டால், இங்கு இருக்கிற அரிசியை வெளியே கொண்டு போய் விற்க வேண்டுமானால் அவ்வாறு விற்க முடியாது. அதற்கு உத்திரவு வேண்டியிருக்கும். அவ்வாறே நமக்கு இப்பொழுது வருகிற நெல்லூர் அரிசி இங்கே வருவதற்கும் உத்திரவு வேண்டியிருக்கும்.

**SRI M. KALYANASUNDARAM :** அமைச்சர் அவர்கள் கொடுத்த அறிக்கையிலே என்ன காரணத்தினாலே கீழ்க்கண்டவாறு சொல்லியிருக்கிறார்கள் :

"This Government all along maintained that Madras State by itself should be constituted into a zone, etc."

***THE HON. SRI M. BHAKTAVATSALAM :** ஒரு ஆண்டிற்கு முன்பு மத்திய சர்க்காரிடம் நான் வற்புறுத்தியதைக் குறிப்பிட்டிருக்கிறேன். அப்பொழுதுதான் மண்டல அமைப்பு ஏற்பாடுகள் நடந்தன. மண்டல அமைப்பு ஏற்பாடுகள் நடக்கும்பொழுது நான் வற்புறுத்தியதை அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறேன். எந்த ராஜ்யத்தில் பற்றுக்குறையிருந்தாலும் அந்தப் பற்றுக்குறை கணக்குத் தெரிகிறது. நமது ராஜ்யத்திலிருந்து அரிசி வெளியே போகாமல் நிறுத்தி விட்டு, நமக்கு

[Sri M. Bhaktavatsalam] [10th September 1958

எவ்வளவு பற்றுக்குறையோ அதை மத்திய சர்க்காரிடமிருந்து வாங்கிக் கொள்ளலாம், கவலையில்லாமல் போய்விடும் என்ற வகையிலேதான் தனி மண்டலம் வைத்து விடுங்கள், பற்றுக்குறை இருக்கும்போது அரிசி வெளியே போனால் விலை அதிகமாக ஏறுகிறது என்று சொன்னோம். பற்றுக்குறை தற்காலிகமாக நீங்கிவிட்டது. போதிய அளவு அரிசி உற்பத்தி பெருகியிருக்கிறபொழுது, தனி மண்டலம் நமது மாநிலத்திற்காக வைக்கவேண்டுமென்று சொன்னால், அது நம்முடைய மாநிலத்தின் நிலைமைக்கு உகந்ததல்ல என்பதுதான் என்னுடைய இன்றைய அபிப்பிராயம். தனி மண்டலம் வந்து விட்டால், இப்போது நாம் கேரள ராஜ்யத்திற்கு விற்பது போல விற்க முடியாது. அதனால் உற்பத்தி செய்கிறவர்கள் அவதிப்படுவார்கள். மேலும், பயிரிடுகிற முறையை தஞ்சை மாவட்டத்தில் மாற்றிக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டாலும் ஏற்படும். தண்ணீர் விடுகின்ற முறையைக் கூட மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கும். பழக்கத்தை மாற்றிக்கொள்வதினால் விவசாயிகளுக்கு கஷ்டம் ஏற்படும். எவ்வளவுதான் அவர்கள் முன்னேற்றகரமான புதிய முறைகளை நன்கு பயன்படுத்தி வந்தாலும், பழக்கத்தை மாற்றிக்கொள்வது சுலபமாக இருக்காது. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் சொன்ன கருத்தை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். இங்கே நான் விளக்கம் கூறுவது ஏதோ விவசாய இலாக்காவிற்கு பாராட்டுதலைப் பெறுவதற்காக அல்ல. இன்றையதினம் விவசாயப் பெருங்குடி மக்கள்தான் பாராட்டுதலுக்குரியவர்கள். இதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். அவர்கள் சிறந்த வகையிலே ஒத்துழைத்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். உற்பத்தி பெருகியிருக்கிறது என்றால், அது நமது தமிழ் நாட்டு விவசாயப் பெருங்குடி மக்களின் சாதனை என்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன்.

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் தஞ்சையில் மூன்றும் போகம் சரியாக பலன் அளிக்கவில்லை என்று சொன்னார்கள்.
1 p.m. புதியதாக ஒன்றைச் செய்வது என்றால் கொஞ்சம் தயக்கம் ஏற்படுகிறது. அபூர்வமாக மராமத்து இலாகா தண்ணீர் கொஞ்சம் மிச்சமாக இருக்கிறது, மூன்றாவது போகம் சாகுபடி செய்யலாம் என்று சொன்னார்கள். அவர்கள் அம்மாதிரி சொல்லுவது அபூர்வம். கொஞ்சத்திலே அவர்கள் இதை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். அவர்களே கொஞ்சம் தண்ணீர் மிச்சம் இருக்கிறது என்று சொன்னபொழுது, மூன்றாவது போகம் சாகுபடி செய்யலாம் என்று சொன்னோம். சில பேர்கள் வேண்டாம் என்று அபிப்பிராயப்பட்டார்கள். மேலும், அதையே பிடிவாதமாக வைத்துக் கொண்டு வேண்டாமென்று பிரசாரம்கூட செய்தார்கள். ஆகவே பல பேர்கள் மூன்றும் போகம் சாகுபடி செய்யவில்லை. அப்படி சாகுபடி செய்தவர்களைப் பொறுத்தவரையில், பலபேர்கள் திருப்தியாக இருந்ததாக என்னிடம் தெரிவித்திருக்கிறார்கள்.

ஒரு கனம் அங்கத்தினர் அவர்கள் ஆந்திராவிலிருந்து அரிசி வருவது குறைந்துகொண்டே வருவதாகச் சொன்னார்கள். அதுபற்றி நான் பின்னால் சொல்லுகிறேன். கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் அவர்களும் அதுபற்றி குறிப்பிட்டார்கள். ஆனால் நாம் வரவேற்க வேண்டிய லட்சியம், நிலைமை, இறக்குமதி குறைய வேண்டும், ஏற்றுமதி பெருக வேண்டும் என்பதுதான். உணவு தான்யங்களை அதிகமாக உற்பத்தி செய்து, நமக்கு போக மிச்சப்படுத்தி அதை மற்ற மாநிலங்களுக்கு விற்கவேண்டும். அப்பொழுதுதான் நம்முடைய பொருளாதார நிலைமை உயரும். கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் சொன்னதுபோல் கேவலம் உணவுப் பொருள்களுக்கு நாம் அன்னிய நாட்டை எதிர்ப்பார்க்க கூடிய நிலைமையை அடியோடு அகற்ற வேண்டும். சென்னை நகர வாசிகள் நெல்லூர் அரிசியை விரும்பினாலும், ஏற்றுமதி பெருகி, இறக்குமதி குறைந்து வருவதை நாம் எல்லோரும் வரவேற்கவேண்டியவர்களாக இருக்கிறோம். ஆந்திராவிலிருந்து நமக்கு அரிசி அதிகமாக வரவில்லை என்று கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள். ஸோனை ஏற்படுத்திய கருத்து அரிசி நடமாட்டம் தானாக ஏற்பட வேண்டும், புழக்கம் ஏற்பட வேண்டுமென்பதுதான். கட்டுப்பாட்டை நாம் எல்லோரும்

10th September 1958] [Sri M. Bhaktavatsalam]

விரும்பவில்லை. கட்டுப்பாட்டை தவிர்க்க வேண்டும் என்பதை இங்கே உள்ள கனம் அங்கத்தினர்கள் யாவரும் ஒப்புக்கொள்ளுவர். தானாகவே நடமாட்டம் ஏற்பட வேண்டுமென்ற ஒரு லட்சியத்தோடுதான் இந்த ஸோன் ஏற்படுத்தப்பட்டது. ஆந்திராவிலிருந்து இங்கு அரிசி அதிகமாக வருவதில்லை என்று சொன்னார்கள். வராததற்குக் காரணம் இருக்கலாம். நாம் மற்ற ராஜ்யத்திலுள்ள நிலைமையை அதிகமாக ஆராய முடியாது. நம்மைப் பொறுத்தமட்டில் அதற்கு நேரடியாக பரிகாரம் தேட முடியாது. அங்கே அரிசி உற்பத்தி செய்து வைத்துக்கொண்டிருப்பவர்கள், "கொஞ்சம் பொறுத்துப் பார்க்கலாம், மற்ற மா நிலங்களில் அதிகமான விலை இருக்கிறது, அந்த விலை நமக்கும் கிடைக்கலாம்" என்று நினைக்கிறார்கள். அதிகமாக உற்பத்தி செய்கிறவர்களுக்கு அந்த அருமை தெரிகிறது. அவர்களுக்கு இப்பொழுது கிடைக்கும் விலை போதவில்லை. (குறுக்கீடு.) எல்லோரும் சொல்லுகிறார்கள். உற்பத்தி செய்கிறவர்கள் பேரிலே சொல்லுகிறார்கள் வியாபாரிகள் சொல்லுகிறார்கள் என்றாலும், மற்றவர்களும் அவர்களுக்காக பரிந்து பேசுகிறார்கள். நான் கவனித்து இருக்கிறேன். எல்லோருக்கும் பரிந்துதான் பேசுகிறார்கள். விலை போதாது, இன்னும் அதிகம் வேண்டுமென்று. ஆனால், அதை கட்டுப்படுத்தி இங்கே கொண்டுவர முடியாது. நாம் விலைக்கு வாங்கி வந்து இங்கே கொடுக்கலாம். வியாபாரிகளும் அங்கே போய் வாங்கி வரலாம். ஆனால் அங்கே தாராளமாக கிடைப்பதில்லை என்றுதான் நான் நினைக்க வேண்டியிருக்கிறது.

வடக்கு மாநிலங்களைப்பற்றி நான் குறிப்பிட்டதை திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். இந்த நாட்டின் வட பாகத்திலுள்ள மாநிலங்களின் நிலைமையைப் பற்றி சொன்னேன். வடக்கு, தெற்கு என்று பூகோளத்தை யாரும் மாற்றவில்லை. நம்முடைய ராஜ்யத்திற்கு வடக்கே உள்ள பிரதேசங்களைப் பற்றி வடக்குப் பிரதேசம் என்று சொன்னேன். அதற்காக வடக்கு என்னும் சொல்லிலேயே வெறுப்புக் கொள்ளவில்லை. ஆனால் உலக நிலைமையை நாம் நன்றாக உணர்ந்திருக்கிறோம். உலகத்தில் எதாவது ஒரு மூலை முடுக்கில் ஒரு சம்பவம் ஏற்பட்டாலும்கூட, அது இங்கு இருக்கும் நிலைமையை ஓரளவுக்கு பாதிக்கிறது. நாம் கிணற்றுத் தவளையாக இருக்க முடியாது. எங்கேயோ யுத்தம் வந்தால், இங்கு விலை அதிகரிக்கிறது, விலையை பாதிக்கிறது. ஆகையால் வடக்கு மாநிலத்தில் விலை அதிகரித்தால், அது ஓரளவுக்கு இங்கு பாதிக்காமல் செய்ய முடியாது. உலகத்திலே எங்கேயாவது ஒரு சம்பவம் ஏற்பட்டால் அது இங்கே பாதிக்கிறது. அந்த வகையிலே வடக்கு மாநிலங்களில் விலை அதிகரித்திருப்பது இங்கு ஓரளவுக்கு பாதித்திருக்கிறது என்று சொன்னேன். விலை குறைக்கப்படவேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் கவலையுமாகும். விலையை குறைப்பதில் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறோம். ஆனால், முக்கியமாக ஒன்றுதான் சிறந்த வழியாகத் தோன்றுகிறது. விலையைக் குறைப்பதற்கு உற்பத்தி இன்னும் கனிசமான அளவிற்கு பெருக வேண்டும். அவ்வாறு உற்பத்தியைப் பெருக்குவதிலே முக்கியமாக கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. முதலிலே திருத்தத்தை பிரேரேபித்து பேசிய கனம் அங்கத்தினர் அவர்கள் சைனாவைப் பற்றி சொன்னார்கள். நானும் அங்கு நேராகப் போய் வந்தவர்களைக் கேட்டிருக்கிறேன். சைனாவில் இவ்வளவு தூரம் "கலெக்டிவ் பார்மிங், கூட்டுறவு பார்மிங்" எல்லாம் இருந்தும்கூட அங்கே மக்களுடைய உணவு தான்யத் தேவையை பூர்த்தி செய்ய முடியவில்லை. அவர்கள் கவலையோடு பெரு முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். அதே வகையிலே நாமும் இங்கு ஈடுபட்டுக்கொண்டிருக்கிறோம். நம்முடைய உணவுத் தேவையை பூர்த்தி செய்வது மட்டுமல்ல, நம்முடைய பொருளாதார நிலையை உயர்த்தும் வகையிலே நாம் எவ்வாறெல்லாம் விவசாய உற்பத்தியை பெருக்குவது என்பதிலே கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறோம்.

முக்கியமாக நீர்ப்பாசனத் திட்டத்தைப் பற்றி குறிப்பிட்டார்கள். வடக்கு மாநிலங்களுக்கு பணத்தை அதிகமாக கொடுத்துவிட்டார்கள். இங்கே நிறைவேற்றக்கூடிய திட்டங்களுக்கு பணம் இல்லை என்று ஒரு

[Sri M. Bhaktavatsalam] [10th September 1958

குறைபாடு தெரிவிக்கப்பட்டது. அப்படி ஒன்றும் இல்லை. இரண்டு, மூன்று மாதங்களுக்கு முன்பு ஹைதராபாத்தில் தெற்கு மாநிலங்களின் பிரதி நிதிகளின் மகாநாடு ஒன்று நடந்தது. அங்கு மத்திய அரசாங்கத்தில் சார்பாக எங்களுக்கு தெரிவிக்கப்பட்டது என்னவென்றால், இப்பொழுது உள்ள திட்டங்களுக்கு எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறதோ, பிளானில் ஒதுக்கப்பட்டிருக்கிறதோ, அதற்கு மேல் எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லுங்கள், சிறிய நீர்ப்பாசன திட்டங்களை நிறைவேற்றுங்கள், அதிகமான பணம் வேண்டுமென்றால் கொடுக்கிறோம் " என்பதுதான். அப்படி ஒவ்வொரு மாநிலத்திற்கும் பணத்தையும் ஒதுக்கிவைத்திருக்கிறார்கள். பணத்தைப்பற்றி கவலையில்லை. ஆனால் திட்டங்களை பரிசீலனை செய்து, நிறைவேற்ற வேண்டும். இதைச் செய்வதற்கு போதுமான என்ஜினியர்கள் வேண்டும். அதிலே பற்றாக்குறை இருக்கிறது. பயன் அளிக்கக்கூடிய திட்டமா, செலவுக்கேற்ற பலன் கிட்டுமா என்பதையெல்லாம் பரிசீலனை செய்ய வேண்டியிருக்கிறது. அந்த வகையில் '**tube well, filter point, river pamping lift irrigation** இன்னும், என்னென்ன திட்டங்கள் உண்டோ, அவைகளெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டு, எதை நிறைவேற்ற முடியும் என்பதில் கவனம் செலுத்தப்படுகிறது. (**Exploratary tube wells**) திட்டத்தை மத்திய சர்க்கார் நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்கள். நம்முடைய மாநிலத்தில் அது திருப்திகரமாக இருந்தால், அதை நம்மிடம் விட்டுவிடுகிறார்கள். அவைகளையெல்லாம் எங்கே நிறைவேற்றமுடியும் என்பதை நாம் சொல்லுவதற்கில்லை.

செங்கற்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்களில் பயன் அளிக்கக்கூடிய சில திட்டங்கள் பற்றி திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள். இவைகளெல்லாம் எவ்வளவு தூரம் சாத்தியம், எவ்வளவு தண்ணீர் கிடைக்கும் என்பதை பரிசீலனை செய்ய வேண்டும். இரண்டு, மூன்று மாநிலங்கள் அக்கரை கொள்ளக்கூடிய உரிமை காட்டக் கூடிய திட்டங்களாக இருந்தால், அவர்களோடு கலந்து ஒரு ஒப்பந்தத்திற்கு வரவேண்டும், ஒப்பந்தம் செய்து கொள்ள முடியவில்லை என்றால் தீர்ப்பு பெறவேண்டும், அதில் நமக்கு எவ்வளவு நியாயம் கிடைக்க கூடுமோ அந்த நியாயத்திற்கேற்றவாறு இந்தத் திட்டங்களை உருவாக்க வேண்டும். இதுதான் ஒரு சங்கடம். இதையெல்லாம் கவனித்து நாம் இந்தத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிறோம்.

நீலகிரி மாவட்டத்தைப் பற்றி சொன்னார்கள். அங்கே அதிகமாக உணவு தான்ய உற்பத்தி இல்லை என்பது உண்மைதான். ஆனால் ஒன்று கூற விரும்புகிறேன். இன்றைய நிலைமை தஞ்சையிலே என்ன விலை இருக்கிறதோ, அதற்கும் குறைவாக இருக்கிறது நீலகிரியில் உணவு தானியங்களின் விலை. இதை கூட்டுறவு சங்கங்களின் மூலம் வினியோகம் செய்வதில் கவனம் செலுத்த வேண்டுமென்று வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். முன்பு எதிர் பார்த்ததைவிட உற்பத்தி குறைந்திருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். அதற்கு நான் விளக்கம் அளித்திருக்கிறேன். எதிர்ப்பார்த்த வகையில் உற்பத்தி ஏற்படாததற்குக் காரணம் சில உண்டு. மழைக் குறைவினாலோ, அல்லது வேறு தொல்லைகளாலோ, உற்பத்தி எதிர்பார்த்த அளவு ஏற்படவில்லையென்றாலும், மொத்தத்தில் நிச்சயமாகச் சொல்லக்கூடும், சிறு அளவில் பெருகி இருக்கிறது. என்று. நிலத்தின் விளைவு, 100-க்கு 15 விகிதம் பெருகி இருக்கிறது. இன்னொரு 15 பங்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பூர்த்தியடையும் காலத்தில் ஏற்படமுடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது.

புறம்போக்கு வேஸ்டு நிலங்களைப்பற்றிச் சொன்னார்கள். இலட்சக் கணக்கான ஏக்கர்கள் இருப்பதைக் குறிப்பிட்டார்கள். கணக்கு லட்சக் கணக்காக இருக்கிறது வாஸ்தவம். ஆனால், இந்த நிலங்கள் சாகுபடிக்கு லாயக்கானதா என்று பார்க்கவேண்டும். எப்படி இவற்றை சாகுபடிக்கு கொண்டு வருவது என்று யோசிக்கவேண்டும். பல இடங்களில் சாகுபடிக்கு கொண்டுவர முடியாத நிலைமையில் இருக்கிறது. இன்று காலையில் கூட ஒரு கேள்விக்குப் பதில் கொடுக்கும்போது சொன்னேன். தண்ணீர் இருக்கிறது. ஆனால், இந்த நிலத்தில் கொஞ்ச காலத்திற்கு பசுந்தாள் பயிரிட்டால்தான் விவசாயத்திற்கு லாயக்காக ஆக்கமுடியும்

என்று விவசாய இலாக்கா நிபுணர்கள் கூறுகிறார்கள் என்று சேலம் ஜில்லாவில், ஆத்தூரில் வேஸ்டு நிலமாக இருந்த 30,000 எக்கராக்களை நிலம் இல்லாதவர்களுக்கு வழங்கினார்கள். ஆனால் பெரும்பாலும் பயிரிடப்படாமலே இருக்கின்றன. இதை உடனடியாகப் பரிசீலனை செய்து, என்னென்ன வசதிகள் வேண்டுமோ அவைகளைக் கொடுத்து எவ்வாறு பயிரிடலாம் என்று தீவிரமாக பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. தண்ணீர் வசதி, அல்லது வேறு வசதி செய்து கொடுத்து, நிலத்தை திருத்தி ஆவன செய்வதில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

விதைப் பண்ணைகளைப் பற்றி கனம் எதிர்க் கட்சித் தலைவர் சொல்லி, அதிலுள்ள குறைபாடுகளையும் சொன்னார்கள். அந்த விஷயங்கள் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. எப்படியும் நல்ல விதைகள் விவசாயிகளுக்குக் கொடுக்கவேண்டும். அது முக்கியமானது. அதைக் கொடுக்கச் செய்ய என்னென்ன வகையில் குறைகளை நீக்குவது என்பதையெல்லாம் பற்றி இந்த அரசாங்கம் கவனம் செலுத்திவருகிறது. இதைப்பற்றி பேசிய தலைவர்கள் குறிப்பிட்டார்கள், இந்தப் பிரச்சினையை கட்சி ரீதியில் எடுத்துப் பார்க்காமல், எல்லாக் கட்சியினரும் ஒன்றாக இருந்து செய்ய வேண்டும் என்று. அதை நான் முற்றிலும் ஏற்றுக்கொள்கிறேன். கனம் எதிர் கட்சித் தலைவர் சமீபத்தில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டதைக் குறித்துச் சொன்னார்கள் அது ஒரு தாற்காலிக கமிட்டி. மூன்று மாதத்தில் உணவுப் பெருக்கத்தைப் பற்றி ஆலோசிக்கப் போட்ட கமிட்டி. அதில் அனுபவம் பெற்றவர்களையும், பிரதம சீப் எஞ்சினியரையும் போட்டிருக்கிறோம். அதிகாரிகளையும் போட்டிருக்கிறோம். அவர்கள் உடனடியாக இந்த திட்டங்களைப் ரரிசீலனை செய்து திட்டங்களில் இருக்கும் குறைபாடுகளை திருத்தி, புதிய திட்டங்களை நிறுவி, உணவு உற்பத்தி இயக்கத்தைப் பெருக்க ஏற்பாடுகள் செய்வார்கள். ஆனால், இந்த மாதிரி நிரந்தரக் கமிட்டி போடும்போது, மற்ற கட்சிகளைச் சேர்ந்தவர்களும் நியமிக்கப்படுவார்கள். ஆனால் ஒன்று சொல்ல விரும்புகிறேன். மத்திய கமிட்டி ஒன்று போடுவது மட்டும் பயனளிக்காது. ஜில்லாக்களில் கவனம் செலுத்தப்படவேண்டும்.

நேற்று டெவலப்மெண்ட் கௌன்சில் ஏற்படுவதற்கான சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அந்த கௌன்சில்கள் சீக்கிரம் அமைக்கப்படும். அதோடு ஜில்லா போர்டுக்குப் பதிலாக, பஞ்சாயத்து யூனியன் என்ற ஸ்தாபனம் ஏற்படும். அது முக்கியமாக விவசாய வளர்ச்சி விஷயத்தில் கவனம் செலுத்தும். இந்த பஞ்சாயத்து யூனியன் தேர்ந்தெடுக்கப்படும் ஸ்தாபனம். இதில் விவசாயம் முக்கிய இடம் பெறும். இன்னும் முக்கியமாக, மாவட்டத்தை எடுத்துக் கொண்டால், டெவலப்மெண்ட் கௌன்சிலில், உணவு உற்பத்தி ஒரு முக்கிய இடம் பெறும். எந்த அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், எல்லோரும் ஒருமனப்பட்டு, உணவு உற்பத்தியைப் பெருக்க, விவசாயத்தைப் பெருக்க, பொருளாதார நிலைமையைப் போதிய அளவுக்கு உயர்த்தப் பாடுபடுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். அவர்கள் ஒத்துழைப்பைப் பெறுவோம் என்று நம்பிக்கையில் இந்த சில வார்த்தைகளைப் பேசினேன்.

இந்த திருத்தங்களைப் பொறுத்த வரையில், ஒரு திருத்தம் இந்த உணவு நிலைமையைக் கவனிக்க ஒரு கமிட்டி போடவேண்டும் என்பது. இதற்கு ஒரு தனிக் கமிட்டி போட வேண்டிய அவசியமில்லை. இங்கே ஒரு கமிட்டியைப் போட்டு அநாவசிய பீதியை உண்டு பண்ணவேண்டாம். நாம் அப்படி பீதியை ஏற்படுத்தக்கூடாது என்பது என் கவலை. நியாய விலைக் கடைகள்பற்றிச் சொல்லும்போது, நீங்கள் ஏன் வாங்கக் கூடாது என்று சொன்னார்கள். நாம் இங்கே வாங்க முற்பட்டால், விலை ஏறலாம். விலை ஏறுவதையும் தடுத்தாக வேண்டும். அதே சமயத்தில், விலை அதிகமாக குறைந்தாலும் கவலைக்கிடமாகிறது. நியாய விலைக் கடைகள் இப்பொழுது அவசியமில்லை என்பது எங்கள் கருத்து. மாவட்டங்களிலும் அம்மாதிரி அவசியம் உணரப்படவில்லை. இதை நான் மாவட்டங்களைச் சுற்றிப் பார்த்ததிலிருந்து சொல்ல முடியும். ஆகவே, திருத்தங்களைப் பிரேரித்த கனம் அங்கத்தினர்கள் அவற்றை வற்புறுத்தாமல் இந்த பிரேரணைக்கு ஆதரவு அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [10th September 1958

is concerned, there is one important item here and it is with regard to the postponement of elections by six months. It is stated in the Statement of Objects and Reasons relating to this Bill that the Government do not want to postpone the elections beyond six months. I welcome this. I only want that they should stick up to this and see that elections are conducted on the due date, if not earlier. In the meantime, the Government should take steps to revise the electoral rolls completely. Hon. Member Sri C. R. Ramaswamy was telling that the electoral rolls should be revised every year. It means considerable cost. If all the rolls are to be printed every year, it could be done only at a prohibitive cost. Whatever it is, I am sure the Government will give strict instructions to the Commissioner of the Corporation of Madras to expeditiously revise the electoral rolls within the scheduled time and see that the elections are conducted by the due date.

As for increasing the number of seats, the City is growing in population. The City has grown beyond all proportion. So, it is but right that we should raise the number of seats from 50 to 100. I welcome that proposal.

With regard to representation for women, etc., I propose to reserve my observations till the comprehensive Bill is taken up. One redeeming feature that we notice here is the abolition of special constituencies. There seems to be some difference of opinion with regard to this matter. It is said that some such reservation is necessary. My personal view is this. After the introduction of adult franchise and after the abolition of these special constituencies in the Constitution of India, I do not think it is proper to retain these constituencies only so far as the Corporation is concerned. Of course, it may be said that some representation for some experts is necessary and for that purpose special constituencies should be retained. But, my submission is this. All matters could be very well looked after by the elected representatives themselves. So, I personally feel that there is no need for any special constituencies. These are some of the redeeming features in this Bill. I do not propose to speak more at this stage. With these observations, I commend the Bill for the acceptance of the House.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் உதவி சபாநாயகர் அவர்களே இம்மசோதாவில் காணப்படும் யோசனைகள் அனைத்தும் ஸ்தல ஸ்தாபன வெள்ளை அறிக்கையில் சேர்க்கப்பட்டுள்ளவைகள் தான். அந்த வெள்ளை அறிக்கையைப் பரிசீலிக்க சட்டசபை அங்கத்தினர்களையும், மேல் சட்டசபை அங்கத்தினர்களையும் கொண்ட ஒரு கூட்டுக் கமிட்டி அமைக்கப்பட்டது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிந்ததே. அந்தக் கமிட்டி வெள்ளை அறிக்கையில் சென்னை நகர சபையைப் பற்றிக் கண்டுள்ள யோசனைகளை நன்கு ஆராய்ந்து ஒரு மனதாக எற்றுக் கொண்டிருக்கிறது. மேற்சொன்ன ஒரு கமிட்டி எல்லா கட்சி அங்கத்தினர்களையும் கொண்டிருந்தது. அவைகளை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்காக இங்கு கொண்டு வந்த பிரேரணையை எல்லோரும் எகமனதாக எற்றுக்கொள்வார்கள் என்று நினைத்திருந்தேன். ஆனால் சம்பிரதாயப் படி, ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தால், அதற்கு மறு திருத்தம் வேண்டுமென்ற முறையை அனுசரித்தோ என்னவோ அங்கத்தினர்கள் பல ஆலோசனைகளைக் கூறினார்கள். அந்த ஆலோசனைகளில் அதிகமாக விரோதமான மனப்பான்மை இல்லை. எற்றுக்கொள்ளும் மனப்பான்மையில் தான் அநேக அங்கத்தினர்கள் பேசியிருக்கிறார்கள்.

10th September 1958] [Srimathi Lourdhammal Simon]

நகராட்சியில் கூடுதலான அங்கத்தினர்கள் சேர்க்கும் யோசனையை ஆதரித்து கனம் அன்பழகன் அவர்கள் பேசினார்கள். ஹரிஜனங்களுக்கு இடம் ஒதுக்குவதையும் அங்கத்தினர்கள் வரவேற்றிருக்கிறார்கள். ஹரிஜனங்களுக்கு இடம் ஒதுக்கும்போது ஹரிஜனங்களுடைய ஜனத்தொகையைக் கணக்கிட்டுப் பார்த்து எத்தனை ஸ்தானங்கள் ஒதுக்கலாம் என்று கணக்கிடப்படுகிறது. அதை அனுசரித்து ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மேல் கூடுதலான இடம் வேண்டியதில்லை என்று இந்தக் குழு கருதியது. அப்படியே நானும் கருதுகிறேன். இப்போது இருக்கும் எண்ணிக்கையை அப்படியே வைத்திருப்பது சரியெனத் தோன்றுகிறது.

வார்டுகளைப் பிரிப்பது, வார்டுகளின் எண்ணிச்கை, இவைகளைப்பற்றியெல்லாம் பேசினார்கள். அதற்கு இன்னும் தகுந்த சமயம் இருக்கிறது. நல்ல முறையில் நடத்தலாம் என்ற எண்ணத்தோடு இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது.

கனம் ரஷீத் அவர்கள் ஆல்டர்மென்களை அகற்றுவது சரியல்ல என்று சொன்னார்கள். ஆனால் இந்தப் பிரச்னையும் குழுவினால் நன்கு ஆலோசிக்கப்பட்டது. அவர்கள் இருக்கவேண்டும் என்று அங்கத்தினர்கள் கருதவில்லை. ஆகையால்தான் அவர்களை நீக்கியிருக்கின்றது.

இன்னும் பெண்களுக்கு தனியாக இடம் ஒதுக்கவேண்டும், 5 இடங்களாவது கொடுக்கவேண்டும் என்று கனம் அங்கத்தினர் பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் கூறினார்கள். இது நிச்சயமாக வரவேற்கத் தக்கது தான். பெண்கள் என்பதால் எனது சுயநலத்தில் நான் இதை ஏற்கலாம். ஆனால், நான் 5 பேர்கள் மட்டும் தான் வருவார்கள் என்று எதிர்பார்க்கவில்லை. இன்னும் கூடுதலான பெண்கள் அங்கத்தினர்களாக வருவார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். பெண்களுக்கும் திறமை இருக்கத்தான் செய்கிறது. அவர்கள் எந்தப் பொறுப்பை ஏற்றாலும், ஏற்கும் பொறுப்பை நன்கு வகிப்பார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது. இதற்கு தனி இடம் ஒதுக்கவேண்டுமென்பது அவசியமில்லை. அவர்கள் சரியாக வேலை செய்யமாட்டார்கள், ஏதாவது காரியங்களுக்குக் கூப்பிட்டால் வரமாட்டார்கள் என்பதால் அவர்களை மக்கள் விரும்பமாட்டார்கள் என்றெல்லாம் சொன்னார்கள். அந்த மாதிரியான நிர்ப்பந்தம் ஏதும் இருப்பதாகத் தோன்றவில்லை. அவர்கள் எந்தெந்த இடத்தில் எந்தெந்த உத்தியோகம் வகிக்கிறார்களோ அவைகளைத் திறமையுடன் நடத்தி வருகிறார்கள்.

கடைசியாக கனம் எதிர்கட்சித் தலைவர்கள் இந்த மசோதாவை நன்கு ஆராய்ந்து கொண்டு வந்த பிரேரணையை ஆதரித்து இந்த மசோதாவின் நன்மைகளை விவரித்துப் பேசினார்கள். அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். எதிர் கட்சித் தலைவர் அவர்களுடைய நல்ல ஆலோசனைக்கு எப்போதுமே மரியாதை கொடுக்கவேண்டும். அவர் இதை ஆதரித்து பேசியதற்கு என் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதே முறையில் இந்த மசோதாவை இந்தச் சபை ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

The amendment of Sri N. **Marudachalam** was, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras City Municipal (Amendment) Bill, 1958 be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2 and 3 were put and carried.

*Clause* 4.

SRI A. GOVINDASAMY : Sir, I move—

In sub-section 1 (*b*) of the proposed section 5 of the principal Act, *after* the words ' Scheduled Castes ', *add* the words ' and five councillors who are women '.

The amendment was duly seconded.

SRI K. ANBAZHAGAN : Sir, I move—

In the proposed new section 5 (1) (*b*) *after* the words ' Scheduled Castes " *add* the words ' and ten women councillors '.

The amendment was duly seconded.

SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, I move—

In sub-section 1 (*b*) of the proposed section 5 of the principal Act *after* the words ' Scheduled Castes ', *add* the words ' and five councillors who are women ', and in the proviso *after* the words ' Scheduled Castes ' occurring in lines 36 and 38 *add* the words ' Co-opted women members '.

The amendment was duly seconded.

SRI C. R. RAMASWAMY : Sir, I move—

In the proposed new section 5 (1) (*b*), *add* the following as clause (*c*) of the sub-section :—

' (*c*) all Members of the Madras Legislative Assembly elected from each of the territorial constituencies from the City of Madras, who shall be ex-officio members of the Council and shall not be eligible to hold any elective office, but shall be entitled to vote :

Provided that when a person ceases to be a member of the Madras Legislative Assembly, he shall cease to be a member of the Corporation Council from the date on which he ceases to be such member.'

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

**SRI K. ANBAZAGAN :** சட்டமன்ற உப தலைவர் அவர்களே, இந்த திருத்தச் சட்டத்தில் எப்படி தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சலுகை அளித்து அவர்கள் பிரதிநிதிகளாக வருவதற்கு வாய்ப்பு அளிக்கப்படு கிறதோ, அதே போல் பெண்களுக்கும் சிறப்பான தனி இடம் அளிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காகவே நான் இத்திருத்தம் கொடுத் திருக்கிறேன். பெண்களுக்கு இப்படியும் ஒரு வாய்ப்பு அளிக்க வேண் டும் என்ற கருத்தினை தெரிவிப்பதற்காக இத்திருத்தம் கொண்டு வந்தி ருக்கிறேன். அதற்கு மாறான கருத்தை மற்ற உறுப்பினர்களும், கனம் அமைச்சர் அவர்களும் தெரிவித்த போதிலும், என்னுடைய திருத்தம் நியாயமானது என்ற கருத்தை வலியுறுத்துகிறேன்.

10th September 1958]

SRI A. GOVINDASAMY : சட்டமன்ற உப தலைவர் அவர்களே, பெண்களுக்கு தனி இடம் ஒதுக்கித் தரவேண்டுமென்ற கருத்தை நானும் வலியுறுத்திக் கூறுகிறேன். ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களும் அந்தக் கருத்தை ஏற்றுக்கொண்டார்கள். ஆனால் பெண்கள் தேர்தலில் நின்று வர முடியும் என்ற கருத்தை, அவர்கள் அமைச்சரவையிலே இருக்கின்ற காரணத்தினாலே தெரிவித்தார்கள். சாதாரண உறுப்பினராக இருக்கும் ஸ்ரீமதி அனந்தநாயகி அவர்கள் என்னுடைய கருத்தை வெளியிட்டார்கள் என்பதை இச்சபையின் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். பெண்களுக்கு தனி இடம் அளிக்கப்பட வேண்டும் என்று சொல்லும்பொழுது அக்கருத்தை பெண் அமைச்சரே எதிர்க்கும் சூழ்நிலை ஏற்பட்டதனைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். பெண்களுக்கு தனி இடம் அளிக்கப்பட வேண்டுமென்று சொல்லும்பொழுது, அவர்களைக் குறைத்து மதிப்பிடுவதாகவோ, அல்லது அவர்கள் தேர்தலில் வெற்றி பெற்று வர முடியாது என்றோ நான் கருதவில்லை. சென்ற தேர்தலில் ஆண்களோடு போட்டி போட்டு அநேக பெண் அங்கத்தினர்கள் இச்சபைக்கு வந்திருக்கிறார்கள். ஒரு சிலருக்கு இடம் கிடைக்காமல் போய்விடலாம். அமைச்சராக இருக்கின்ற காரணத்தினாலே ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் இக்கருத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தாலும், சாதாரண அங்கத்தினராக இருந்தால் ஸ்ரீமதி அனந்தநாயகி பக்கம் இருந்து இந்தக் கருத்தை ஒப்புக்கொண்டிருப்பார்கள். இந்தக் கருத்து தவறானது என்று . . . .

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கருத்து தவறு என்று நான் சொல்லவில்லை. அதற்கு அவசியமில்லை என்று தான் நினைக்கிறேன்.

DEPUTY SPEAKER : Sri Pakkirisami Pillai will now speak. I think the hon. Member has already expressed his view.

* SRI S. PAKKIRISAMI PILLAI : ஏற்கனவே விளக்கிச் சொன்ன பிரகாரம் இந்தத் திருத்தத்தை நானும் வற்புறுத்துகிறேன். அதிகப்படியாக பெண்களுக்கு ஸ்தானம் கொடுப்பதினால் கெடுதல் ஏற்படாது. இன்னும் அதிகப்படியான சேவகிகளை உற்பத்தி செய்யும்படியான நிலையில் கார்ப்பொரேஷன் இருக்கும். பெண்களின் நலனுக்காக வேலை செய்யும் பெண்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். கார்ப்பொரேஷன் முதலிய பொதுஸ்தாபனங்களில் வேலை செய்து அதன் மூலமாக பழகினால் பெண்கள் நல்ல முன்னணியில் வருவதற்கு சாத்தியமாக இருக்கும். அதற்காகத்தான் இத்திருத்தத்தை கொடுத்திருக்கிறேன்.

* SRI K. VINAYAKAM : Sir, clause 4 envisages the reconstitution of the council. One hundred councillors are to be elected according to the divisions and ten more councillors belonging to the Scheduled Castes have to be co-opted by the divisional councillors. There is a proviso that if some Scheduled Caste people have already been elected from the general seats, to that extent their number will be reduced. We are now requesting this House to accept this amendment, namely :—

In the proposed new section 5 (1) (*b*), *add* the following as clause (*c*) of the sub-section—

'(*c*) all members of the Madras Legislative Assembly elected from each of the territorial constituencies from the City of Madras, who shall be ex-officio members of the Council and shall not be eligible to hold any elective office, but shall be entitled to vote :

[Sri K. Vinayakam] [10th September 1958

Provided that when a person ceases to be a member of the Madras Legislative Assembly, he shall cease to be a member of the Corporation Council from the date on which he ceases to be such member.'

This amendment is a very simple one. It has been brought forward on the lines suggested by our Legislature Committee. The Committee recommended that the State Assembly Members should also be made responsible and should also be associated with the working of the Corporation. It is nothing strange that the Committee made this recommendation. Further, it is on the lines similar to that contemplated for the District Development Council. The State Assembly Members are associated with the work of the District Development Council. Members of the Panchayat Union will also be associated with the Council. I rightly anticipated objection from our Finance Minister. So, we made our position very clear. It is not as if we are very fond of getting associated with the Corporation. It is not as if there is any insurmountable difficulty for some of us to get into the Corporation. If only our party puts us up, we can walk in very easily. But that is not the object. We want to serve as a conduit pipe. In my opinion there is a lot of work turned out by the City Councillors. We should not run away with the impression that they are small fry and that they are not doing any good work. On the other hand, I have the experience of being a councillor and an Assembly Member, for six years. There is a lot of work to be done by the councillor from the point of view of the citizens. He does utilitarian and useful work from the point of view of the tax-payer. More work is done by a councillor than a legislator. Of course, as a legislator he has got his say in the Assembly. He contributes richly to the debates conducted here. He voices the public opinion on many matters. But from the point of the ordinary tax-payer, who does not worry about our policy but cares more for . . .

DEPUTY SPEAKER: I want the hon. Member to be brief. He has already explained the position.

SRI K. VINAYAKAM: We have to consider the requirements of the tax-payer in regard to lighting, laying new roads, giving plots of land, reducing taxes whenever there is an increase, etc. All this useful work is done by the councillor. The Legislative Assembly has not got to do any of these things. It has got its own problems. The Corporation has got its own problems. If we are associated with the Corporation, we can explain the stand of the Government to it, and we can carry its opinion and express it on the floor of this House. We give the Government the assurance that we are not mad after elective posts like the Mayoralty or the Deputy Mayoralty, and we do not want to be such. If we want to contest, we will fight our own battle. The Finance Minister once said that he would take away the right of vote. That is a point to be considered. After all ten more members are not going to upset the decisions of the Council. All the ten are not united.

10th September 1958] [Sri K. Vinayakam]

We are all divided on party basis. Even in the same party, there does not seem to be unanimity. Apart from all these things, I do not want the House or the Government to attribute motives to us when we try to introduce this amendment. We only want that we should serve the people. We want to take the problems of the Government and voice them forth on the floor of the Council and bring their problems to the floor of this House and thus serve as a conduit pipe between the two organisations. That is the object of Sri C. Ramaswami's amendment.

* SRI K. S. G. HAJA SHERIFF : Sir, I entirely agree with my hon. Friend Sri K. Vinayakam so far as this amendment is concerned. But, I do not know why he has chosen to say that the Members of the Madras Legislative Assembly should be only ex-officio members and they should not be eligible to hold any elective posts. As pointed out by the previous speaker, it is not as though we are very anxious to be there. But, if it is thought that our experience and guidance are necessary, in that Council then we should be treated like the M.L.As. in the District Development Councils. I do not think that any distinction should be made between the M.L.As. and the other Councillors. The M.L.As., who are also elected by the people, should be allowed to stand for any elective post. Some provision should be made in this regard. The distinction between M.L.As. and other Councillors in this regard is not based on any correct principle. That is my submission. 4-20 p.m.

* SRI A. A. RASHEED : Mr. Deputy Speaker, if this amendment is accepted, the Madras City Council will become unwieldy. (Laughter.) Secondly, why should we make a distinction between Members of the Legislative Assembly and Members of the Council? If the Assembly Members are admitted, should not the Members of the Legislative Council and Members of the Lok Sabha and Members of the Rajya Sabha also be admitted into the City Council? If that also is done, will it not become very unwieldy? Will it not become another Assembly so to say? Will it be possible in that case to carry on the work efficiently? Do we honestly expect that work would be attended to efficiently and expeditiously in such a big body? So, I strongly oppose this amendment, Sir.

* SRIMATHI T. N. ANANDANAYAKI, : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு சட்டசபை அங்கத்தினராக இருந்துகொண்டு கனம் ரஷீத் அவர்கள் இந்தத் திருத்தத்தை எதிர்ப்பது குறித்து நான் வருத்தப் படுகிறேன். 'அன்வீல்டி பாடியாக' போய்விடும் என்று அவர்கள் சொல் லுகிறார்கள். அவர்கள் ஆம்பூரைச் சேர்ந்தவராக இருப்பதால் நகரத் தைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. என் போன்ற நகரத்திலுள்ள அங்கத்தினர்களுக்கு இந்த சங்கடம் தெரியும். நகர மக்களோடு எவ் வளவு தொடர்பு வைத்துக்கொள்ளவேண்டும், நகராண்மை கழகத்தோடு எவ்வளவு தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும் என்பதின் அவசியம் எங்களுக்குத் தெரியும். ஆகவே, இந்தத் திருத்தத்தை தயவு செய்து ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேல் சபையி லுள்ள அங்கத்தினர்கள் பின்னாலிருந்து வந்தவர்கள். அவர்களுக்கு மக்களிடம் நேரிடையாக தொடர்பு கிடையாது. மக்களுடன் நேரிடையாக

[Srimathi T. N. Anandanayaki] [10th September 1958

சம்பந்தம் கிடையாது. ஆகவே, அவர்களும் சேர்க்கப்படவேண்டுமென்று சொல்லுவதற்கு இல்லை. பாராளுமன்ற உறுப்பினர்கள் சொல்லப்போனால் இரண்டு பேர்களை சேர்த்துக்கொள்ளுவதால் ஒன்றும் "அன்வீல்டியாக" போய்விடாது, 100 அங்கத்தினர்கள் இருக்கும்பொழுது இன்னும் இரண்டு பாராளுமன்ற உறுப்பினர்களை சேர்த்துக்கொள்ளுவதால், "அன் வீல்டியாக" போய் விடும் என்று சொல்லுவதற்கில்லை. நகரத்தில் தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கிற சட்டசபை அங்கத்தினர்களுக்கு கார்பொரேஷன் கவுன்சிலில் இடம் கொடுக்க ஒப்புக்கொண்டது பற்றி நான் அரசாங்கத்தை பாராட்டவேண்டும். அவர்கள் இதை மிகச் சிறந்த உள்ளத்தோடு செய் திருக்கிறார்கள். (சிரிப்பு) (குறுக்கீடு) பொறுக்கு கமிட்டியில் இதை நல்ல முறையிலே ஒத்துக்கொண்டார்கள். இங்கும் ஒத்துக்கொள் வார்கள் என்று நினைக்கிறேன். அப்படி ஒத்துக்கொள்ளும்பொழுது எங்களுக்கு சில குந்தகங்களை வைக்கக்கூடாது. மற்ற அங்கத்தினர்களைப் போல் எல்லாவிதமான உரிமைகளும் எங்களுக்குக் கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் தனியாக இல்லாமல் எல்லா அங்கத்தினர்களுக்கு உள்ள மரியாதை எங்களுக்கும் கிடைக்கும். வோட்டு இல்லாமலோ, அல்லது வோட்டு இருந்து "எலெக்டிவ் பாடியில்" இருப்பதற்கு தடையிருந்தால், உண்மையிலேயே " full—fledged " மெம்பர்களாக மற்ற அங்கத்தினர்களோடு சமமாக உட்கார முடியாது. குறுகிய அளவு மக்களாலே கவுன்சில் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அதிக அளவு மக்களாலே நாங்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறோம். அவர் களும் நகர மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். நாங்களும் அதே நகர மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்தான். நகரசபை அங்கத்தி னர்களுக்கு எவ்வளவு உரிமை இருக்கிறதோ, அதே உரிமையை எங்க ளுக்கும் தருவதால் ஜனநாயகத்திற்கு எந்தவிதமான குந்தகமும் ஏற் பட்டுவிடாது. பெண்களுக்கு தனி ஸ்தானம் ஒதுக்கக்கூடாது என்று ஒரு பெரிய தீமையை செய்தவர்கள், இதிலே கொஞ்சம் விட்டுக்கொடுத்து எங்களுக்கும் மற்ற அங்கத்தினர்களைப்போல் உரிமை கொடுத்து, எலெக்டிவ் பாடியில் அங்கம் வகிக்கக்கூடாது என்ற தடையும் இல்லாமல், நகர சபையில் இடம் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்பொழுது இருக்கக்கூடிய திருத்தங்கள் இரு சாரார்களைப் பொறுத்தவை. ஒன்று பெண்களை பொறுத்தது. இரண்டாவது அசெம் பிளி அங்கத்தினர்களை பொறுத்தது. அசெம்பளி அங்கத்தினர்களுக்கு ஒரு தனி சலுகை வேண்டுமென்கின்ற முறையிலும், பெண்களுக் காக தனி ஸ்தானங்கள் சிலவற்றை ஒதுக்கிவைக்க வேண்டுமென்கிற முறை யிலும் இந்தத் திருத்தங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

பெண்களைப் பொறுத்தவரையிலே நானும் நினைப்பது இதுமாதிரி பொது விஷயங்களிலே அவர்கள் போதுமான அளவு பங்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்பதுதான். அவர்கள் பங்கு எடுத்துக்கொண்டு பொது நடவடிக்கைகள் நடந்தால்தான் எல்லோருக்கும் நியாயம் கிடைக் கக்கூடிய நிலைமையிலே பொது ஸ்தாபனங்கள் இயங்கும் என்பதில் எனக்கு பூரண நம்பிக்கை இருக்கிறது. ஆனால், பெண்கள் எந்த முறையில் பிரதி நிதித்துவம் பெறவேண்டுமென்பதில்தான் கருத்து வேறுபாடுகள் இருக் கின்றன. என்னைப் பொறுத்தவரையில் பெண்கள் பின்தங்கியவர்கள் என்ற காரணத்தினாலோ தாழ்த்தப்பட்டவர்கள் என்ற காரணத்தினாலோ, அவர்களுக்கு தனியாக ஸ்தானங்கள் ஒதுக்கிக் கொடுக்கப்பட வேண்டும் என்பதை நான் வன்மையாக கண்டிக்கிறேன். அதேமாதிரி நிலைமை இருக்கிறது என்று சொல்லுவதை மறுக்கிறேன். அதற்காக நாம் என்ன செய்யவேண்டுமென்று சொன்னால், பங்கு எடுத்துக்கொள்ளக்கூடிய அரசியல் கட்சிகள் இன்னும் அதிகமாக பெண் அங்கத்தினர்களை தேர்ந்தெ டுப்பதற்கு முயற்சி செய்ய வேண்டும். சென்ற தடவை நம் அசெம்பளி யில் ஒரு பெண் அங்கத்தினர்தான் இருந்தார். ஆனால் எல்லா கட்சி களும் அதிகமாக பெண் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டு மென்ற முறையில், முக்கியமாக காங்கிரஸ், பெண் அங்கத்தினர்களுக்கும் இடம் கொடுக்க வேண்டுமென்ற முறயில் பெண் அங்கத்தினர்களை

10th September 1958] [Sri C. Subramaniam]

அதிகமாக தேர்தலுக்கு நிறுத்தியது. அதனால் இன்று 12 அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற அளவிற்கு நிலைமை இருப்பதை காண்கிறோம். பெண்கள் ஏதோ தாழ்த்தப்பட்டவர்கள், பலம் குறைவாக உள்ளவர்கள் என்கின்ற முறையிலே அவர்களை நடத்தாமல், நாம் எல்லோரும் தைரியமாக, முக்கியமாக அரசியல் கட்சியில் தைரியமாக பெண்களை ஆண்களுக்கு சமமாக தேர்தல்களில் நிறுத்தி வைக்க முன்வர வேண்டும். அப்படிச் செய்தால் அவர்கள் தொகை உயரும். இல்லாவிட்டால், ஆண்களை விட பெண்கள் கொஞ்சம் குறைவானவர்கள் என்கின்ற மனப்பான்மை மேலும் வளர்ந்துகொண்டே போகும் என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். முக்கியமாக முன் அணியில் இருக்கக்கூடிய பெண்கள் இவ்வாறு தாழ்ந்த மனப்பான்மையோடு பேசினால், மற்ற பெண்களை என்ன சொல்லுவது? முன் அணியில் வந்திருக்கக்கூடியவர்கள், வழிகாட்டியாக வந்திருக்கக்கூடியவர்கள் மற்ற பெண்களுக்கு வழிகாட்டும் முறையிலே தன் நம்பிக்கையோடு இயங்குவதற்கு பழகிக் கொள்ள வேண்டும், நடந்துகொள்ளுவதற்கு முயலவேண்டும். இன்றைக்கு ஆண்களை நம்பித்தான் வாழவேண்டும் என்கிற நிலைமையிலே இல்லாமல், தங்களுடைய உரிமையையும், தகுதியையும் பலத்தையும் கொண்டு முன்னுக்கு வர முடியும் என்ற நம்பிக்கை வரவேண்டும். ஆகவே பெண்களுக்கு தனியாக ஸ்தானங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்று கேட்பதை விட்டு விடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நம்முடைய அரசியல் நிர்ணய சபையில் இம்மாதிரி பெண்களுக்கு தனி இடம் வேண்டுமா என்ற பிரச்னை எழுந்தது. அப்பொழுது பெண் அங்கத்தினர்கள் எல்லோரும் "இனிமேல் எங்களுக்கு தனிப்பட்ட பிரதிநிதித்துவம் கூடாது, நாங்களும் ஆண்களுக்கு சரிநிகர் சமமாக இருந்து எந்த ஸ்தானங்களுக்கும் வர வேண்டும், எங்களுக்குகாக தனி இடம் ஒதுக்கிவைத்து மற்றவர்கள் தயவில் நாங்கள் வருகிறோம் என்ற நிலைமை இருக்கக்கூடாது" என்று சொன்னதினால்தான் எந்த சட்டசபையிலும் அவர்களுக்கு தனிப்பட்ட ஸ்தானம் ஒதுக்கவில்லை என்பதை அவர்கள் மனதில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே நாம் இப்பொழுது ஏதோ அசெம்பிளி அங்கத்தினராக இருக்கிறோம் என்ற காரணத்தில், நமக்கு இன்னொரு இடத்திலேயும் அங்கம் வேண்டும் என்பது அவ்வளவு 4-30 p.m
சரியல்ல. ஆகவே இந்த திருத்தத்தை வற்புறுத்தாமல் அவரவர்கள் தகுதியின் பேரிலும், தரத்தின்பேரிலும் மக்களின் நன்மைக்காக எல்லா அரசியல் கட்சிகளும் பாடுபட வேண்டும், முயற்சி எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது இந்த விஷயத்தை இதற்குமேல் முடிக்கவேண்டிய அவசியமில்லை. இந்த மசோதா தற்காலிகமாக உடனடியாக எலெக்ஷன் நடக்க வேண்டிய வழியை வகுக்க வேண்டி கொண்டு வரப்பட்டது. கனம் அன்பழகனுக்கும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். 52-ம் பக்கத்தில் இருப்பதைக் கவனிக்க வேண்டும். அதாவது,

'Before the Committee proceeded to discuss the items for consideration at the meeting, Secretary expalined that, of the three Bills placed before the Committee, two relating to District Municipalities and the Madras Corporation were mainly of an interim nature. Permanent legislation relating to these bodies will be drafted and placed before the Committee later. For the present, such changes in the law as are necessary for purposes of the elections due to be held shortly are embodied in the two Bills now presented.'

ஆகையினால், இந்த 100 தொகுதிகளாகப் பிரித்து, இவைகளெல்லாம், தேர்தல் நடக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. வேறு விஷயங்களைப் பற்றி முழு மசோதா வரும்போது கவனித்து செய்ய வேண்டியது. ஸர்கிள் கௌன்சில்கள் இருக்க வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. ஆனால் அதுவும் இந்த மசோதாவில் இடம் பெறவில்லை. அந்த ஸர்கிள் கௌன்சில்களில் பெண்கள் அங்கத்தினர்களாக இருக்கவேண்டியது அவசியம். ஏனென்றால், அந்தந்த வட்டாரத்தில் உள்ள மெடர்னிடி,

[Sri C. Subramaniam] [10th September 1958

ஹாஸ்பிடல் விஷயங்களைப் பொருத்த வரையில், பெண் பிரதிநிதிகள் இருக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆகவே, அதை இப்பொழுது வற்புறுத்தாமல் இருக்க வேண்டும்.

அதைப்போலவே, அசெம்பிளி மெம்பர்களைப் பொருத்த வரையில், இப்பொழுது முடிவு செய்யவேண்டிய அவசியமில்லை. பின்னால் செய்து கொள்ளலாம். ஆனால் ஒன்று மட்டும் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஸ்ரீமதி அனந்தநாயகி சொன்னார்கள், அசெம்பிளி மெம்பர்களைச் சேர்ப்பதனால், அவர்கள் எல்லா உரிமைகளுடன் சேர்க்கப்பட வேண்டும் என்று. இது விஷயத்தைப் பின்னால் முழு மசோதா வரும்போது நாம் தீவிரமாக ஆலோசனை செய்து, அது எந்த அளவுக்கு அவசியம் • என்பதைப் பரிசீலனை செய்து பார்க்கலாம். கனம் ரஷீது இதை எதிர்க்கிறார்கள். கனம் ராமசாமி ஆதரிக்கிறார்கள். ஸ்ரீமதி அனந்தநாயகி அவர்களுக்கு ஒன்று சொல்லுவேன். அசெம்பிளி மெம்பர்களாக உட்கார்ந்து கொண்டு செய்த சட்டத்தில், தங்களுக்கு சாதகமாக, தங்களுக்கு ஏதோ சலுகைகளைச் செய்து கொண்டு விட்டார்கள் என்ற அபிப்பிராயம் மக்களிடம் பரவக் கூடாது. கனம் பக்கிரிசாமி பிள்ளை அங்கத்தினர்களாக இருப்பவர்கள் முழு நேர ஊழியர்களாக இருக்க வேண்டும் என்று ஒரு கருத்தைச் சொன்னார்கள். அப்படியானால், அசெம்பிளி மெம்பர்களாக இருப்பவர்களுக்கு இங்கே பல பணிகள் இருக்கின்றன. ஆகையினால், அவர்கள் நகர சபையில் முழு நேர ஊழியர்களாக இருப்பது சாத்தியமல்ல. ஒன்று இங்கே இருக்க வேண்டும், அல்லது அங்கே இருக்க வேண்டும். அசெம்பிளி மெம்பர்கள் நகர சபையில் பங்கு கொள்ளக்கூடாது என்பது என் அபிப்பிராயம். காரணம் ஒரு விஷயம் நகர சபையில் ஆலோசனைக்கு வந்து விவாதம் ஆன பிறகு, மறுபடியும், அசெம்பிளிக்கு வரும்போது, விருப்பு வெறுப்பு இன்றி திறந்த உள்ளத்தோடு பார்க்கக்கூடிய நிலையில் இருக்க வேண்டும். ஆகவே, ஒரு தரம் நகரசபை அங்கத்தினராக இருந்து விவாதித்து இருந்தால், அதே மனோபாவத்துடன்தான் அந்த விஷயத்தை நோக்கத் தோன்றும். அது தவிர்க்கப்பட வேண்டும். அந்த முறையில் நியாயமாகவும் சீராகவும் விஷயங்களை கவனிக்கத் தக்க ரீதியில் அது அமையவேண்டும். இவற்றையெல்லாம் யோசித்து, பின்னால் அசெம்பிளி மெம்பர்களைச் சேர்க்க வேண்டுமா வேண்டாமா என்பதையெல்லாம் தீர்மானித்துக் கொள்ளலாம்.

அசெம்பிளி மெம்பர்கள் அங்கத்தினர்களாக இருக்க வேண்டும் என்று சொல்லும்போது, அந்தந்த முனிசிபாலிடிகளிலும் அந்தந்த தொகுதி அங்கத்தினர்களுக்கு அங்கம் கொடுக்க வேண்டும் என்று ஏற்படும். அது இப்படியே பிணைத்துக் கொண்டே போகும். முக்கியமானது இந்த டெவலப்மென்ட் கௌன்சில். அது நிர்வாக அதிகாரம் இல்லாதது. அது ஒரு ஆலோசனைக் குழு, நிர்வாகம் அதிகாரம் பெற்ற சபைக்கும், நிர்வாக அதிகாரமில்லாமல், ஆலோசனைக் குழுவாக இருப்பதிற்கும் வித்தியாசம் இருக்கிறது. ஆகவே அந்த வாதம் பொருந்தாது என்பதைத் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். என்னைப் பொருத்த வரையில், அதையெல்லாம் பற்றி இப்பொழுது முடிவுக்கு வரவேண்டிய அவசியம் இல்லை. இன்னும் நன்றாக ஆலோசித்துப் பார்க்க வேண்டும். அடுத்த முழு மசோதா வரும்போது, அதை யோசித்து அசெம்பிளி அங்கத்தினர்கள் அங்கம் வகிக்க வேண்டும் என்றால், தேர்ந்தெடுக்கப்பட்ட 100 பேர்களோடு 110 பேர்களாகப் போட்டு விடலாம். அம்மாதிரிச் செய்ய வேண்டுமா வேண்டாமா என்பதையெல்லாம் பின்னால் முடிவு செய்து கொள்ளலாம். ஆகவே இந்த திருத்தங்களை இப்பொழுது வற்புறுத்த வேண்டாம் என்று அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த இரண்டு திருத்தங்களையும், ஒன்று பெண்களுக்கு அங்கே இடம் கொடுக்க வேண்டும் என்பதையும், மற்றொன்று அசெம்பிளி மெம்பர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற இரண்டு திருத்தங்களையும் வாபஸ் பெற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவற்றைப் பற்றியெல்லாம் உடனடியாக இப்பொழுது முடிவு செய்ய வேண்டிய அவசியமில்லை. ஆகவே இந்த இரண்டு திருத்தங்களையும் சர்க்கார் ஏற்றுக்கொள்வதற்கு இல்லை, வாபஸ் பெற வேண்டும் என்று மறுபடியும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment of Sri A. Govindaswamy was put and lost.

The amendment of Sri K. Anbazhagan was put and lost.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri Pakkiriswami Pillai, withdrawing his amendment?

THE HON. SRI C. SUBRAMANIAM : A similar amendment has already been put to the vote of the House and lost.

DEPUTY SPEAKER : Yes, it is only a similar amendment. I need not put it to the vote of the House because the sense of the House has already been taken on a similar amendment.

The amendment of Sri C. R. Ramaswami was, by leave, withdrawn.

Clause 4 was put and carried.

Clauses 5 to 27 were put and carried.

*Clause* 28.

SRI S. PAKKIRISAMI PILLAI : Mr. Deputy Speaker, I move—

" *Omit* sub-clause (3) ; and

In sub-clause 4 (*a*) *for* the words ' on the date fixed as aforesaid ' *substitute* the words ' on the date fixed by the Government.' "

SRI A. GOVINDASAMY : I second the amendment.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்தத் திருத்தத்தை நான் ஒரே ஒரு நோக்கத்துடன்தான் பிரேரித்திருக்கிறேன். இந்தத் தேர்தலை உடனடியாக நடத்தக்கூடாது என்கிற எண்ணம்தான் அது. அதற்குத் தகுந்த காரணம் போதுமான அவகாசம் இப்பொது இருக்கும்படியான கவுன்ஸிலர்களுக்குக் கொடுக்கப்பட வில்லை. அவர்களுடைய அபிப்பிராயத்தை முதலில் இந்தச் சபை தெரிந்து கொள்வதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்தாகவேண்டும். அவர்களுக்கு இதை அனுப்பி வைத்து அவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்ட பிற்பாடு இதைச் சட்டமாக்கவேண்டும் என்பது என்னுடைய கருத்து. சட்டத்தைச் செய்கிற போதே அதை நல்ல வழியில் செய்தால் மிகவும் திருப்திகரமாக இருக்கும். இங்கேயுள்ள அமைச்சர்கள் எவ்வளவு பொறுப்புடன் நடந்து கொள்கிறார்களோ அவ்வளவு பொறுப்புடன் தான் அங்குள்ள கவுன்சிலர்களும் நடந்து கொண்டு வருகிறார்கள். அவர்களின் பேரில் எந்தவிதமான புகார்களும் கிடையாது. ஆகவே அவர்களுடைய அபிப்பிராயத்தையும் இவ்விஷயத்தில் கலந்து கொள்ளத் தக்க சந்தர்ப்பம் ஒன்றை அளிக்க வேண்டும் என்பதற்காக இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இதை கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதாகவும் கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : I am unable to accept the amendment.

The amendment was put and lost.

Clause 28 was put and carried.

Clause 29 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

[10th September 1958

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I move—

"That the Madras City Municipal (Amendment) Bill, 1958, be passed."

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras City Municipal (Amendment) Bill, 1958, be passed."

SRI A. V. P. ASAITHAMBI : சட்டமன்ற துணைத்தலைவர் அவர்களே, நகராட்சி மன்றத்திலே பெண்களுக்கு என்று ஒரு சில இடங்களை ஒதுக்கினால் நல்லது என்று சொல்லப்பட்ட கருத்துக்கு சர்க்கார் கட்சித் தலைவர் அவர்கள் பெண்களை அவ்வளவு தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதக் கூடாது என்றும், அவர்கள் பொது ஸ்தானங்களிலேயே வருவதற்கு அரசியல் கட்சிகள் உதவி செய்ய முன் வர வேண்டுமென்ற கருத்தை வெளியிட்டார்கள். பொதுவாக பெண்கள் இன்றைய சமுதாயத்தில் தாழ்த்தப்பட்டவர்களாக இருக்கிறார்கள் என்று சொல்லா விட்டாலும் கூட பல ஆண்டு காலமாக பெண்கள் அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருந்த காரணத்தினால் மிகவும் பின்தங்கியவர்களாகவே இன்னமும் இருக்கிறார்கள். சமீப காலம் வரைக்கும் அப்படிப்பட்ட பழக்க வழக்கங்களின் கொடுமை இருந்து வந்திருக்கிறது. தற்போது தான் அதிகமான பெண்கள் படிக்க முன்வந்திருக்கிறார்கள். படிப்புக்கு ஏற்றமாதிரி சமுதாயத்தில் நடந்து கொள்ளவும் முன் வந்துகொண்டிருக்கிறார்கள். இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் கல்வி சம்பந்தப்பட்ட இடமாக இருந்தாலும், நிர்வாக சம்பந்தமான இடமாக இருந்தாலும் அவர்களுக்கென்று சில ஸ்தானங்களை ஒதுக்குவது அவர்கள் இன்னும் அதிகமாக முன்னேறுவதற்கு வழிகோலுவதாகத்தான் ஆகும். இதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் இதற்கு அமைச்சர் அவர்கள் அரசியல் கட்சிகள் பார்த்து பெண் அபேட்சகர்களைப் போடலாம், நாங்கள் கூட காங்கிரஸ் கட்சியின் சார்பில் பெண்களைக் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொல்வது சரியான பரிகாரமாகவோ, சமாதானமாகவோ ஆகாது. ஏனென்றால் நகர சபை போன்ற தேர்தல்களில் அரசியல் கட்சிகள் ஈடுபடாமல் கட்சியின் பேரில் போட்டியிடாமல் இருப்பது நல்லது என்கிற கொள்கையை அடிக்கடி அமைச்சர் அவர்கள் வற்புறுத்தி வந்திருக்கிறார்கள். இதற்காக எல்லாக் கட்சிகளையும் அழைத்து வைத்துப் பேசும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். எனவே இப்போதைக்கு வேண்டுமானால் தப்பிக்கொள்வதற்கு அவர்கள் கூறுகிற சமாதானம் பொருந்துமே தவிர உண்மையில் பெண்களை முன்னேற்றம் அடையச் செய்வதற்குப் பயன்படாது.

ஆதித்திராவிட மக்களுக்கு இன்றையதினம் விசேஷ சலுகை அளிக்கிறோம். காரணம் என்னவென்றால் அவர்கள் நமது சமுதாயத்தில் பல காலமாக அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருந்தவர்கள். ஆகையால் மற்ற சமுதாயத்தினரைப் போல முன்னுக்கு வரமுடியாதவர்களாக இருக்கிறார்கள். அதேமாதிரி பெண்களுக்கும் தனி இடம் ஒதுக்கி வைத்துக் கொடுத்தால் தான் நிச்சயமாக அவர்கள் முன்னேற்றம் அடைய வசதி இருக்கும்.

இரண்டாவதாக சென்னை நகரத்திலிருந்து சட்டமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள உறுப்பினர்களையும் நகராட்சி மன்றத்தில் பங்கு கொள்ள வசதி செய்ய வேண்டும் என்று சொன்னதற்கு இதேமாதிரி மற்ற ஊர்களிலும் கேட்க ஆரம்பித்து விடுவார்கள். இது ஒரு சிக்கலான பிரச்னையாகிவிடும் என்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் உண்மையில் மற்ற மற்ற ஊர்களுடைய நிலைமையும், சென்னை நகரின் நிலைமையும் வேறு வேறு என்பதைத் தங்கள் மூலமாக நான் அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : மூன்றும் வாசிப்பில் இவைகளைப் பற்றியெல்லாம் பேசுவதைக்காட்டிலும் சுருக்கமாகப் பேசும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

10th September 1958]

SRI A. V. P. ASAITHAMBI : உதாரணமாக, கார்ப்பொரேஷன் உறுப்பினர்களாக இருக்கும் சென்னை நகர எம். எல். எக்களுக்கு நகர 4-50 p.m. சபை சம்பந்தப்பட்ட வேலைகள்தான் அதிகமாக இருக்கின்றன அவர்களுடைய சட்டசபைத் தொகுதிகள் சம்பந்தப்பட்ட வேலையே அவர்களுக்குக் கிடையாது. ஆனால் சென்னைக்கு வெளியிலுள்ள தொகுதிகளில் அப்படி இல்லை. விருதுநகரில் சாத்தூர் தொகுதி இருக்கிறது. சாத்தூர் நகர சபை இருக்கிறது. விருதுநகர் நகரசபையும் இருக்கிறது. அந்த நகர சபைகளில் உறுப்பினர்களாக இருக்கும் எம். எல். எக்களுக்கு சட்ட சபை தொகுதி சம்பந்தட்பட்ட வேலையும் இருக்கிறது. நகரசபைத் தொகுதி சம்பந்தப்பட்ட வேலையும் இருக்கிறது. சென்னையைப் பொறுத்தவரையில் சட்டசபை உறுப்பினர்கள் எல்லோரும் கார்ப்பொரேஷனுக்கு உட்பட்ட பகுதிகளில் இருக்கிறார்களே தவிர மற்ற பகுதிகளில் இல்லை.

DEPUTY SPEAKER : அது சம்பந்தப்பட்ட உங்கள் திருத்தத்தை நீங்கள் வாபஸ் வாங்கிய பிறகு, அதைப்பற்றி நீங்கள் பேச வேண்டிய தில்லையே.

I want to know whether the Hon. the Minister for Local Administration wants to say anything in reply.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : No, Sir.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras City Municipal (Amendment) Bill, 1958, be passed."

The motion was put and carried and the Bill was passed.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 9 a.m. tomorrow the 11th September 1958.

The House then adjourned.

## VIII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules, orders and notifications.

117. *Notification issued with G.O. Ms. No.* 2185, *P.W.* (*Electricity*), *dated* 9*th August* 1958, *framing rules under section* 78 (2) (*a*) *of the Electricity* (*Supply*) *Act*, 1948 (*Central Act* 54 *of* 1948).

### B. Reports and other papers.

36. *Statement made by the Hon. Minister for Home regarding the food situation in the State of Madras.*

37. *Third Report* (*Second Assembly*) *of the Committee on Subordinate Legislation.*

38. *Report and Proceedings of the Select Committee on the Madras Industrial Establishments* (*National and Festival Holidays*) *Bill*, 1958 (*L.A. Bill No.* 19 *of* 1958).

39. *The Madras Panchayats Bill*, 1958.

[10th September 1958

APPENDIX I.

[Vide answer to starred question No. 150-J asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 10th September 1958, page 514 supra.]

(*a*) Chocolates and peppermint sweets from neera are being manufactured by the following jaggery manufacturing co-operative societies in the State with the aid of the confectionery machines supplied to them at half cost and with the guidance of the Palm Gur staff appointed by Government :—

| Name of the district. | Name of the jaggery manufacturing co-operative society. |
|---|---|
| Salem .. .. .. | 1 Vengipalayam. |
| | 2 Ernapuram. |
| Ramanathapuram .. | 1 Melathillayandal. |
| | 2 Sivanthipatti. |
| Tanjore .. .. .. | 1 Velanganni. |
| | 2 Vettaikaraniruppur. |
| | 3 Therkkupoyyur. |
| Kanyakumari .. .. | 1 Kasturba Kendran. |
| | 2 The Travancore Palm Products. |
| | 3 The Agasteeswaram Palm Products. |
| | 4 The Monday Market Palm Products. |
| | 5 The Parakkunnu Palm Products. |
| | 6 The Central Palm Gur Co-operative Society. |
| | 7 Vilathara Palm Gur Co-operative Society. |
| Madurai .. .. | Zamburapuram Co-operative Society. |
| Chingleput .. .. | Walajahbad. |

(*b*) It is proposed to introduce the manufacture of chocolates and sweets in the following other jaggery manufacturing co-operative societies during 1958–59 :—

| | |
|---|---|
| Salem .. .. .. | Kullampatti. |
| | Theppanur. |
| | Peddanaickanpalayam. |
| Tanjore .. .. .. | Parpanacheri. |
| | Elumugalur. |
| Tiruchirappalli .. | Srirangam. |
| Tirunelveli .. .. | Idaichivilai. |
| | Paramankurichi. |
| | Vembar. |
| | Vadalivilai. |
| | Palayamchettikulam. |
| | Puliangudi. |
| Chingleput .. .. | Hodgsenpet. |

10th September 1958]

## APPENDIX II.

[Vide answer to starred question No. 150-J asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 10th September 1958, page 515 supra].

| Name of district. | Number of persons sentenced to death. | | Number of persons sentenced to imprisonment for life. | |
|---|---|---|---|---|
| | 1957. | 1958 (*up to April* 1958). | 1957. | 1958 (*up to April* 1958). |
| 1 Coimbatore (includes Nilgiris also). | 24 | 11 | 53 | 10 |
| 2 Tiruchirappalli .. .. .. | 10 | 2 | 8 | 4 |
| 3 Salem .. .. .. .. | 12 | 3 | 25 | 7 |
| 4 Tanjore .. .. .. .. | 7 | 2 | 13 | 3 |
| 5 Madurai .. .. .. .. | 16 | 9 | 37 | 4 |
| 6 South Arcot .. .. .. | 6 | Nil. | 6 | Nil. |
| 7 North Arcot .. .. .. | 2 | 1 | 7 | 6 |
| 8 Chingleput .. .. .. | 1 | 1 | 3 | 2 |
| 9 Madras .. .. .. .. | Nil. | Nil. | 3 | 1 |
| 10 Tirunelveli .. .. .. | 26 | 4 | 21 | 10 |
| 11 Ramanathapuram .. .. | 13 | 5 | 39 | 11 |
| 12 Kanyakumari .. .. .. | 3 | Nil. | 5 | Nil. |
| Total .. | 120 | 38 | 220 | 58 |

## APPENDIX III.

[Vide item VI (1) on page 520 supra.]

# THE MADRAS INDUSTRIAL ESTABLISHMENTS (NATIONAL AND FESTIVAL HOLIDAYS) BILL, 1958 (L.A. BILL No. 19 OF 1958).

### COMPOSITION OF THE SELECT COMMITTEE.

CHAIRMAN.

Hon. Sri R. VENKATARAMAN, *Minister for Industries.*

MEMBERS.

Sri S. A. M. ANNAMALAI.
Sri D. DASARATHAN.
Sri T. T. DANIEL.
Srimathi HEMALATHA DEVI.
Sri V. K. KOTHANDARAMAN.
Sri P. G. KARUTHIRUMAN.
Srimathi RAJATHI KUNJITHAPATHAM.
Sri S. LAZAR.
Sri K. SATTANATHA KARAYALAR.
Sri J. MADA GOWDER.
Sri S. PAKKIRISAMI PILLAI.
Sri P. URKAVALAN.
Sri K. RAMACHANDRAN.
Sri M. P. SARATHY.

[10th September 1958

REPORT OF THE SELECT COMMITTEE ON THE MADRAS INDUSTRIAL ESTABLISHMENTS (NATIONAL AND FESTIVAL HOLIDAYS) BILL, 1958 (L.A. BILL No. 19 OF 1958).

To

THE HONOURABLE THE LEGISLATIVE ASSEMBLY,
MADRAS.

The Select Committee appointed to consider the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958 (L.A. Bill No. 19 of 1958), has the honour to make the following report.

2. The Bill was published in English in Part IV-A of the *Fort St. George Gazette*, dated the 25th June 1958, and in Tamil in the *Fort St. George Gazette*, dated 2nd July 1958.

3. The Select Committee was appointed by a resolution of the Assembly, dated the 3rd September 1958, with direction to the Committee to present the report before the 10th September 1958.

4. The Select Committee met in the Committee Room, Legislators' Hostel (Old), Government Estate, Madras, on the 6th September 1958. The Committee has subjected the clauses of the Bill to a detailed scrutiny and as a result thereof made the following changes in them :—

*Clause* 3.—The proviso to this clause provides that 1st May shall be declared as one of the five festival holidays by the employer if the majority of the employees so desire. As this implies the consent of the employer also, the Select Committee has suitably amended the proviso making it obligatory on the part of the Inspector to prescribe 1st May as one of the five festival holidays under clause 3 if the majority of the employees so desire.

*Clause* 5.—In view of the amendment of the proviso to clause 3, a consequential amendment to the proviso to item 2 in sub-clause 3 has been made.

A copy of the Bill as amended and approved by the Committee is annexed.

The Committee considers that the changes made by it are not of such important character as to require the republication of the Bill.

The dissenting minute given by a member is appended.

R. VENKATARAMAN,
*Chairman.*

FORT ST. GEORGE,
MADRAS-9,
*6th September* 1958.

10th September 1958]

## ANNEXURE.

[*Note.*—The changes made are sidelined or underlined and the portions omitted are indicated by dots].

## L.A. BILL No. 19 OF 1958.

*A Bill to provide for the grant of National and festival holidays to persons employed in industrial establishments in the State of Madras.*

WHEREAS it is expedient to provide for the grant of National and festival holidays to persons employed in industrial establishments in the State of Madras.

BE it enacted in the Ninth Year of the Republic of India as follows :—

1. *Short title, extent and commencement.*—(1) This Act may be called the Madras Industrial Establishments (National and Festival Holidays) Act, 1958.

(2) It extends to the whole of the State of Madras.

(3) It shall come into force on such date as the Government may, by notification, appoint.

2. *Definitions.*—In this Act, unless the context otherwise requires,—

(*a*) "day" means a period of twenty-four hours beginning at midnight;

(*b*) "employee" means—

(i) any person (including an apprentice) employed in any industrial establishment to do any skilled or unskilled, manual, supervisory, technical or clerical work for hire or reward, whether the terms of employment be express or implied ;

(ii) any other person employed in any industrial establishment whom the Government may, by notification, declare to be an employee for the purposes of this Act;

(*c*) "employer" when used in relation to an industrial establishment means a person who has the ultimate control over the affairs of the industrial establishment, and where the affairs of any industrial establishment are entrusted to any other person (whether called a managing agent, manager, superintendent or by any other name) such other person ;

(*d*) "Government" means the State Government:

(*e*) "industrial establishment" means,—

(i) any establishment as defined in clause (6) of section 2 of the Madras Shops and Establishments Act, 1947 (Madras Act XXXVI of 1947);

(ii) any factory as defined in clause (*m*) of section 2 of the Factories Act, 1948 (Central Act LXIII of 1948), or any place which is deemed to be a factory under sub-section (2) of section 85 of that Act;

(iii) any plantation as defined in clause (*f*) of section 2 of the Plantations Labour Act, 1951 (Central Act LXIX of 1951);

[10th September 1958

(iv) any other establishment which the Government may, by notification, declare to be an industrial establishment for the purposes of this Act;

(*f*) "Inspector" means an Inspector appointed under sub-section (1) of section 6;

(*g*) "wages" means all remuneration capable of being expressed in terms of money, which would, if the terms of employment, express or implied, were fulfilled, be payable to an employee in respect of his employment or of the work done by him in such employment, and includes—

(i) such allowances (including dearness allowance) as the employee is for the time being entitled to;

(ii) the value of any house accommodation; or of supply of light, water, medical attendance or other amenity or of any service or of any concessional supply of foodgrains or other articles;

but does not include—

(*a*) any bonus;

(*b*) any contribution paid or payable by the employer to any pension fund or provident fund, or for the benefit of the employee under any law for the time being in force;

(*c*) any gratuity payable on the termination of his service;

(*d*) any sum paid to the employee to defray special expenses entailed on him by the nature of his employment;

(*e*) any travelling concession.

3. *Grant of National and festival holidays.*—Every employee shall be allowed in each calendar year a holiday of one whole day on the 26th January and the 15th August and five other holidays each of one whole day for such festivals as the Inspector may, in consultation with the employer and the employees, specify in respect of any industrial establishment:

Provided that, if the majority of the employees so desire . . . the 1st May shall be one of the five festival holidays aforesaid.

4. *Employer to send statement to Inspector.*—Every employer shall send to the Inspector having jurisdiction over the area in which the industrial establishment is situated, and display in the premises of the industrial establishment, a statement showing the holidays allowed in each calendar year under section 3, in such form, within such time and in such manner as may be prescribed.

5. *Wages.*—(1) Notwithstanding any contract to the contrary, every employee shall be paid wages for each of the holidays allowed to him under section 3.

(2) Where an employee works on any holiday allowed under section 3, he shall, at his option, be entitled to—

(*a*) twice the wages; or

(*b*) wages for such day and to avail himself of a substituted holiday with wages on any other day.

10th September 1958]

(3) Notwithstanding anything contained in sub-section (1) or sub-section (2), an employee who is paid wages by the day or at piece rates shall be entitled to be paid wages for any holiday allowed under section 3—

(i) only at a rate equivalent to the daily average of his wages for the days on which he actually worked during the week immediately preceding such holiday;

(ii) where he works on any such holiday, only at twice the rate mentioned in clause (i), or in lieu thereof, at the rate mentioned in that clause and to avail himself of a substituted holiday with wages at that rate on any other day:

Provided that no such employee shall be entitled to be paid any wages for any of the . . . holidays . . . . . . . . allowed under section 3, other than the 26th January and the 15th August, if he has not completed a period of thirty days' continuous service immediately preceding such holiday.

*Explanation.*—For the purpose of this proviso, a weekly or any other holiday or authorized leave availed of by an employee shall be included in computing the period of thirty days mentioned therein.

6. *Inspectors.*—(1) The Government may, by notification, appoint such persons or such class of persons as they think fit to be Inspectors for the purposes of this Act for such local limits as the Government may specify.

(2) Every Inspector shall be deemed to be a public servant within the meaning of section 21 of the Indian Penal Code (Central Act XLV of 1860).

7. *Powers of Inspectors.*—Subject to any rules made by the Government in this behalf, an Inspector may, within the local limits for which he is appointed,—

(*a*) enter, at all reasonable times and with such assistants, if any, who are persons in the service of the Government or of any local authority as he thinks fit to take with him, any place which is, or which has reason to believe is, an industrial establishment;

(*b*) make such examination of the premises and of any prescribed registers, records and notices and take on the spot or otherwise, the evidence of such person as he may deem necessary for carrying out the purposes of this Act;

(*c*) exercise such other powers as may be necessary for carrying out the purposes of this Act:

Provided that no one shall be required under this section to answer any question or give any evidence tending to incriminate himself.

8. *Penalties.*—Any employer who contravenes any of the provisions of section 3 or section 5 shall be punishable with fine which for the first offence, may extend to twenty-five rupees and for a second and subsequent offences may extend to two hundred and fifty rupees.

9. *Penalty for obstructing Inspector.*—Whoever wilfully obstructs an Inspector in the exercise of any power conferred on him by or under this Act, or fails to produce on demand in writing by an Inspector any register, record or notice in his custody which may be required to be kept in pursuance of this Act or of any rule made thereunder, shall be punishable with imprisonment for a term which may extend to three months or with fine which may extend to five hundred rupees or with both.

10. *Exemptions.*—(1) Nothing contained in this Act shall apply to—

(*a*) any employee in a position of management;

(*b*) any employee whose work involves travelling;

(*c*) any industrial establishment under the control of the Central or any State Government, local authority, Reserve Bank of India, a railway administration operating any railway as defined in clause (20) of Article 366 of the Constitution or a cantonment authority; or

(*d*) any mine or oil field.

(2) The Government may, by notification, exempt either permanently or for any specified period any establishment or class of establishments, or person or class of persons from all or any of the provisions of this Act, subject to such conditions as the Government may deem fit.

11. *Rights and privileges under other laws, etc., not affected.*—Nothing contained in this Act shall affect any rights or privileges which any employee is entitled to, on the date on which this Act comes into force under any other law, contract, custom or usage, if such rights or privileges are more favourable to him than those to which he would be entitled under this Act.

12. *Power to make rules.*—(1) The Government may, by notification, make rules for the purpose of carrying into effect the provisions of this Act.

(2) In making a rule under this Act, the Government may provide that a contravention thereof shall be punishable with fine which may extend to fifty rupees.

(3) All rules made under this Act shall, as soon as possible after they are made, be placed on the table of both the Houses of the Legislature and shall be subject to such modifications by way of amendment or repeal as the Legislative Assembly may make within fourteen days on which it actually sits either in the same session or in more than one session.

T. HANUMANTHAPPA,
*Secretary to the State Legislature.*

FORT ST. GEORGE,
MADRAS-9,
*6th September* 1958.

10th September 1958]

# APPENDIX.

## DISSENTING MINUTE.

மத்திய சர்க்காரால் திட்டமிடப்பட்டுள்ள இரண்டாவது ஐந்தாண்டு அறிக்கையில் தொழிலாளர் நலன் சம்பந்தப்பட்ட கொள்கையில், சர்க்கார் நிறுவனங்களிலும், தனிநபர் நிறுவனங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்களிடையே ஏற்றத் தாழ்வுகள் அகற்றப்படவேண்டும் என்றும்—அதற்கு இடமளிக்கக் கூடாதென்றும், சர்க்கார் நிறுவனங்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள் இதற்கு எடுத்துக்காட்டாக இருக்கவேண்டுமென்றும் சொல்லி இருக்கிறது.

ஆனால் இப்போது கொண்டுவரப்படும் விடுமுறை பில்லில், சர்க்கார் நிறுவனங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு விதி விலக்கு கொடுக்க வேண்டுமென்று இருப்பது சரியல்ல. பல சிறிய தொழிற்சாலைகளில் பதிநான்கு நாட்கள் பண்டிகை நாட்கள் விடுமுறை ஏற்கெனவே பல ஆண்டு காலமாக கொடுத்துவரப்படுகிறது. ஷாப் சட்டப்படி முப்பத்திஆறு தினங்கள் கொடுக்கப்படுகிறது. ஆகையால் ஏழு தினங்களுக்குப் பதிலாக குறைந்தது பத்து தினங்களாவது கொடுக்கப்படவேண்டும்.

நமது ராஜ்யம் " சென்னை ராஜ்யம் " என்று சொல்லப்படுகிற தமிழ் நாடு ராஜ்யம் ஆகையாலும், எல்லா நடவடிக்கைகளையும் தமிழிலேயே நடத்தப்படவேண்டுமென்று ஏகமனதாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளதாலும், தமிழ் வளர்ச்சி ஏற்படவேண்டுமென்பது எல்லோருடைய நோக்கமாக இருப்பதாலும், தமிழ் நாட்டிலுள்ள எல்லா மக்களிடையேயும் தமிழ் உணர்ச்சி ஏற்படவேண்டுமாகையாலும் தமிழ் வருடப் பிறப்பு தினத்தை—ஒரு தேசீய தினமாக கருதி விடுமுறை அளிக்கப்படவேண்டும்.

முன் மாதத்தில் முப்பது தினங்கள் வேலை செய்திருக்கவேண்டுமென்று இருப்பது விடுமுறை எடுக்க முடியாத அளவுக்கு பாதிக்குமாகையால் அதற்கு பதிலாக இருபது தினங்கள் என்று போடுவது நல்லதென என்னுடைய அபிப்பிராயத்தை வற்புறுத்தி தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

V. K. KOTHANDARAMAN.

MADRAS,
9th September 1958.